

தீபங்கள்

12 புள்ளி - வரை

-செந்தமிழ்ச் செல்வன்

பட்டாசுக் கோலம்

13-லிருந்து 5 வரை

-ரா. சிவகாமி




நவம்பர் '83



அன்பார்ந்த
வாசக, வாசகியருக்கு,

மங்கையர் மலர்
சார்பில் மகிழ்ச்சிகரமான
தீபாவளி வாழ்த்துக்கள்!



அட்டை வண்ணப்படம்: பி. சு. ரமணன்

சந்தா விவரம்

தனிப்பிரதி ரூ. 2-00
ஆண்டுச் சந்தா ரூ. 24/-
ஆறு மாத சந்தா ரூ. 12/-

Edited, Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: Manjula Ramesh

முதல் பரிசு: 'கோபி' மிக்ஸி பெறும் கட்டுரை



# காத்திருக்கிறேன், நம்பிக்கையோடு!

இராமேஸ்வரத்தில் என் தந்தைவழிப் பாட்டனார் செல்வாக்கோடு வாழ்ந்தவர். என்ன காரணமோ, என் தந்தை தலையெடுத்தபொழுது குடும்பம் ''மெழுகித் துடைத்த தரையாகி'' விட்டது என்று என் தாய் அங்கலாய்ப்பார். நான்கு ஆண்களுக்கு மத்தியில், ஒரே ஒரு பெண்ணாக அதுவும் கடைக்குட்டியாக அவதரித்தேன். இரண்டு வயதை நான் எட்டிப் பிடிப்பதற்குள் ''மூளைக்கட்டி நோயா''ல் (ப்ரெய்ன் டியூமர்) பாதிக்கப்பட்டு என் தந்தை இறைவனடி சேர்ந்தார். அப்போது என் மூத்த அண்ணனுக்கு வயது 18. இண்டர்மீடியட் (எஃப்–ஏ) படித்துக் கொண்டிருந்தவன் குடும்ப நிர்ப்பந்தம் காரணமாக படிப்பைப் பாதியில் விட்டு விட்டு, சர்வீஸ் கமிஷன் மூலம் அரசாங்க உத்தியோகத்தில் அமர்ந்தான்.

''குருவித் தலையில் பனங்காயை வைத்தது'' போல், நான், என் தாய், மற்றும் மூன்று சகோதரர்களும் அவருடைய பராமரிப்பில், சம்பாத்தியத்தில் உயிர் வாழ்ந்தோம். திருமணம் பேச ஆரம்பித்தனர். மன்னி எங்கள் வீட்டிற்கு வந்த ஓராண்டு, குடும்பம் மிகவும் மகிழ்ச்சியாகவே ஓடியது. எங்கள் குடும்பத்தில் வேறு நபர் எனினும் என்னைப் பொறுத்த மட்டில், என் தாய்க்கு அடுத்த ஸ்தானத்திலேயே அவள் இடம் பெற்றாள். எங்களுக்குள் 'ஒற்றுமை' என்றால் அப்படி ஓர் ஒற்றுமை.

''எந்தப் பாவியின் கண் பட்டதோ? சரியாக மணமாகி ஓராண்டு முடிந்ததும் அண்ணாவிற்கு வெளியூர் மாற்றலாகியது. அண்ணாவும் மன்னியும் தனிக்குடித்தனம் செய்ய வேண்டிய நிலை. குடும்பத்தில் கண்ணுக்குத் தெரியாத விரிசல் விழுந்தது. இந்த இடைக்காலத்தில் மூன்றாவது அண்ணாவுக்குத் ''தெற்கத்திக் கலை'' என்னும் நோய் பாதித்து வலது கை, கால், நாக்கு, முகம் ஆகியவை சற்று உள்ளிழுத்துக் கொள்ளவே, படித்த படிப்பைப் பாதியில் விட்டு நடைப்பிணமானான். நான்காவது அண்ணனோ படிப்பில் சிறிதும் அக்கறையின்றி தினமும் ஒரு சினிமாவாக நாட்களை ஓட்டினான்.

இந்தக் கோலத்தில் என் கதையும் தனிக்கதையாக ஆரம்பித்தது. ஒருநாள் பள்ளி மைதானத்தில் குவித்து வைத்த மணலில் விளையாடிக் கொண்டிருந்த பொழுது, ஏதோ ஒன்று சுரீரென்று காலில் கடித்துவிட்டது. விளையாட்டு மும்முரத்தில் ஏதும் தெரியவில்லை. வீட்டிற்கு வந்ததும், கடிபட்ட இடம் தடித்து உடல் முழுவதும் வியர்வை பொங்கலாயிற்று. அம்மாவிடம் சொன்னேன். கடிவாயில் சுண்ணாம்பை வைத்து, ஸ்வாமியை வேண்டிக் கொண்டு நெற்றியில் விபூதி இட்டாள். அவளால் இவ்வளவுதான் செய்யமுடியும்!

மறுநாள் காலைப் பொழுது விடிந்ததும் பார்த்தால்முகம் — கை–கால் எல்லாம் வெள்ளரிப் பழமாக வீங்கி வியர்த்து இருந்தது. ஆஸ்பத்திரிக்குச் சென்றோம். ''விஷக்கடி'' என்று சொல்லி பல்வேறு மூலிகைச் சாறுகள் அடங்கிய கஷாயத்தைத்தந்து குடிக்கச் சொன்னார்கள். கூடவே ஒரு நல்ல

மாந்த்ரீகனிடம் சொல்லி மந்திரிக்கவும் சொன்னார்கள். வீக்கம் வற்ற பத்து நாள் ஆயிற்று. எனினும் என்னிடம் இருந்த ஊக்கம், உற்சாகம், துள்ளல் எல்லாம் படிப்படியாகக் குறைந்து எப்போதும் ''உட்கார்ந்தால் தேவலாம்'' என்று தோன்ற ஆரம்பித்து விட்டது. பள்ளிப்படிப்பிலே முதலாவதாக நின்ற நான் மெள்ள மெள்ள எட்டாவது இடத்திற்குத் தள்ளப்பட்டேன். ஆறு மாதங்களுக்கு ஒரு முறை உடம்பு வீங்குவதும், பிறகு வற்றுவதும் சர்வ சகஜமாகி விட்டது. போதாக் குறைக்கு,மாதவிடாய்க் காலங்களில் சொல்ல முடியாத வயிற்று வேதனை ஏற்பட்டுப் புழுவாகநெளிவேன்.

இரண்டாவது அண்ணாவிற்கும் திருமணமாயிற்று. குடும்பத்தில் எதிர்பார்த்த ஒற்றுமை நிலவவில்லை. பெரிய அண்ணா ''சம்சாரி'' ஆனார். எனவே அவருடைய பொருள் உதவி குறையலாயிற்று. என்னுடைய படிப்பு பி. யூ. ஸி. யைத் தாண்டவில்லை. என் உடல்நிலை பொருட்டு எழுந்த ஓர் நாள் சண்டையில் என் இரண்டாவது அண்ணனும் 'தனிக் குடித்தனம்' போய்விட்டார். எஞ்சியது நாங்கள் நான்குபேர். கைகால் ஸ்வாதீனமில்லாத மூன்றாவது அண்ணன். ஒவ்வொரு வகுப்பிலும் மூன்று ஆண்டுகள் தங்கி எவ்வளவோ முயன்றும் எஸ். எஸ். எல். ஸி. கூடத் தேற முடியாத நிலையில் நான்காவது அண்ணன். மூத்த அண்ணாவிடம் போகலாம் என்றால், அங்கே எங்களைக் கூறு போட்டு, எந்த அண்ணாவிடம் யார், யார் இருப்பது என்று பாகம் பிரித்தார்கள்.

இளைய அண்ணாவோ, ''உள்ளூரில் இருந்தால்தானே இந்த வம்பு'': என்று சொல்லி தானே வலிய எழுதிக் கொடுத்து விட்டு வேற்றூருக்கு மாற்றல் வாங்கிச் சென்று விட்டார். எந்த அண்ணன்மார்கள் என்னைத் தோளிலும் முதுகிலும் தூக்கிச் சுமந்து ஒரு காலத்தில் அன்புமாரி பொழிந்தார்களோ அந்த அண்ணன்மாரே ''உப்பு மூட்டை'' இறக்குவது போல் என்னை இறக்கி விட்டுச் சென்றபொழுது என் மனம் அடைந்த வேதனையைச் சொல்லி மாளாது.

நான் படித்த தட்டெழுத்தும், சுருக்கெழுத்தும் கைகொடுத்தது. ஒரு தனியார் நிறுவனத்தில் (கெமிகல் ஃபெர்டிலைசர்ஸ்) கிளார்க் கம் டைப்பிஸ்ட்டாக பணியில் அமர்ந்தேன். ஓர் எளிய வீட்டில் வாடகையில் வாசம். ''சிரிப்பார் கண்முன்னே இடறி விழுந்தாற்போல்'' ஒருநாள் திடீரென்று என் தாயாரும் பக்கவாதத்தில் பாதிக்கப்பட்டு படுக்கையில் வீழ்ந்தார். ''ஏழைக் குடும்பம் ராஜ வைத்யம்'' என்பார்கள். என் கம்பெனியில் என்னென்ன வகையில் எல்லாம் கடன் பெற முடியுமோ அவ்வளவையும் பெற்று சிகிச்சை செய்தேன். ஒரு மாறுதலும் இல்லை.

வீட்டிற்குள்ளேயே தன் ''பிருஷ்ட பாகத்தால்'' நகர்ந்து நகர்ந்து இன்று தன் தேவையைத் தானே கவனித்துக் கொள்ளும் தாய், வாயில் ஒழுகும் ''ஜொள்ளு''வைக் கூடத் துடைக்கத் தெரியாமல் மலங்க மலங்க விழிக்கும் என் மூன்றாவது அண்ணன், பங்குனி – சித்திரை – புரட்டாசி– தை மாதங்களில் நடைபெறுகின்ற திருமண வைபவங்களை ஒட்டித் தன் சம்பாத்தியத்தை முடித்துக் கொள்ளும் நான்காவது அண்ணன். இத்தகைய கொடுமைகளுக்கு மத்தியில் என்னைப் படுத்துகின்ற உடல் உபாதைகள். இவற்றையெல்லாம், தாங்கிக் கொண்டு நானும் வாழ்கிறேன்.

ஒரு ''சுமங்கலி மாமி'' எங்கள் குடும்பத்தின் மீது பற்றுக் கொண்டவர், சொல்கிறார்: ''உனக்குத் திருமணமானால் உன்னைப் பிடித்துள்ள நோய்கள் வந்த சுவடு தெரியாமல் போய்விடுமென !'' அதையே வேத வாக்காக நம்பி, ஈஸ்வர கிருபையை எதிர்நோக்கி நிற்கிறேன். ''வறுமையிலே உழல்பவரானாலும், பரந்த மனப்பான்மை உள்ளவராக என் தாயையும், என் அண்ணனையும் வெறுத்து ஒதுக்காதவராக மனிதாபிமான உணர்வை உள்ளத்தில் நிறைத்திருப்பவராக, ஒருவர் எனக்கு என்று வாய்க்கிறாரோ அன்றுதான் ''என் திருமணம்''. இதுவரை நான் வாழும் வாழ்க்கைக்கு அதுவே திருப்புமுனை.

மதுரை

**வஸந்தா**

### பிரசுரிக்கத் தேர்ந்தெடுக்கப்பட்ட கட்டுரை

## உற்றார் யார், உறவினர் யார்?

**து**ன்பம் என்றால் என்னவென்றே அறியாமல் தந்தையால் அருமையாக வளர்க்கப்பட்ட எனக்கு, திருமணம் அனுபவம் என்னும் படிக்கட்டுகளை எதிரே விரித்தன.

என் கணவர் தன் தங்கைகளின் திருமணத்துக்காக ஏகப்பட்ட கடன்களை வாங்கினார். தந்தை எனக்குச் செய்திருந்த அறுபது பவுன் நகைகளையும் அடகு வைத்துப் பணம் பெற்றார். தான் வைத்திருந்த ஸ்கூட்டர், தன் தொழிலின் மூலதனப் பொருட்கள் ஆகியவற்றின் பேரிலும் கடன் பெற்றார். தாயின் பிடிவாதம் காரணமாக இரு தங்கைகளின் திருமணத்தையும் ஒரே நாளில், ஒரே முகூர்த்தத்தில் நடத்தினார். திருமணம் முடிந்தது. கடன்கள், டவர்கட், மூலதன முடக்கம் மற்றும் பல காரணங்களால் என் கணவரின் தொழில் நொடித்துப் போனது. விரைவில் தொழில் படுநாசமடைந்து நிறுவனம் மூடப்பட்டது.

இதனிடையே நான் ஆஸ்த்மாவினால் பாதிக்கப்பட்டு தொல்லைப்பட்டு வந்தேன். இரண்டு மாதங்கள் கடுமையாக பாதிக்கப்பட்டு சிறிது மீண்ட நிலையில் என் தங்கையின் திருமணம் வந்தது. திருமணத்துக்குச் சென்றேன்.

என் தாயார் இயற்கையில் மிகவும் அமைதியானவர். அன்பானவர். பண்பு நிறைந்தவர். அப்படிப்பட்ட அவர், என்னைத் திருமணத்தில் கலந்து கொள்ளவே அனுமதிக்கவில்லை. ''நீ பேசாமல் குழந்தைகளைப் பார்த்துக் கொண்டு வீட்டோடு இரு'', என்றார். இது எனக்கு மிகுந்த வியப்பாகவும், அதிர்ச்சியாகவும் இருந்தது. ஆனால் சிந்தித்தேன். பிறகு புரிந்தது. என் தாய், சகோதரிகள் கணக்குப்படி எனக்குத் தற்போது தேவையான அந்தஸ்து இல்லையாம், அவர்கள் திருமணத்தில் கலந்து கொள்வதற்கும், அவர்கள் வீட்டுக்குச் செல்வதற்கும். உண்மைதான். சிந்தித்தேன். சிரித்தேன். ஏனெனில் யார் காரணமாக நான் எல்லா சுகங்களையும், நகைகளையும் இழந்தேனோ அவர்கள் இத்திருமணத்தில் கலந்து கொள்ளத் தகுதியானவர்களாக அங்கீகரிக்கப்பட்டார்கள். ஏனெனில், அவர்கள் பட்டாடைகளும், நகைகளுமாய் வந்திருந்தனர்.

நானோ பழைய பட்டுப்புடவையும், கழுத்தில் மஞ்சள் கயிறும், கையில் பல்லை இளித்த கவரிங் வளையல்களும், காதில் ஒரே ஒரு கம்மலுமாய்ச் சென்றிருந்தேன்.

தாய் யார், தந்தை யார், சகோதரி யார், சகோதரன் யார், கணவன் யார், பெற்ற பிள்ளைகள் யார், யாரும் யாருக்கும் இல்லை. உறவே உனக்கு ஒரு கும்பிடு. இப்படி முடிவெடுத்து திருமணம் நடந்து முடிந்த மறுநாளே திரும்பினேன்.

எனக்கு இது மாபெரும் அதிர்ச்சி. நகைகளை இழந்ததைக் கூட நான் பெரிதாக நினைக்காமல் மனதை சமாதானப் படுத்திக் கொண்டு எவ்வளவோ காலமாயிற்று. ஆனால் இந்த அவமதிப்பு என்னைச் சுட்டெரித்தது. மனவேதனையால் முன்பே ஆஸ்த்மா நோயாளியாக இருந்த நான், பலமான தாக்குதல்களுக்கு ஆளானேன். கடுமையான நோயின் பிடியில் துவண்டு தத்தளித்தேன்.

இரவெல்லாம் இருமலும் இளைப்புமாய்த் தூங்காமல் அவதிப்பட்டாலும், காலையில் என் கடமைகளை நான் செய்தே ஆகவேண்டும். குழந்தைகளைக் கவனித்து பள்ளிக்கு அனுப்பவும் வேண்டும். சமையல், துவைத்தல், பாத்திரம் துலக்குதல், இன்னும் மாலையில் குழந்தைகளின் பாடங்களைக் கவனித்தல் ஆகியவற்றையும் செய்தே ஆக வேண்டும்.

மாத்திரைகளை வாயில் இட்டு வெந்நீர் ஊற்றி விழுங்கி விட்டுப் பாடங்களைச் சொல்லித் தர ஆரம்பிப்பேன். அப்படியே டாக்டரிடம் தடுமாறிக் கொண்டு போவேன். என்னைப் பார்த்ததும் முதலில் இஞ்செக்ஷன் கொடுப்பார் டாக்டர். அடுப்பில் குக்கரில் சாதம் வெந்து கொண்டிருக்கும். இல்லாவிட்டால் துவைத்த துணிகள் வாளியில் போட்டபடி இருக்க, டாக்டரின் கருணையைத் தேடிப் போவேன்.

இப்படிப்பட்ட நிலையில் இருந்த நான், ஆச்சரியப்படத் தக்க விதத்தில் நோயிலிருந்து மீண்டு வருகிறேன். மருந்தே என் உணவு என்று இருந்த நான், இப்போது மருந்தின் அளவைக் குறைத்துக் கொண்டு வருகிறேன்.

இப்போது வாழ்க்கையை ஒரு சவாலாக ஏற்றுக் கொண்டு விட்டேன். இதுவரை நான் அடைந்த தோல்விகளுக்கு யாரையும் காரணமாக்க மாட்டேன். இனிமேல் நான் வாழ்க்கையில் வெற்றிகளைச் சந்தித்தே தீருவேன் என்ற இடமான முடிவே, என் திருப்புமுனை.

என் வாழ்வின் வெற்றி தோல்விகள் என் கையில் தான் இருக்கின்றன என உணர்கிறேன், இதனை உணர வைத்தது என் அருமைத் தம்பியும், "STAY ALIVE ALL YOUR LIFE" என்ற புத்தகமும்தான்.

என் முன்னேற்றத்துக்குக் காரணமான முக்கியமான வரிகள், அப்புத்தகத்தில் இருந்து.

''வாழ்க்கையில் நமக்கு என்ன நேரிடுகிறது என்பது முக்கியமல்ல. நாம் அதற்கு எப்படி ரியாக்ட் செய்கிறோம் என்பதுதான் முக்கியமான விஷயம்.''

**ஆர். விஜயலட்சுமி** சென்னை

(இன்னும் வரும்)

"ஜெயிலுக்குப் போனால் உங்களுக்குச் சரியான சாப்பாடு கிடைக்காது. கிடைக்கிற சாப்பாடும் போதுமானதாக இருக்காது. சிறைத் துணிகளைத்தான் நீங்கள் அணிய வேண்டியிருக்கும். நிச்சயம் அவை உங்களுக்குச் சௌகரியமாக இருக்காது. உங்களுக்குக் கடுமையான வேலைகள் கொடுப்பார்கள். அதைச் சரியாகச் செய்யா விட்டால் வார்டர்கள் உங்களைத் திட்டுவார்கள். அடித்தாலும் அடிப்பார்கள். இன்னும், படுக்கை, குளிப்பு, பாத்ரூம் வசதிகள் எல்லாமே மோசமாக இருக்கும். வாயிலெடுக்கக் கூட வரும். இவ்வளவையும் நீங்கள் சகித்துக் கொள்ள முடியுமா என்பதை யோசியுங்கள்.

வருஷம் 1913.

இடம்: தென் ஆப்பிரிக்காவில் உள்ள டால்ஸ்டாய் பண்ணை.

பேசியவர் காந்திஜி.

எதிரே நின்ற பன்னிரண்டு பெண்களில் பதினொரு பேர் தமிழ்ப் பெண்கள். பாதிப் பேருக்குக் கையில் குழந்தைகள்! சிலர் கர்ப்பிணிகள்! இரண்டுபேர் திருமணமாகாதவர்கள். அந்தப் பெண்மணிகளில் யாரும் கலங்க



வில்லை. ''நாங்கள் எந்தக் கஷ்டங்களுக்கும் பயப்படவில்லை. காந்திஜி! அநீதியை எதிர்க்க நாங்கள் என்ன தியாகமும் செய்யத் தயார்'' என்றார்கள்.

அந்த வீராங்கனைகளின் பெயர்கள்:

1. திருமதி தம்பி நாயுடு
2. திருமதி என். பிள்ளை
3. திருமதி கே. முருகேச பிள்ளை
4. திருமதி ஏ. பெருமாள் நாயுடு
5. திருமதி பி. கே. நாயுடு
6. திருமதி கே. சின்னசுவாமி பிள்ளை
7. திருமதி என். எஸ். பிள்ளை
8. திருமதி ஆர். ஏ. முதலியார்
9. குமாரி மீனாட்சி பிள்ளை

# வழிகாட்டும் பெண்மணிகள்-1



10. குமாரி பைகும் முருகேச பிள்ளை
11. திருமதி பவானி தயாள்.

காந்திஜிக்கு மகிழ்ச்சி! இருந்தாலும் கவலை இருந்தது. இதுவரை அவர் புதிதாக ஆரம்பித்த அந்த சத்தியாக்கிரகம் என்னும் போராட்டத்தில் பெண்களைச் சேர்த்துக் கொள்ளவில்லை. ஆண்கள்தான் பங்கெடுத்திருக்கிறார்கள். பலன்களை அனுபவித்திருக்கிறார்கள். அடி, உதை, ஜெயில் எல்லாம் அவர்களுக்குச் சாதாரணமாகி விட்டது. ஆனால் பெண்கள் இவைகளைத் தாங்குவார்களா?

மனம் கலக்கம் அடைந்தாலும் பெண்களை நிச்சயம் இதில் சேர்த்துக் கொள்ள விரும்பினார்.

காரணம் இருந்தது.

அவர் எதிர்க்கப் போகும் சட்டம் பெண்களைத்தான் அதிகம் பாதிக்கக்கூடிய சட்டம்.

ஏதோ ஒரு கேஸ் ஆப்பிரிக்க சுப்ரீம் கோர்ட்டுக்குப் போக, அது கிறிஸ்துவச் சடங்குகளோடு நடத்தப்படும் திருமணம் தான் சட்டரீதியானது. மற்றவை சட்டத்திற்குப் புறம்பானவை என்று தீர்ப்புக் கொடுத்து விட்டது.

இந்தத் தீர்ப்பினால் இந்தியர்கள்தான் நிறையப் பாதிக்கப்படுவார்கள்.

இந்தத் தீர்ப்பினால் எல்லா இந்து, முஸ்லீம், பார்ஸி திருமணங்களும் பாதிக்கப்படும்.

இந்தத் தீர்ப்பு வந்ததும் காந்திஜி உடனே ஆப்பிரிக்க அரசாங்கத்துக்குக் கடிதம் எழுதிப் பார்த்தார்.

அவர்களிடமிருந்து நியாயம் கிடைக்கவில்லை.

எனவே இனி அவரது புதுக் கண்டுபிடிப்பான சத்தியாக்கிரகம்தான் அவரது ஒரே ஆயுதம். அதை அவர் உபயோகப்படுத்த வேண்டியதுதான்.

பெண்கள் தயார் ஆனதும் காந்திஜிக்கு இன்னொரு பிரச்னை நினைவுக்கு வந்தது.

ஆப்பிரிக்க அரசாங்கம் அவரது சத்தியாக்கிரகத்தை நன்றாகப் புரிந்துகொண்டு விட்டது.

சத்தியாக்கிரகிகளின் ஒரே லட்சியம் சிறைக்குப் போவதுதான் என்று அறிந்திருந்தது.

ஆகவே சத்தியாக்கிரகம் செய்யும்போது அவர்களைக் கைது செய்யாமல் அப்படியே

விட்டு விட்டால் அவர்களது லட்சியம் நிறைவேறாது என்று நினைத்தார்கள்.

இந்தக் காரணத்தால் பல இடங்களில் சட்டம் மீறுபவர்களை எதுவும் செய்யாமல் சும்மா விட்டு வந்தார்கள்.

இது காந்திஜிக்குப் பிரச்னையைக் கொடுத்தது.

அவரது சத்தியாக்கிரகம் பலன் அளிக்க வேண்டுமானால், சத்தியாக்கிரகிகள் சிறைக்குப் போக வேண்டும்.

அப்போதுதான் பொதுமக்களின் மனங்கள் தூண்டப்படும். அவர்கள் ஏகோபித்து எழுவார்கள். சத்தியாக்கிரகிகளுக்குத் தங்கள் ஆதரவைத் தருவார்கள். முடிவில் அரசாங்கம் வேறு எதுவும் செய்ய முடியாமல் சத்தியாக்கிரகிகளின் விருப்பங்களை நிறைவேற்ற வருவார்கள்.

இதற்கு மாறாக, அரசாங்கம் யாரையும் கைது செய்யவில்லை என்றால் எல்லாமே வீணாகப் போய்விடும்.

காந்திஜி யோசித்தார்.

இதற்கு என்ன செய்வது?

ஒரு வழி தென்பட்டது.

நேட்டாலில் நியூ காஸில் என்னும் இடத்தில் நிலக்கரிச் சுரங்கங்கள் இருந்தன.

இவற்றில் இந்தியத் தொழிலாளிகள் தான் உழைத்தார்கள்.

---

**காய்கறிகளை கழுவும் பொழுது அதிக நேரம் நீரில் ஊறவைப்பதால் தாது உப்புகளும், வைட்டமின்களும் அழிந்து விடுகின்றன. அதனால் முழு காய்கறிகளை அரிவதற்கு சற்று முன்புதான் சீக்கிரம் கழுவி எடுக்க வேண்டும்.**

---

இவர்கள் எல்லோரையும் வேலை நிறுத்தம் செய்ய வைத்தால் என்ன?

இதற்காகப் பெண் சத்தியாக்கிரகிகளைப் பயன்படுத்தினால் என்ன?

வேலைநிறுத்தம் செய்யும்படி அவர்களை இந்தப் பெண்கள் தூண்டி விட்டால், அரசாங்கம் நிச்சயம் இந்தப் பெண்களைக் கைது செய்வார்கள். அது போதும் காந்திஜிக்கு! ஊரே அமர்க்களப்படும். செய்திகள் தீப் போலப் பரவி எங்கும் அரசாங்கத்துக்கு எதிராகக் கண்டனங்கள் கிளம்பும்.

சரி, வேலை நிறுத்தத்தைத் தூண்டிவிடுவது எப்படி? அதற்கு ஒரு காரணம் வேண்டாமா?

கைவசமாக ஒரு காரணமும் கிடைத்தது. இந்தியத் தொழிலாளி மீது ஒரு மூன்று பவுன் அநியாய வரி விதிக்கப்பட்டிருந்தது.

இந்தியர்கள் மட்டும் இதில் பாதிக்கப்பட்டவர்கள்.

இதை எதிர்த்து வேலை நிறுத்தத்தைத் தூண்டிவிட்டால் போகிறது.

இதையெல்லாம் பெண் சத்தியாக்கிரகிகளிடம் காந்திஜி கூறினார். எல்லோரும் அதை ஆமோதித்தார்கள்.

விஷயம் ரகசியமாக மற்ற பெண்களுக்கும் பரவ அவர்களும் இந்த சத்தியாக்கிரகத்தில் கலக்க முன்வந்தார்கள்.

குறித்த நாளில் சத்தியாக்கிரகம் ஆரம்பித்தது.

பெண் சத்தியாக்கிரகிகள் நியூகாஸிலுக்குப் போனார்கள்.

தங்கள் திட்டப்படியே சுரங்கத் தொழிலாளிகளிடம் அவர்கள் வேலை நிறுத்த பிரசாரத்தைத் தொடங்கினார்கள். மூன்று பவுன் வரியை வெகுவாகத் தாக்கிப் பேசினார்கள்.

சுரங்கத் தொழிலாளிகளில் பெரும்பாலோர் தமிழர்கள்தான்! அதனால் தமிழ்ப் பெண் சத்தியாக்கிரகிகள் அவர்களிடையே மிகச் சரளமாகவும் சகோதர பாவத்துடனும் பிரசாரம் செய்ய முடிந்தது.

பலன்!

அந்தச் சுரங்க நகரம் முழுவதும் தீப்பிடித்தது போல் ஆகியது.

தொழிலாளர்கள் திரண்டு எழுந்தார்கள்.

பெண்கள் அவர்களை வழிநடத்துவது அவர்களுக்கு ரொம்பவும் பிடித்துப் போயிற்று.

எங்கும் வேலை நிறுத்தங்கள் ஆரம்பமாயின.

சுரங்க முதலாளிகள் அனைவரும் வெள்ளைக்காரர்கள். அவர்கள் சும்மா இருப்பார்களா?

அவர்கள் அரசாங்கத்தைத் தூண்டிவிட, அரசாங்கம் செயலில் இறங்கியது.

பெண் சத்தியாக்கிரகிகள் அனைவரும் கைது செய்யப்பட்டார்கள். (21, அக்டோபர், 1913)

அனைவரும் மூன்று மாதம் சிறை தண்டனை விதிக்கப்பட்டார்கள்.

பெண்கள் கைது ஆகி சிறைக்குப் போனால் கேட்க வேண்டுமா?

செய்தி எல்லோரையும் உலுக்கியது. தங்கள் சார்பில் பெண்கள் சிறை சென்றார்கள் என்று தெரிந்ததும் தொழிலாளர்கள் அனைவரும் ஏகோபித்து விட்டார்கள். எங்கும் வேலை முடக்கம்! எங்கும் எதிர்ப்பு ஆர்ப்பாட்டம். எல்லோரும் காந்திஜியின் தலைமைக்குக் கீழ் ஒன்று சேர்ந்தார்கள். வெற்றிப் பாதை நோக்கி ஒரு பெரிய இயக்கம் ஓட ஆரம்பித்தது.

சிறை சென்ற பெண்களில் ஒருத்திதான் வள்ளியம்மா ஆர். முனுசாமி முதலியார் என்பவள். அவளுக்கு வயது பதினாறு. உற்சாகத்துடன் சத்தியாக்கிரகத்தில் பங்கு கொண்டாள்.

சிறையின் கொடுமை அதிகம். உணவு மிகவும் மோசம். வேலையோ கடுமை! வியாதியோ வெட்கையோ யாருக்கும் வேறு வித உணவோ, பத்திய உணவோ சாப்பிட அனுமதி இல்லை.

பலர் இந்தக் கடினங்களால் இளைத்து எலும்பாகி விட்டார்கள்.

சிலர் வெளிவந்தும், அவர்களை உடல்தேற வைப்பது வெகு கஷ்டமாகி விட்டது.

இந்தப் பெண்மணிகள் அனைவரிலும் காந்திஜியின் மனத்துக்கு மிகவும் பிரியமாகிப்

போனவள் அந்தப் பதினாறு வயது வள்ளியம்மாதான்.

ஜோகன்னஸ்பர்க்கைச் சேர்ந்தவள் அவள். நெட்டையாக இருப்பாள். சிறை சென்ற சில வாரங்களில் அவள் படுக்கையில் படுக்க வேண்டி வந்தது. உடல் நலம் இல்லாமல் இருந்தும், சிறைக் கொடுமைகள் எல்லாவற்றையும் புன்னகையுடன் ஏற்றுக்கொண்டாள்.

மூன்று மாத தண்டனையும் எப்படியோ முடிந்து விட்டது.

விடுதலை அடைந்ததும் படுக்கையில் படுத்து விட்டாள்.

காந்திஜிக்கு விஷயம் தெரிந்தது. ஓடோடி வந்து அவளைப் பார்த்தார்.

அந்தப் பெருமானின் கண்களில் நீர் வந்து விட்டது.

வள்ளியம்மா துரும்பாக இளைத்துப் போயிருந்தாள்.

இருப்பினும் காந்திஜி வந்ததும் அவள் புன்னகை புரிந்தாள்.

''வள்ளியம்மா!'' என்று தழுதழுப்புடன் அழைத்து அவள் கைகளைப் பிடித்துக்கொண்டார் காந்திஜி.

''வள்ளியம்மா! ஜெயிலுக்குப் போனது உனக்கு வருத்தமா இருக்கிறதில்லே?'' என்று கேட்டார் அவர்.

''வருத்தம்!'' என்றாள் வள்ளியம்மா. ''என் வருத்தம்! இப்போ என்னைத் திரும்பவும் கைது செய்தாக்கூட நான் சிறை போகத் தயார்!'' என்றாள் அவள்.

''அப்படிப் போறதினாலே நீ இறந்துபோன யானு?'' என்று நிறுத்தினார் காந்திஜி.

''கவலையே பட மாட்டேன். தாய் நாட்டுக்குச் சாகிறதுக்காக யாரேனும் இஷ்டப் பட மாட்டார்களா?'' என்றாள் அவள்.

(மேலே நடந்த உரையாடலை காந்திஜி அப்படியே எழுதி வைத்திருக்கிறார்.)

காந்திஜிக்குக் கண்ணீர் பொங்கியது. வள்ளியம்மாவுக்கு ஆறுதல் கூறிவிட்டுப் புறப்பட்டார்.

அந்தப் பெண் பிழைப்பாளா என்பது சந்தேகம்! வருத்தத்துடன் போனார்.

சில நாட்கள்தான்.

வள்ளியம்மா மரணம் அடைந்தாள். காந்திஜி அவளைப் பார்க்க ஓடோடி வந்தார். பார்த்தார். கண்ணீர் உகுத்தார்.

அவர் ஆரம்பித்த புதுக் கண்டுபிடிப்பான சத்தியாக்கிரகத்தில் முதன் முதல் கலந்து கொண்ட அந்தப் பெண்கள் அணியை அவரால் மறக்க முடியாது.

அதுவும் அதில் வள்ளியம்மாவின் தியாகத்தை மறக்கவே முடியாது.

மனம் உருகி அவர் எழுதி வைத்துள்ள வாசகங்களை அப்படியே தருகிறேன்.

''நான் எப்படி அந்தப் பெண்ணை மறப்பேன்? நான் கடைசியாகப் பேசிய சில நாட்களுக்குள் அவள் மறைந்து விட்டாள். தனது அழியாத பெயரை நிறுத்திவிட்டுப் போய்விட்டாள். பல இடங்களில் அவளுக்காக அனுதாபக் கூட்டங்கள் நடந்தன. இந்தியாவின் இந்தத் தவப் புதல்வியின் உன்னத தியாகத்தை நினைவு படுத்தும்படி ஒரு 'வள்ளியம்மா நினைவு மண்டபம்' கட்ட விரும்பினேன். ஆனால் அது நிறைவேறவில்லை. பல கஷ்டங்கள் வந்தன. பல வேற்றுமைகளும் வேறுபாடுகளும் தோன்றி காரியத்தில் இறங்க விடாமல் செய்து விட்டன. அதனால் என்ன? கல்லிலும் சுண்ணாம்பிலும் ஒரு நினைவு மண்டபம் கட்டினால்தான் ஆயிற்றா? வள்ளியம்மாவின் சேவை என்றும் அழியாதது. தனது சேவைக் கோயிலை அவள் தன் கைகளாலேயே எழுப்பினாள். இன்னும் கூட பலரது இதயக் கோயிலில் அவளது புகழ் மிக்க உருவம் பொறிக்கப் பட்டிருக்கும். இந்தியா வாழும் வரை வள்ளியம்மாவின் திருப்பெயர் தென் ஆப்பிரிக்கச் சரித்திரத்தில் சிரஞ்சீவியாக நின்று கொண்டிருக்கும்.''

எவ்வளவு தூரம் உருகினால் காந்திஜி மேற்கண்ட விதம் தாமே எழுதுவார்? அவரது சத்தியாக்கிரகம் தமிழரிடையே முதன் முதல் ஆரம்பித்தது என்பதும், ஒரு தமிழ்ப் பெண்மணியின் தியாகம்தான் அதில் முதல் தியாகமாக இருந்தது என்பதையும் யார் மறுக்க முடியும்?

---

**சமைக்கும்போது சோடாமாவைச் சேர்ப்பது அவற்றிலுள்ள 'பி' (B) வைட்டமின்களை அழித்துவிடும்.**

---

இந்த வரலாற்றை எழுதி முடித்ததும் என் கண்களை மூடுகிறேன். ஒரு காட்சி!

சென்னை மெரினாவில் பதினாறு வயது இளம் பெண் ஒருத்தியின் சிலை ஒன்று கம்பீரமாக நிற்கிறது.

'ஒரு சின்னப் பொண்ணுக்குச் சிலையா?' என்று பலரும் அதிசயப்பட்டு பக்கத்தில் போய்ப் பார்க்கிறார்கள்.

வள்ளியம்மாவின் பெயரும் தியாகமும் குறிக்கப்பட்டு, கீழே காந்திஜியின் மனத்தை உருக்கும் வாசகங்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

அதைப் படித்துவிட்டு ஓரளவு பழைய சரித்திரத்தைத் தெரிந்து கொண்ட பலரும் மனசில் வள்ளியம்மா பற்றிய கனமான நினைவோடு போகிறார்கள்!

கண்ணை விழிக்கிறேன். எனது இந்தக் கனவு நிறைவேறக் கூடாதா? சுதந்திரம் அடைந்த சூட்டோடு நாம் செய்யத் தவறியதை இப்போது யாராவது செய்யக் கூடாதா? ஒரு தமிழ்ப் பெண்ணின் உன்னத தியாகத்தின் மெய்க்கீர்த்தி தமிழகத் தலைநகரிலே பொறிக்கப்படக் கூடாதா?

எங்கெங்கோ அவள் பெயரைச் சூட்டியிருக்கிறார்கள். உண்மை! ஆனால் அவை கனுக்குப் பரிமாணம் பற்றாது.



# பெண்களின் சில நிரந்தரப் பிரச்னைகள்

டாக்டர்: கமலம்மா M.D.D.G.O.

பெண்கள் தாய்மையுறும்போது முதல் மூன்று மாதக் கட்டத்தைப் பற்றிச் சென்ற இதழில் பார்த்தோம். நான்கு, ஐந்து, ஆறு ஆகிய இரண்டாம் கட்ட மாதங்களை 'நடு மாதங்கள்' என்று சொல்வார்கள்.

இந்தச் சமயங்களில் பொதுவாகப் பல பெண்களுக்கும் ஏற்படுகின்றபிரச்னைகள்வயிற்றுவலி, கால் வலி, காலில் நரம்பு இழுத்துக் கொள்ளுதல், நெஞ்சு எரிச்சல், வலி போன்றவைதான்.

## வயிற்று வலி:

கர்ப்ப காலத்தில் கொஞ்சம் வயிற்று வலி வந்தவுடனேயே 'ஐயோ, நமக்கு அபார்ஷன் ஆகிவிடுமோ' என்று பயந்துபோய் விடுகிறார்கள். இதற்காக டாக்டர்களை அணுகும் போது, அவர்களில் சிலர் தற்காலிக நிவாரணத்துக்காக 'ஹார்மோன் இன்ஜெக்ஷன்' போடுகிறார்கள். இது முற்றிலும் தவறானது.

வயிற்று வலியும், பின்முதுகு வலியும் கர்ப்ப காலத்தைப் பொறுத்தவரை இயற்கையானது என்பதுதான் என்னுடைய எண்ணம். இவற்றிற்கும், கர்ப்பப் பையிலுள்ள சிசுவுக்கும் சம்பந்தம் இடையாது. கர்ப்பப் பை சிசுவின் வளர்ச்சியால் விரிவடையும் போது, சுற்றியுள்ள தசைகளும், நரம்புகளும் விலகுகின்றன. இதனால்தான் முன் பின் இரண்டு பக்கங்களிலும் வலி ஏற்படுகிறது. இதற்கு ஓரளவு ஓய்வு எடுத்துக் கொண்டாலே போதும்.

வயிற்று வலி அதிகமாக இருந்தால் அது அநேகமாக மலத்தில் பூச்சிகள் இருப்பதால் இருக்கலாம். வயிற்று வலி என்று வரும் கர்ப்பிணிகளை நான் 'மலப் பரிசோதனை' செய்யச் சொன்னபோது அவர்களில் தொண்ணூறு சதவிகிதம் பேருக்கு 'இந்த 'அமீபிக் இன்ஃபெக்ஷன்' இருப்பது தெரிய வருகிறது. இதற்கு என்ன காரணம்?

நம்முடைய ஊர்களில் தண்ணீர் சுத்தமாக இல்லாததுதான் காரணம். படித்த பெண்கள்கூட தண்ணீரைக்கொதிக்கவைத்துக் காய்ச்சிக் குடிக்க வேண்டும் என்பதை மறந்து விடுகிறார்கள். அதிலும் கர்ப்பம் தரித்த பெண்கள் தண்ணீரைக் கொதிக்க வைத்து ஆறவைத்தே குடிக்க வேண்டும். வெளியே உணவு அருந்துவதையோ, தண்ணீர் குடிப்பதையோ தவிர்க்க வேண்டும். வீட்டிலும், சட்னி, மோர் போன்றவற்றிற்குத் தண்ணீர் ஊற்றும்போது கொதிக்க வைத்து ஆறவைத்த நீரையே பயன்படுத்த வேண்டும். இப்படிச் செய்தால் இந்த 'மலப் பூச்சிகள்' மறைந்து வயிற்று வலி தானாக மறைந்து விடும்.

## கால் வலி:

அதே போலக் கால் வலியும் கர்ப்பிணிப் பெண்களுக்குப் பொதுவானதுதான். கர்ப்பப் பையில் பளு ஏற ஏற காலில் வலுவில்லாத காரணத்தால் வலி ஏற்படுகிறது. அதற்கும் ஓரளவு ஓய்வெடுத்துக் கொண்டால் போதும். ஆனால், காலில் நரம்பு இழுத்துக் கொள்ளுதல், சுருட்டிக் கொள்ளுதல் என்று சொல்வார்கள். இந்த அதீதமான வலி ஏற்பட்டால் அது கால்ஷியம் குறைவால்தான் ஏற்படும். இதற்குக் 'கால்ஷியம்' ஊசிகளைப் போட்டுக் கொண்டால் சரியாகிவிடும்.

ஆனால் பொதுவாகவே கர்ப்ப காலத்தில் உடலில் பல பெரும் மாறுதல்கள் ஏற்படுவதால் அசௌகரியங்கள் ஏற்படலாம். இதற்காகவெல்லாம் டாக்டர்களிடம் ஓடி வலி நிவாரண மாத்திரைகளை, ஹார்மோன் ஊசிகளைப் போட்டுக் கொள்வது பெரும் தவறு. இவைகள் அனைத்தும் பிற்காலத்தில்குழந்தைகளையே பாதிக்கின்றன.

அதேபோல் ஜலதோஷம், வயிற்றுப்போக்கு, இருமல் இவற்றிற்கும் கூடியவரை இயற்கையாகவே குணமடைந்துவிட வேண்டும். வயிற்றுப் போக்குக்கு மட்டும் லேசாக மருந்து எடுத்துக் கொள்ளலாம். கர்ப்ப காலத்தில் மருந்துகளை அதிகம் உபயோகிக்காமல் இருப்பதே நல்லது.

## கால் வீக்கம்

இந்த கடைசி மூன்று மாதங்களில்தான் கர்ப்பிணிப் பெண்களுக்கு ஏற்படும். பளு

வினால் ஏற்படுவது. ஆனால் இடை மூன்று மாதங்களிலே ஏற்பட்டு, ஓய்வு எடுத்துக் கொண்டும் நிற்கவில்லை யென்றால் டாக்டரை அணுகுவது நல்லது. ஏனெனில் இவர்களுக்கு நீரிழிவு நோய் இல்லையென்றாலும், முன் பரம்பரையில் யாருக்கேனும் இருக்கலாம்.

ரத்த சோகை, ரத்த அழுத்தம், நீரிழிவு, போன்ற காரணங்களாலும் இந்தக் கால் வீக்கம் ஏற்படுகிறது. இதற்குத் தகுந்த சிகிச்சையை அப்போதே மேற்கொண்டு விட்டால் குழந்தையும் பாதிக்கப்படாது. பிரசவ காலத்தில் சிக்கல்கள் ஏற்படாமலும் பார்த்துக் கொள்ளலாம்.

**இதய நோய்கள்:**

நெஞ்சு படபடவென்று அடித்துக்கொள்ளுதல், மாடிப் படி ஏற முடியாமை, நெஞ்சில் எரிச்சல் போன்றவை யாவும் ஓரளவு பலவீனமான கர்ப்பிணிகளுக்கு ஏற்படும். இதற்கும் ஓய்வே நல்ல மருந்து.

ஆனால் நெஞ்சு வலி அதிகமாக இருக்குமானால் அதற்கு உடனடியாக மருத்துவரை அணுகுவது நல்லது. ஏனென்றால் இருதயத்தில் ஏதேனும் கோளாறுகள் இருந்து இது நாள்வரை வெளிப்படாமல் இருந்திருக்கும். கர்ப்ப காலத்தில் உடல் பலவீனமான நிலையில் வெளிப்பட்டிருக்கும். இதற்கு உடனடியாக நிவாரணம் அளித்தாக வேண்டும். இல்லையென்றால் பிரசவ காலத்தில் மிகச் சிக்கல்கள் ஏற்பட வாய்ப்புண்டாகி விடும்.

**வயிற்றில் அசைவுகள்:**

முதல் குழந்தைக்கு ஐந்து மாதத்திலிருந்து சிசு வயிற்றில் அசைவதை உணரலாம். இது நார்மலானது. பிறகு ஏற்படும் கர்ப்பங்களில் நான்காவது மாதத்தின் கடைசியிலேயே உணரலாம். ஏனெனில் ஒரு முறை கர்ப்பப்பை விரிந்து சுருங்கியிருப்பதால் அசைவுகள் எளிதாகப் புலப்பட்டு விடும்.

இந்த அசைவுகள் மருத்துவ ரீதியாக ஓரளவு உதவும். மாத விலக்கு முறையாக ஏற்படும் பெண்களுக்கு நாள் கணக்குச் சரியாக வரும். கர்ப்ப காலம் என்பது ஒன்பது மாதங்களும் ஏழு நாட்களும் ஆகும். பிரசவம் இந்தக் கணக்கில் ஒரு வாரம் முந்தியோ, பிந்தியோ ஏற்படலாம். ஆனால் முறையற்ற மாதவிலக்கு உடையவர்களுக்கு எப்போது கர்ப்பம் தரித்தார்கள் என்று சொல்ல முடியாது. இவர்களுக்குச் சரியாகக் கணக்கு வைக்கவும் முடியாது. இப்படிப்பட்டவர்கள் தன் வயிற்றில் குழந்தை அசைவு ஏற்பட்ட நாளைக் குறித்து வைத்துக் கொண்டு சொன்னால், மருத்துவர் அந்த நாளை வைத்து ஏறக் குறைய பிரசவ காலத்தைக் கணக்கிட முடியும்.

**ஆகார வகைகள்:**

கர்ப்ப காலத்தில் முதல் மூன்று மாத கட்டங்களில் வைட்டமின் மாத்திரைகள் போன்றவை எதுவும் தேவையில்லாவிட்டாலும், இரண்டாவது கட்டத்தில் இவை மிகவும் அவசியமானது. டானிக்கை விட மாத்திரைகள் நல்லது.

''டாக்டர், நான் ருசியான உணவுதான் சாப்பிடுகிறேன். நிறைய மீன், கறியெல்லாம் சாப்பிடுகிறேன். எனக்குப் போய் சத்தில்லே, வைட்டமின் மாத்திரைகள் சாப்பிட வேண்டும் என்கிறீர்களே....''

என்கிறார்கள். இது உண்மையில்லை. ருசியான உணவு என்பது வேறு, சத்தான உணவு என்பது வேறு. நாம் தினசரி சாப்பிடுகிற உணவிலே ஒரு கர்ப்பிணிக்குத் தேவையான சத்து இருக்கிறதா என்று பார்த்தால் இல்லையென்றுதான் சொல்ல வேண்டும். எனவே அதிகமாகத் தேவைப்படும் வைட்டமின், புரோடீன், கால்ஷியம் போன்றவற்றிற்குத் தேவையான காப்ஸ்யூல்கள், மாத்திரைகளைச் சாப்பிட்டே ஆகவேண்டும்.

கர்ப்பத்தின் இரண்டாம் கட்டத்தில் இவற்றைத் தொடங்க வேண்டும். நல்ல மருத்துவரின் ஆலோசனையுடன் தினசரி தவறாமல் இவற்றைச் சாப்பிட வேண்டும்.

இவை தவிர ஒரு நாளைக்கு நான்கு டம்ளர் பால் சாப்பிட வேண்டும். கீரை வகைகள், தக்காளி, நெல்லிக்காய், கேழ்வரகு இவற்றையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

''நான் தினமும் ஆப்பிள் சாப்பிடுகிறேன்'' என்று பெருமையாகச் சொல்லிக் கொள்வார்கள். ஆனால் ஒரு நெல்லிக்காயிலோ, தக்காளியிலோ, கேழ்வரகிலோ இருக்கும் சத்து ஆப்பிளில் கிடையாது. விலையுயர்ந்த பண்டங்கள் என்றால் அது உயர்வானது என்ற தவறான நம்பிக்கை நம்மிடம் இருக்கிறது.

இந்தக் கட்டத்தில் தக்காளி ஜூஸ் தினமும் சாப்பிடுவது உடம்பிற்கு மிக நல்லது. இந்தச் சமயத்தில் தேவையான சத்துக்கள் பெரும்பாலும் தக்காளியில் அடங்கியுள்ளன.

நெய், எண்ணெய் இவற்றைக் குறைப்பது நல்லது.

**நம்மிடையே பரவியிருக்கும் நம்பிக்கைகள்:**

நிறையச் சாதம் சாப்பிட்டாலோ, மருந்து, மாத்திரை, டானிக் இவற்றைச் சாப்பிட்டாலோ வயிற்றில் குழந்தை பெரிதாகி பிரசவம் சிக்கலாகி விடும் என்று பயமுறுத்துவார்கள்.

ஒன்றைத் தாய்மார்கள் புரிந்து கொள்ள வேண்டும். வயிற்றில் வளரும் சிசு தாயிடமிருந்து தேவையான சத்துக்களைப் பெற்றுக் கொண்டு நார்மலாக வளர்கிறது. தாய் சாப்பிடும் மருந்து, மாத்திரைகளினால் குழந்தை 'அதிகமாக' வளர்ந்து விடாது. அதனுடைய சாதாரண வளர்ச்சியை யாரும் கட்டுப்படுத்தி விடவும் முடியாது.

தாயிடமிருந்து சத்துக்கள் அனைத்தும் குழந்தைக்குச் சென்று விடுவதால் தாய் தன் உடலுக்குத் தேவையான சத்துக்களை ஏற்றுக் கொண்டேயாக வேண்டும். 'குழந்தை பெரிதாகிவிடும்' என்று பயந்து கொண்டு தாய் சத்துள்ள ஆகாரங்களை ஏற்றுக் கொள்ளாமல் போனால் தாய் பாதிக்கப்பட்டு, பலவீனப்பட்டு, பிரசவத்தை எதிர்கொள்ள முடியாமல் பிரசவம் கஷ்டமாகிவிடும். இதற்கும் குழந்தையின் வளர்ச்சிக்கும் சம்பந்தமேயில்லை.

அதே போல வயிற்றின் அளவை வைத்து ஆண் குழந்தை, பெண்குழந்தை என்று கணிப்பவர்களும் உண்டு. இதுவும் சரியில்லை. கர்ப்பப் பையில் சிசுவைச் சுற்றியுள்ள நீர், தசைகள் போன்றவற்றைப் பொறுத்தே வயிற்றின் அளவும் அமைகிறது.

வயிறு மிகப் பெரிதாக இருந்தால் இரட்டைக் குழந்தைகளாகவோ, இல்லை தாய்க்கு நீரிழிவு நோயோ இருக்கலாம். வயிறு மிகச் சிறியதாக இருந்தால் அது சிசு சரியாக வளரவில்லை என்பதைக் காட்டுகிறது. இரண்டு நிலையிலும் தக்க மருத்துவ பரிசோதனை செய்து கொள்வது அவசியம்.

பொதுவாக மருத்துவப் பரிசோதனைக்கு வரும்போதே டாக்டர்கள் இதைப் பார்த்துச் சொல்லிவிடுவார்கள்.

அதே போல இரும்புச் சத்து மாத்திரைகள் சாப்பிடுவதால் குழந்தைகள் கறுப்பாகிவிடும் என்று அதைத் தவிர்த்துவிடுவார்கள். இதனால் மலம் கறுப்பாக வருமே தவிர குழந்தை கறுப்பாவதில்லை. குங்குமப்பூவிற்கும், குழந்தையின் நிறத்துக்கும் கூட சம்பந்தமில்லை.

இவை யெல்லாம் காலம் காலமாக நம்மிடையே நிலவி வரும் தவறான நம்பிக்கைகளாகும். இந்தக் கால கட்டத்தில் மாதம் ஒரு முறை மருத்துவ பரிசோதனை செய்து கொள்ள வேண்டும். அதிக வயதில் திருமணம் செய்து கொண்டவர்கள் அடிக்கடி பரிசோதனை செய்து கொள்வது நல்லது.

**ரத்தப் பரிசோதனை**

தாய் ஆர். எச். பாசிட்டிவ்வாக இருந்து விட்டால் தந்தைக்கு ரத்தப் பரிசோதனை தேவையில்லை. தந்தை ஆர். எச். நெகடிவாக இருந்தாலும் அதைப் பற்றிக் கவலையில்லை. தாய்க்கு நெகடிவ் என்று வரும்போதே அதற்கு முன்னெச்சரிக்கையுடன் ஊசி போட வேண்டி வரும். மற்றபடி இன்றைய வளர்ந்த விஞ்ஞான யுகத்தில் அதைப் பற்றித் திகில் கொள்ளத் தேவையில்லை.

(தொடரும்)

# வளரும் குழந்தைகளுக்குத்

## தேவை ஒரு விசேட திட உணவு...

# ஃபாரெக்ஸ்

### காரணம், குழந்தைகளின் விரைந்த முழுவளர்ச்சிக்கான அதிக ஊட்டச்சத்துள்ள திட உணவாகும் ஃபாரெக்ஸ்.

1. ஃபாரெக்ஸ் புரதச்சத்து நிரம்பியதாகும்—உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு இது அத்தியாவசியமாகும்.

2. ஃபாரெக்ஸ் வேறெந்த பிராண்டு செய்யப்பட்ட திட உணவைக் காட்டிலும் அதிக இரும்புச் சத்துள்ளதாகும். இது குழந்தைக்குத் தொற்றுநோய் எதிர்ப்புச் சக்தியையும் ஆரோக்கியமான இரத்தத்தையும் அளிக்கிறது.

3. ஃபாரெக்ஸில் கால்ஷியம் மற்றும் ஃபாஸ்ஃபரஸ் சரியான விகிதத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆரோக்கியமான எலும்புகளையும் திடமான பற்களையும் பெற இவை உதவுகின்றன.

4. தவிர ஃபாரெக்ஸ், குழந்தையின் மென்மையான செரிக்கும் சக்திக்கேற்றவாறு விசேஷமாக முன்கூட்டியே பக்குவம் செய்யப்பட்டதாகும்.




டாக்டர்கள் சிபாரிசு செய்வது

## ஃபாரெக்ஸ்®

வழங்குவோர் க்ளாக்ஸோ

CASGLF-42-203 TM

# எல்லைகளின் விளிம்பில்...

## 1

இன்றைக்குக் கண்ணைத் திறக்கும்போதே பளிச்சென்று ஞாபகம் வந்தது. நினைவலைகளின் விளிம்பில் அது நின்றாற் போல—

மாலதியைப் பெண் பார்க்க வருகிறார்கள் அப்பா நேற்று இந்த விஷயத்தைச் சொன்னதிலிருந்து 'என்ன சம்பிரதாயம் இது' என்று நமநமவென்று மனத்தைக் குடைந்துகொண்டிருந்த நமைச்சல் மறுபடியும் விசுவரூபம் எடுத்தது.

''நான் நிச்சயம் இந்த மாதிரி ஒரு சம்பிரதாயத்துக்கு உட்பட மாட்டேன். இஷ்டப்பட்டு, ஆசைப்பட்டு, காதலித்துத்தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்' என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான். கூடவே மனசு அலுத்துக் கொண்டது. அடச்சீ, நீ கெட்ட கேட்டிற்கு காதல் வேறா?

பாலு மறுபடி கண்ணை மூடிக் கொண்டு புன்னகைத்தான். கற்பனை செய்து பார்ப்பதில் ஏதும் தவறு இல்லை.... சாப்பாட்டைக் கனவில் கண்டு பிச்சைக்காரன் சந்தோஷிக்கிற மாதிரி... இவை கனவுகள்தான் என்கிற பிரக்ஞை இருக்கும் பட்சத்தில் எனக்கு ஏதும் ஏமாற்றம் இருக்கப் போவதில்லை.

இவை கனவுகளாகவே என்றைக்கும் இருக்கப் போவதில்லை.

பி.எஸ்.ஸி. — எம்.எஸ்.ஸி... ஃபர்ஸ்ட் க்ளாஸ். பல வேலைகளுக்கு மனுப் போட்டிருப்பவன். ஒரு நல்ல வேலை கிடைக்காமல் போகாது. கிடைத்து...

''பம்ம்ம்ம்ம்...!''

அவன் உலுக்கப்பட்டவன் மாதிரி விழித்துக்கொண்டான். வீட்டுக்காரர்கள் பம்ப் செட்டைப் போட்டு விட்டார்கள். இன்னும் ஒரு அரை மணி நேரத்துக்கு ஏதும் சிந்தனைகள் கூடத் தோன்றாமல் மூளை ஸ்தம்பித்து நிற்கும். இது ஒரு நல்ல தெரப்பி... ஓசைகள் அதிகரிக்க அதிகரிக்க மனசும் மூளையும் மௌனமாகிப் போகும்....!

பால் பூத்திற்குப் போக வேண்டும் என்கிற நினைப்புடன் அவன் எழுந்தான். படுக்கையின் கதகதப்பிலிருந்து வெளியில் வந்ததும் கையும் காலும் குளிரில் வெட வெடத்தன. அவன் அவசரமாக முழுக்கை ஸ்வெட்டரையும் குல்லாவையும் மாட்டிக் கொண்டு பாட்டில்களுடன் ஓசைப்படுத்தாமல் கதவைத் திறந்து சென்றான். இன்றைக்கு இரண்டு பாட்டில்கள் அதிகம். மாலுவைப் பெண் பார்க்க வருகிறார்கள்.

மாலு வெகு சீக்கிரத்தில் இந்த வீட்டிலிருந்து நிரந்தரமாக வேறு வீட்டுக்குப் போய் விடுவாள் என்கிற நினைப்பு மனத்தை என்னவோ செய்தது. அவனை விட ஒன்னரை வயதே சின்னவளான மாலு... அவனைமாதிரி கவிதை நயமுள்ளமனசும், லட்சியக் கனவு



கனும் கொண்ட மாலு. பூ மாதிரி மிருது வான பரிசுத்த அழகுடைய மாலு....

இன்றைக்கு அவளைப் பார்க்க வரப்போகிற வனுக்கு அவள் எவ்வளவு பெரிய பொக்கிஷம் என்று தெரியுமா? கல்யாணம் செய்து கொண்டால் பரிவோடு நடத்துவானா?

தொண்டையில் ஏதோ அடைத்துக்கொண் டது. அவன் விருவிருவென்று குளிரை எதிர்த்துக் கொண்டு வேகமாக நடந் தான். இன்னும் நன்றாக விடியவில்லை. ஷாலும் மஃப்ளரும் ஸ்வெட்டருமாகக் க்யூ நின்று. நகர்ந்தது. இயந்திர கதியில் பாட்டில்கள் மாறின.

''ஹாய் பாலு!''

பாலு நிமிர்ந்து பார்த்தான். அவ னுடன் படித்த ரமேஷ். அவனை மாதிரியே வேலைக்கு மனுக்கள் போட்டுவிட்டுத் தண்டச் சோறு

**வாஸந்தி**



சாப்பிடுகிற குற்ற உணர்வால் பால் பாட்டில்களைக் கமப்பவன்....

''ஹாய்! எங்கேந்தாவது ரிப்ளை வந்ததா?'

''ஊஹூம். உனக்கு?''

''நோ!''

''முந்தாநாள் ஸ்டேட்ஸ்மன்லே ஒரு விளம்பரம் பார்த்தியா?''

''பாரத் கெமிகல் ஃபர்டிலைஸர்ஸா?''

ரமேஷ் லேசாக விசில் அடித்தான்.

''நீயும் அப்ளை பண்ணியாச்சா?''

''வேற என்ன எனக்குப் பொழுதுபோக்குன்னு நினைச்சே?''

''ரொம்ப அலுத்துத்தான் போறது பா லு!''

இந்த மாதிரி தினம் தினம் நிகழும் சம்பாஷணையைத் திசை திருப்ப முடியாத சங்கடத்துடன் பாலு ஒரு விநாடி நின்றான்.

''அப்புறம் பார்க்கலாம் ரமேஷ். இன்னிக்குக் கொஞ்சம் வேலை இருக்கு!''

''என்ன வேலே?''

''அப்புறம் சொல்றேன்.''

இவனுக்கெல்லாம் எதையும் விவரிக்க வேண்டிய அவசியமில்லை என்கிற தீர்மானத்துடன் அவன் வேகமாக வீட்டை நோக்கி நகர்ந்தான். இந்த ரமேஷை ஏன் பார்க்க நேர்ந்தது என்று அலுப்பேற்பட்டது. மனசில் சதா மௌனமாகக் குடைந்து கொண்டிருக்கும் சஞ்சலம் இவனைப் பார்க்கும்பொழுதெல்லாம் பெரிய குரலெழுப்பி அவனைக் கலவரப்படுத்துகிறது. உறங்கிக் கொண்டிருக்கும் மனக் குட்டையைச் சலனப்பட்டு வெகுநேரத்துக்கு நீர்க் குமிழிகளை ஒரு அசுரத்தனத்துடன் விரிக்கிறது.

மாலுவின் பாடு தேவலே. ஆண்-பெண் சமத்துவத்தைப் பற்றி டில்லியில் தெருவுக்குத் தெரு பிரசங்கம் நடந்தாலும் பெண்களுக்கு சீக்கிரம்தான் இன்னமும் கல்யாணம் நடக்கிறது. இன்றைக்கு வரப்போகிற இடம் குதிர்ந்து விட்டால் மாலு கண்ணை மூடிக் கொண்டு கல்யாணம் செய்து கொண்டு இருபத்தியோரு வருஷங்கள் வாழ்ந்த வீட்டிற்கும் தனக்கும் ஏதும் சம்பந்தமில்லை என்கிற பாவனையுடன் உதறிக் கொண்டு முன்பின் தெரியாத ஒருத்தனுடன் போய் விடலாம். வேலை கிடைக்கவில்லையே, இந்த வீட்டுப் பொறுப்பை ஏற்கவில்லையே என்று குமைந்து போய்விட வேண்டியதில்லை...

---

**யோசனை**

துவரம் பருப்புடன், தோல் நீக்கிய காராமணி பருப்பை சமஅளவு, கலந்து வைத்துக்கொண்டு சாம்பார் செய்தால் நல்ல வாசனையுடன் சாம்பார் கம, கம வென்றிருக்கும். - ராதாபாய்

---

அவன் வீட்டிற்குள் நுழைந்தபோது அம்மா சமையல் அறையில் காஃபி ஃபில்டரின் தலையில் குட்டிக் கொண்டிருந்தாள். மேடை மேல் அவன் பாட்டில்களை வைக்கும்போது ''எக்ஸ்ட்ரா பாட்டில் கிடைச்சுதா, நல்லவேளை'' என்று எடுத்து வைத்தாள் ஏதோ பெரிய பிரச்னை ஒன்று தீர்ந்த மாதிரி.

''எத்தனை மணிக்கம்மா வரா அவாள்ளாம்?''

''ஒன்பதரை மணிக்கு!''

''அதென்ன காலே வேளையிலே?''

''அந்தப் பிள்ளைக்கு நேரமில்லையாம், சாயந்திர ட்ரெயினிலே லக்னோ போயிடறானாம்.''

''அங்கதானே அவனுக்கு வேலே?''

''ஆமாம். என்ஜினியர். நல்ல வேலைங்கறா அப்பா. இந்த இடத்தில நிச்சயம் ஆச்சுன்னு கொஞ்சம் நிம்மதியா இருப்பேன் நான்.''

முன்பின் தெரியாதஒருத்தனிடம்பெண்ணை ஒப்படைத்துவிட்டு எப்படி இந்த அம்மாவால் நிம்மதியா இருக்க முடியும் என்கிற யோசனையுடன் அவன் சில விநாடிகள் நின்றான்.

''அந்தப் பிள்ளை டில்லியிலே நாலைஞ்சு இடத்திலே பெண் பார்த்துட்டானாம். ஒண்ணும் பிடிக்கல்லியாம். நம்ம மாலுவைத் தான் பிடிக்கணும்னு இருக்கோ என்னவோ?'

அம்மாவின் லாஜிக்கைக் கண்டு அவனுக்கு சிரிப்பு வந்தது.

''மாலுவுக்கும் பிடிக்கணும்கறது முக்கியமில்லையா அம்மா?''

அம்மா சட்டென்று நிமிர்ந்து பார்த்தாள். பிறகு தலையைக் குனிந்தபடி மெள்ளச் சொன்னாள்.

''முக்கியம்தான். பிடிக்கலேன்னு சொல்லும்படியா இந்த வரன்லே இல்லே. நல்ல வேலையில இருக்கான். நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவன். பார்க்க நன்னா இருப்பானாம். கையிலே பணம் தாராளமா இல்லாதபோது இதுக்கு மேலே நாம என்ன ஆசைப்பட முடியும்?''

அவன் பதிலேதும் சொல்லாமல் பல் விளக்கச் சென்றான். இது ஒரு சந்தை வியாபாரம். கண் பார்வையினால் — கேள்வி ஞானத்தால் எடை போட்டு சீர்தூக்கி நடத்தும் வியாபாரம். பேசத் தெரிந்த அறிவுள்ள பிராணிகளிடையே ஏற்பட்ட எப்படிப்பட்ட வியாபாரம்!

அவனுக்குக் காப்பியைக் கலந்து கொண்டே ''எழுந்திருடி மாலு'' என்று அம்மா குரல் கொடுத்தாள்.

அவன் காப்பி டம்ளரைக் கையில் எடுத்துக் கொண்டு கதவுக்கடியில் நுழைந்திருந்த அன்றைய டைம்ஸ் ஆஃப் இந்தியாவை மடியில் விரித்து, அதில் ஆழ்ந்து போகையில்,

''எனக்கு ஒரு பக்கம் கொடு'' என்று மாலு எதிரில் உட்கார்ந்தாள்.

மாலுவின் முகத்தில் ஒரு கோபம் தெரிந்தது. அம்மாவுடன் ஏதோ வாக்குவாதம்

# அறிமுகப்படுத்துகிறோம்!
# நீண்ட ஆராய்ச்சியின் விளைவாக உண்மையிலேயே செயலாற்றும் ஆயுர்வேத சரும களிம்பு!

# ஸான்டலின்-டி

மாசு மருக்களை நீக்கி, உங்கள் சருமத்தை மலரிதழ்போன்று வழவழப்புடனும், மிருதுவாகவும் ஆக்குகிறது.




இப்போது முதன்முறையாக
மூலிகைகளின் ஆற்றும் சக்திவாய்ந்த,
பரிசுத்தமான, இதமளிக்கும் சரும களிம்பு...
....மாசில்லாத மேனிக்கு மட்டுமல்லாமல், உண்மையிலேயே
சருமத்திற்கும் புத்துயிரளித்து மென்மையாகவும், மழமழப்பாகவும் ஆக்கும் சக்தி வாய்ந்தது.

ஆயுர்வேத முறையில் உருவாக்கப்பட்ட ஸான்டலின்-டி வறண்ட சருமத்திற்கு மிகச் சிறந்த களிம்பு. மற்றும் கண்ணின் கீழே தோன்றும் கருவட்டங்கள், வெண்தேமல்கள், நெற்றியில் தோன்றும் கரும்புள்ளிகள், "அலர்ஜி"யால் விளையும் தடிப்புகள், அரிப்புகளுக்கும் ஏற்றது.
சருமத்தை பகட்டாகவும் பளபளப்பாகவும் இருக்க உதவும் ஸான்டலின்-டி, ஒரு "ஸ்கின்-கண்டிஷனர்" ஆகவும் செயலாற்றுகிறது. நீங்கள் இழந்த இயற்கையின் எண்ணைச் சத்துக்களை ஈடு செய்து உங்கள் சருமத்தை புதுப்பொலிவுடன் ஊட்டமுள்ளதாக்குகிறது. மேலும் இளமை குன்றாத செழிப்புடன், மாசுமறுவற்ற சருமத்தை அளிக்கிறது.

---

## ஸான்டலின்-டி மேன்மையான சரும பராமரிப்புக்கு மூலிகைகளின் சேர்க்கை கொண்ட ஆயுர்வேத அடிப்படையிலான ஆதாரவழி.

---

இந்த தரமான தயாரிப்பை அளிப்பவர்கள் :

## பொருகா இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்

கன்ஸ்யூமர் பிராடக்ட்ஸ் டிவிஷன், 22-A, கதீட்ரல் ரோடு, சென்னை-600 086.
தொலைபேசி எண் : 83782

இந்தியாவின் இணையற்ற முவ்வகையில் செயலாற்றும் "ஆயுர்சக்தி" –ஆயுர்வேத வலி நிவாரணி தயாரிப்பாளர்கள்.

Interpub(M) 83

செய்திருக்க வேண்டும் என்று அவன் நினைத்துக்கொண்டான்.

''நீ இன்னிக்குச் சீக்கிரம் குளிச்சுத் தயாராகணும் மாலு!''

அவள் அவனைச் சுரீரென்று ஒரு பார்வை பார்த்தாள்.

''நீ சும்மா இருக்க மாட்டே?''

அவன் 'எனக்கென்ன' என்கிற மாதிரி தோளைக் குலுக்கிக் கொண்டான்.

அவன் நினைத்த மாதிரியே மாலு சற்றுப் பொறுத்துக் குளித்துப் பளிச்சென்று உடுத்திக்கொண்டாள். அம்மாவின் ரவா கேஸரியும் இட்லியும் சாம்பாரும் வாசல் வரை மணத்தது. அதை மோப்பம் பிடித்துக் கொண்டே வந்த மாதிரி பிள்ளை வீட்டார்கள் படியேறி வந்தார்கள். பார்க்க நாகரிகமாகத் தெரிந்தார்கள். நாசூக்காகப் பேசினார்கள். பிள்ளை லட்சணமாக, ஸ்மார்ட்டாக இருந்தான். திருட்டுத்தனமாகப் பார்க்காமல் நேரிடையாகவே மாலுவைப் பார்த்தான். தன் கூட வந்திருந்த தகப்பனாரிடம் தாழ்ந்த குரலில் ஏதோ சொன்னான்.

''நா உள்ளே போறேம்மா'' என்றுவிட்டு பதிலுக்குக் காத்திராமல் மாலு உள்ளே சென்றாள்.

எழுந்திருந்து உள்ளேயும் போக முடியாமல் அங்கே உட்காரவும் முடியாமல் பாலு அலுப்புடன் நின்றான். இது என்ன நாடகம்? அம்மாவின் முகத்தில், அப்பாவின் பார்வையில் ஒரு கவலையும், யோசனையும் தெரிவதைப் பார்க்கையில் ஒரு லேசான அவமான உணர்வு ஏற்பட்டது.

நான் ஒரு இன்ஜினியர், நல்ல வேலையில் இருக்கிறேன் என்கிற மெதப்போடு உட்கார்ந்திருக்கும் அவனை, அந்த வெங்கடேசனைப் பார்க்கையில் இனம் புரியாத ஒரு சீற்றம் ஏற்பட்டது.

'யோவ், எங்க மாலு எம்.ஏ. யுனிவர்ஸிடி ஃபர்ஸ்ட். ப்ரெஞ்சிலே டிப்ளமா ஹோல்டர். இதைத் தவிர எத்தனையோ க்வாலிஃபிகேஷன் உண்டு. உனக்கு உங்க அப்பா அம்மா எத்தனை செலவழிச்சாளோ அதுக்கு மேலே அவளுக்குச் செலவழிச்சிருக்கோம்... நீ ஒண்ணும் பெரிய குதிரைக்கொம்பன் இல்லே...'

வெங்கடேசனின் அப்பா முகத்தில் ஒரு பெரிய புன்னகை விரிந்தது.

''மிஸ்டர் கிருஷ்ணமூர்த்தி, வந்த காரியம் திருப்தியா இல்லேன்னு ஊருக்குப் போய் கடிதாக போடறேம்னு நழுவணும். இப்ப அதுக்கு அவசியமில்லே. இவனுக்குப் பெண்ணைப் பிடிச்சுப் போச்சாம். எனக்கே பெரிய நிம்மதி. இந்த மூணு நாள்லே பார்த்த ஒரு பெண்ணும் இவனுக்குப் பிடிக்கல்லே. அவன் சம்மதம்னுன்னே கல்யாணத்தை நிச்சயம் செய்ய வேண்டியதுதான்.''

''பெண்ணுக்கும் சம்மதமான்னு கேட்டுச் சொல்லுங்கோப்பா...!''

அம்மா முகமெல்லாம் புன்னகையாய்ச் சொன்னாள்.

''பெரியவா சொன்னா அதை எதிர்க்க மாட்டா எங்க பொண்ணு!''

''ரொம்ப சரி. முகூர்த்தம் பார்த்து எழுதுங்கோ. இன்னிக்கு மத்தியான ரயிலைப் பிடிக்கணும். அதுக்கு முன்னாடி கொஞ்சம் ஷாப்பிங் பண்ணணும்....''

அப்பா தயக்கத்துடன் ஆரம்பித்தார்.

''லௌகிக விஷயங்ள் எல்லாம் லெட்டர்ல எழுதறேளா?''

வெங்கடேசன் இதற்கும் தனக்கும் சம்பந்தமில்லை என்பது போல் புத்தக அலமாரியை ஆராய ஆரம்பித்தான்.

வெங்கடேசனின் அப்பா முகவாயைச் சொரிந்தார்.

''இப்பவே பேசிட்டாப் போறது. எங்கே வெச்சுக்கப் போறேள் கல்யாணத்தை?''

''டில்லியிலேதான்.''

''எங்க உறவுக்காரங்கள்ளாம் மதராஸிலிருந்தும் திருச்சியிலேந்தும் வரணும். ஏகச் செலவாகும்.

நாங்க வரதட்சிணை வாங்கற வழக்கமே கிடையாது மிஸ்டர் கிருஷ்ணமூர்த்தி. கல்யாணத்தை டில்லிடா செஞ்சுடுங்கோ. மேரேஜ் எக்ஸ்பென்ஸுக்காக பத்தாயிரம் கொடுத்துடுங்கோ போறும். பிள்ளை ட்ரஸ்ஸுக்காக இரண்டாயிரம், இருக்கவே இருக்கு எல்லாரும் கொடுக்கிற மாமூல் வழக்கம்...''

ஒரு நிமிஷம் சர்வ நிசப்தம் நிலவிற்று. 'ஓ ஹென்றி'யின் ஆயிரத்தொரு சிறுகதைகளில் வெங்கடேசன் ஆழ்ந்திருந்தான். அந்த மனிதரின் வார்த்தைகள் ஏற்படுத்திய அதிர்வில், இவன் நிற்கும் நிலையின் அசம்பாவத்தில் பாலுவின் கன்னங்களில் சுறுசுறுவென்று சூடு ஏறிற்று. மார்பு வேகமாக அடித்துக்கொண்டு கண்களில் கோபம் விரிந்தது. எதுவும் பேசத் தோன்றாமல் தயங்கிக் கொண்டு எந்த வகையில் பேரம் பண்ணினால் இந்தத் திமிர்க்காரருக்கு ஏற்கும் என்று நிற்கும் அப்பாவையும், எப்படியோ கல்யாணம் ஆனால் சரி என்று ஒரு பைத்தியக்காரத்தனமான வாழ்க்கையில் சிக்கிக் கொண்டிருக்கும் அம்மாவையும் பார்க்கப் பார்க்க அந்தக் கோபம் விகவ ரூபமாய் எழுந்தது.

''அப்பா!'' என்று நிலைப்படியில் மாலு நின்றாள்.

''எனக்குக் கல்யாணம் செய்யணும்கிற பிரயத்தனம்தானேப்பா இதெல்லாம்?''

''இதென்ன கேள்வி மாலு? பெரியவா பேச்சுக்கு நடுவே வராதே போ!''

மாலு சட்டை செய்யாமல் கேட்டாள். ''இல்லே பிஸினஸ் டீல் ஏதோ பேசற மாதிரி இருந்தது'' என்றாள். தீர்க்கமாக வெங்கடேசனின் தந்தையைப் பார்த்துச் சொன்னாள்.

''மாமா, உங்க பிள்ளையைக் கல்யாணம் செய்துக்க எனக்கு இஷ்டமில்லே. உங்களுக்கு மருமகளாக வர எனக்கு இஷ்டமில்லே!''

(தொடரும்)



# குழந்தை உணவு

**கை**க்குழந்தைக்குத் தாய்ப்பாலைக் காட்டிலும் சிறந்ததோர் உணவில்லை. ஆனால் பல காரணங்களால், பல குழந்தைகளுக்குப் போதிய அளவு தாய்ப்பால் கிடைப்பதில்லை. எனவே, பசும்பால் கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இந்தியாவில் எருமை பால், ஆட்டுப்பால் ஆகியவையும் சேர்த்துக் கொடுக்கிறார்கள். இது மட்டுமின்றி முதல் ஆறு மாதத்திற்குப் பின் தாய்ப்பாலில் போதிய அளவு சத்தில்லாததால் பக்குவப் படுத்திய பாலுணவு அவசியம் குழந்தைகளுக்குக் கொடுக்கப்பட வேண்டும்.

குழந்தைகளுக்குக் கொடுக்கும் பால் இன்றியமையாத உணவுப் பகுதிகளான புரதம், கொழுப்பு, மாவுச்சத்து, உலோகம், வைட்டமின் முதலியவற்றைக் கொடுப்பதோடு, அபாயமான விஷக்கிருமிகளிலிருந்தும் குழந்தையைக் காக்க வேண்டும். அன்றியும் சுலபமாக ஜீரணமாக வேண்டும்.

எருமைப்பாலில் கொழுப்பு அதிகம். எனவே, அதனை அப்படியே குழந்தைக்குக் கொடுக்கக் கூடாது. நல்ல பசும்பாலையும், வெண்ணெய் குறைந்த (Toned) எருமைப் பாலையும் கலந்து தண்ணீர் சர்க்கரை மற்றும்

## 1 முதல் 12 மாதக் குழந்தைக்கு வேண்டிய உணவு

| வயது (மாதம்) | உத்தேச எடை (கி. கி.) | பசும்பாலும் எருமைப்பாலும் (அவுன்ஸ்) | தண்ணீர் (அவுன்ஸ்) | சர்க்கரை (அவுன்ஸ்) | தினந்தோறும் எத்தனை முறை ஊட்ட வேண்டும் | பழச்சாறு (அவுன்ஸ்) | மீன் எண்ணெய் (டீஸ்பூன்) | பழம், காய்கறி (அவுன்ஸ்) | தானியங்கள் (அவுன்ஸ்) |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 3.0 | 10 | 5 | ½ | 6 | ½ | ½ | – | – |
| 2 | 3.5 | 12 | 6 | ½ | 6 | ½ | ½ | – | – |
| 3 | 4.0 | 14 | 7 | ¾ | 6 | 1 | ½ | – | – |
| 4–5 | 4.5<br>5.0 | 16–18 | 8 | 1 | 5 | 1½ | ½ | – | – |
| 6–7 | 5.5<br>6.0 | 20–24 | 8 | 1¼ | 5 | 2 | ¾ | ½ | – |
| 8–9 | 6.5<br>7.0 | 22 | 8 | 1½ | 5 | 3 | 1 | 1½ | ½ |
| 10–11 | 7.5<br>8.0 | 26 | 8 | 1¾ | 5 | 3 | 1 | 1½ | 1 |
| 12 | 8.5 | 28 | 8 | 2 | 5 | 3 | 1 | ½ | 1½ |

குறிப்பு: 6 அவுன்ஸ்=1 டம்ளர் (170 கிராம்ஸ்.) 1கப் 6 அவுன்ஸ் (227 கிராம்)

வைட்டமின் 'டி' முதலிய சத்துக்களையும் சேர்த்துக் கொடுக்க வேண்டும். தண்ணீர் கலந்தால் சுலபமாக ஜீரணிக்க முடியும். ஆனால் ஏழெட்டு மாதத்திற்குப் பின் அப்படியே கொடுக்கலாம். குழந்தைகளுக்குத் தேவையான பால், தண்ணீர் சர்க்கரை முதலியன எவ்வளவு என்பதைப் பட்டியலில் காணலாம்.

அதுதவிர ஆறு மாதத்திற்குட்பட்ட குழந்தைகளுக்கு அதிகப்படியான பழச்சாறு ஆரஞ்சு ஜூஸ் அல்லது தக்காளி ஜூஸ் கொடுக்க வேண்டும். இவற்றில் வைட்டமின் 'சி' கிடைக்கும். அன்றியும் வைட்டமின் 'ஏ', வைட்டமின் 'டி' கிடைப்பதற்கு மீன் எண்ணெய் அல்லது இந்த இரண்டு வைட்டமின் கூடிய 'டானிக்' கொடுக்க வேண்டும். ஆறு மாதத்திற்கு மேற்பட்ட குழந்தைகளுக்குப் பட்டியலிலுள்ளபடி மசித்த கீரை, சமைத்த தானியங்கள், பழங்கள் முதலியவற்றைப் படிப்படியாகக் கொடுக்கலாம்.

**பக்குவப்படுத்திய பாலுணவு:–**

பசும்பாலிலிருந்து தயாரிக்கும் பவுடரில் 26% புரதமும் 26% கொழுப்பும் இருக்கும். ஆனால் கடைகளில் விற்பனையாகும் குழந்தை உணவுகளில் புரதம் 14–27%–ம் கொழுப்பு 10–25% பலரகங்களில் உள்ளன. அவற்றை மூன்றாகப் பிரிக்கலாம்.

1. முழுப்பால் உணவு:– வைட்டமின் 'டி' இரும்புச் சத்து சேர்க்கப் பெற்ற முழுப்பால் உணவு.

2. அரைக் கொழுப்புப் பால் உணவு:– வைட்டமின் 'டி', இரும்புச்சத்து சேர்க்கப் பெற்ற அரைக் கொழுப்புப் பால் (half cream) உணவு.

3. தாய்ப்பால் போன்ற உணவு: தாய்ப்பாலைப் போன்ற சர்க்கரைச் சத்தும்புரதமும், விகிதாசாரம் கலந்த பால் உணவு.

குளிர்தேசங்களிலுள்ள குழந்தைகளைக் காட்டிலும் உஷ்ணப் பிரதேசங்களில் உள்ள குழந்தைகளுக்குப் புரதமும், கொழுப்பும் சற்றுக் குறைவாகவே இருக்க வேண்டும். நம் நாட்டுக் குழந்தைகளுக்குப் பால் உணவுகளில் புரதம் 20–22%–ம் கொழுப்பு 18%-ம் இருந்தால் போதுமானது.

திரவ நிலையிலுள்ள பாலைக் காட்டிலும், காய்ந்த பொடி செய்த பால் உணவு இன்றைய தாய்மார்களுக்குச் சௌகர்யமாக உள்ளது. ஏனெனில் நினைத்த பொழுது வாங்கலாம், சுலபமாகப் பல இடங்களுக்கு அனுப்பலாம்: உணவின் தரம் குறையாது: நீண்ட காலம் வைத்திருக்கலாம்: கலப்படம் என்ற பயம் வேண்டியதில்லை, பெரும்பாலான பால் உணவில் வைட்டமின் 'டி'யும், சிலவற்றில் இரும்புச் சத்தும் சேர்த்திருக்கின்றனர். ஆனால், அவற்றில் போதுமான வைட்டமின் 'சி' கிடைப்பதில்லை. எனவே, தாய்ப்பால் இல்லாத குழந்தைகளுக்கு வைட்டமின் 'சி' உணவு பிரத்தியேகமாகக் கொடுக்க வேண்டும், பால் குடிக்கும் குழந்தைகளுக்கு, பால் உணவை அதன் எடையைப் போல 8 அல்லது 10 மடங்கு அளவுள்ள வெந்நீரில் கலந்து கொடுக்க வேண்டும்.

–கே. சுகந்தி



அன்புள்ள மங்கையர் மலர் வாசகர்களுக்கு,



"தமிழர் பண்பாட்டில் கோலங்கள்" என்ற தலைப்பில் நான் மேற்கொண்டுள்ள ஆய்விற்கு —

கோலம் தோன்றிய காலம் — முதலில் கோலத்தைத் தோற்றுவித்தோர் — அதிகம் விரும்பிப் போடும் சாதியினர் — பண்பாட்டு அடிப்படையில் போடுகின்றனரா — தமிழர் முதன் முதலில் பயன் படுத்திய காலம் —

இது போன்ற வினாக்களுக்குப் பதிலும், இன்னும் நீங்கள் அறிந்த விஷயங்களும் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பப்பட்டால் மகிழ்ச்சியடைவேன். நன்றி.


முகவரி:

**வே. சரோஜா,**
பேராசிரியர் — தமிழ்த்துறை,
பாத்திமா மகளிர் கல்லூரி,
மதுரை-625 018






# இதற்கு என்ன செய்வது?

தொகுப்பு: டி. ஆர். ரமேஷ்

**விஜயா சீனிவாசன், பவானி**

எனக்குத் திருமணமாகி ஆறு ஆண்டுகள் முடிந்து விட்டன. குழந்தைப் பேறு இல்லை. இருமுறை டி. அண்ட் சி, டியூப் டெஸ்ட் செய்து கொண்டேன். கர்ப்பப்பை சரியான நிலையில் அமையவில்லை என்று கூறி அடி வயிற்றில் ஆபரேஷன் செய்தார். இது நடந்து இரண்டு வருடங்கள் முடிந்து விட்டன. இதற்குப் பிறகு போன வருடம் ஜூலை மாதம் முதல் முறையாக கருத்தரித்தேன். நாற்பத்தைந்து நாட்களிலேயே மீண்டும் கரு கலைந்து விட்டது. மற்ற எல்லாவித நலன்களும், அமையப் பெற்று இருந்தாலும் குழந்தைப் பேறு இல்லாமை, பலரின் கேள்விகளுக்கு பதில் கூற இயலாமை என்களை வாட்டி எடுக்கிறது. மாத விலக்கு எனக்கு மூன்றரை நாட்களுக்குத் தான் இருக்கிறது. அதிக அளவில் இரத்தப் போக்கு இல்லை. இதுதான் காரணமா? எனக்குக் குழந்தை பிறக்குமா?

**பதில்**

மாத விலக்கின்போது குறைவான ரத்தப் போக்கிற்கும், கருத்தரிப்பதற்கும் சம்பந்தம் இல்லை. பொதுவாகவே எல்லா பெண்களுக்கும் மூன்றிலிருந்து ஐந்து நாட்கள் வரை தான் ரத்தப் போக்கு இருக்கும்.



குழந்தைப் பேறு இல்லாமை, மருத்துவர் கூறியபடி கர்ப்பப்பை கர்ப்பத்தைத் தாங்கும் சக்தி இல்லாமையால் இருக்கலாம். ஆபரேஷன் முடிந்து மீண்டும் கருப்பப்பை வலுவடைந்து விட்டதா என்று சோதித்துக் கொண்டு, இப்போது கர்ப்பம் தரிக்கலாமா என்று மருத்துவரின் ஆலோசனைப்படி நடந்து கொண்டீர்களா என்பது கேள்வியில் இருந்து தெரியவில்லை. உங்கள் இருவரின் ரத்த குரூப் பொருந்தாமையாலும் இது போல நேரலாம். எனவே தகுந்த டாக்டரை அணுகி, முழுமையான பரிசோதனை செய்து கொண்டு சரியான விளக்கம் பெறவும்.



**கமலா, திண்டுக்கல்**

எனக்கு வயது 25. என் முகத்தில், தாடை, மூக்கில் வெண்மையான முள் போன்று காணப்படுகின்றது. இதனால் முகம் மிகவும் சொரசொரப்பாய் உள்ளது. இது எனக்கு மிகவும் வருத்தத்தைக் கொடுக்கின்றது. இது எதனால் ஏற்படுகின்றது?

**பதில்**

சுண்ணும்புச் சத்து மிகுந்த சோப், தோலில் எண்ணெய்ப் பசை இன்மைஇவற்றால் இதுபோல நேரலாம். சோப்பைத் தவிர்த்து, நல்ல கஸ்தூரி மஞ்சள் கலந்த பயத்தம் மாவை உபயோகியுங்கள். நாளடைவில் முகம் மென்மைப்பட்டு சொரசொரப்பு மாறிவிடும்.

**செல்வி, சேலம்.**

என் வயது 26. மிகவும் குண்டாக இருக்கிறேன். நன்றாக பதார்த்தங்களைத் தினி சாப்பிடுவேன். குறைக்கணும் என்று நினைத்துக் கொள்வேன். ஏதாவது தினி கிடைத்துவிட்டால் அதோடு சரி. நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம் என்று விட்டு விடுகிறேன். இப்படியே போய் விடுகிறது. உடற்பயிற்சி செய்வேன். அதுவும் பாதியில் நின்று

மறுபடி தொடரும். எனக்கு இரண்டு வருடங்களுக்கு முன் ஆபரேஷன் ஆனது. அதனால் பலமாக ஏதாவது செய்தால் வயிற்றில் தொந்தரவு வருமோ என்று பயமாக உள்ளது.



**பதில்:**

உங்களுடைய கடிதத்திலிருந்து உங்களுக்கு மனக்கட்டுப்பாடோ, ஒரு தீர்மானத்தைத் தீவிரமாக நிறைவேற்ற வேண்டும் என்ற ஆசையோ இல்லை என்பது தெரிய வருகிறது. ஒருமுகப்பட்ட மனதால்தான் எதையும் சாதிக்க முடியும். பொதுவாகவே பல பெண்கள் உங்களைப் போல 'மூடு'க்கு தகுந்தாற்போல நடந்து கொள்வது என்று இருக்கிறார்கள்.

தினமும் காலையில் குறைந்தபட்சம் பதினைந்து நிமிடமாவது தியானத்தில் ஈடுபடுங்கள். அது உங்களுக்கு நல்ல மன உறுதியைத் தரும்.

உடற்பயிற்சி செய்வதால் உடலுக்கு நன்மையே தவிர தீமையொன்றுமில்லை. எனவே பயப்பட வேண்டிய அவசியமில்லை. நொறுக்குத் தீனி, எண்ணெ, இனிப்பு, இவற்றைத் தவிர்த்து நீடித்த உடற்பயிற்சியும் செய்து வந்தால் எளிதில் உங்கள் பிரச்சினை தீர்ந்து விடும்.



**சத்யமூர்த்தி, கான்பூர்.**

நான் என்னுடைய 'கண்களை சங்கர நேத்ராலயாவிற்கு தானம் செய்ய விரும்புகிறேன். தயவு செய்து அவர்களுடைய முகவரியைத் தரவும்.

**பதில்**

சங்கர நேத்ராலயா,<br>
கல்லூரி சாலை,<br>
சென்னை-6.

**வேதா நீலகண்டம், சென்னை-11.**

என் கணவரின் சிறிய தகப்பனார் தன் பாகத்தை அவரின் நான்கு சகோதரர்களின் கடைசிப் பிள்ளைகளுக்கு உயில் எழுதி வைத்துள்ளார். அதன்படி என் கணவருக்கு நாலில் ஒரு பங்கு உண்டு. ஆனால் அந்தப் பாகத்தை 'மற்ற மூவரும் பிரிக்கவும், விற்கவும், செட்டில்மெண்ட் பத்திரம் எழுதிக் கொடுக்கவும் கூடாது என்று மறுக்கிறார்கள். தற்பொழுது நாங்கள் அந்த வீட்டில் இல்லை. என் கணவரின் பாகத்தைப் பெற அறிவுரை கூறவும்.



**பதில்:**

முதலில் உங்கள் கணவரின் சிறிய தகப்பனார் உயிரோடு இருக்கிறாரா என்பது தெரிய வேண்டும். அப்படி இருப்பின் அவருக்குப் பிறகே உயில் செல்லுபடியாகும்.

சிறிய தகப்பனார் உயிருடன் இல்லையென்றால் இரண்டு விஷயங்களை நீங்கள் செய்ய வேண்டும். முதலில் உயிலை 'நடைமுறைப்' படுத்த வேண்டும். அதற்கு 'புரோபெட்' செய்தல் என்று கூறுவார்கள். அப்படி நடைமுறைக்குக் கொண்டு வந்த பிறகு அந்த உயிலை வைத்துக்கொண்டு நீதி மன்றத்தில் பாகப்பிரிவினை வழக்குத் தொடரலாம்.

அங்கு உங்களுக்கு நியாயம் வழங்கப்படும்.

லதா, திருவிதாங்கோடு

நான் மிக அதிக அளவு குண்டாகவும், உயரம் மிகமிக குறைவாகவும் உள்ளேன். உயரம் அதிகரிக்கவும், உடல் மெலிவதற்குத் தகுந்த மாத்திரையின் பெயரைக் கூறவும்.

பதில்

இதற்கென்று தனியாக மாத்திரைகள் எதுவும் கிடையாது. கடிதத்தில் உங்கள் வயதைக் குறிப்பிடவில்லை.



இருபது வயதிற்குள் இருந்தால் உடற் பயிற்சி, நீச்சல் போன்றவற்றால் உடலை குறைத்து உயரத்தை ஓரளவு அதிகரிக்க லாம். இருபது வயதிற்குப் பின் உயரத்தை அதிகரிக்க முடியாது.

ஓடியாடி வேலைகள் செய்தல், நீச்சல், பந்து விளையாடுதல் போன்றவற்றைச்செய்து அப்படியே இனிப்பு, அதிக உணவு, நொறுக்குத் தீனி, நெய் எண்ணெ போன்ற வற்றையும் நிறுத்தினால் உடல் எடையைக் குறைக்கலாம்.



உஷா, கோயம்புத்தூர்.

நான் எஸ். எஸ். எல். சி. வரை படித்துள் ளேன். தேர்வில், கணக்கில் 31 மதிப் பெண் பெற்றுள்ளேன். இதில் நான் இம்ப்ரூவ்மெண்ட் தேர்வு எழுத யாரிடம் தொடர்பு கொள்ள வேண்டும்?

நான் +2வும் படிக்க விரும்புகிறேன். இதை தபால் மூலம் (கரஸ்பாண்டென்ஸ் கோர்ஸ்) படிக்க நான் எந்த பல்கலைக் கழகத்திற்குப் மனு செய்ய வேண்டும்?

பதில்:

+2 படிக்க பல்கலைக்கழகம் உதவாது. இதற்குத் தபால் மூலம் பாடங்களையும் பெற முடியாது. இயக்குனர் (தேர்வுகள்) கல்வித்துறை, எழும்பூர், சென்னை—8 என்ற விலாசத்திற்கு நீங்கள் +2 தேர்வு எழுத விரும்புவதைத் தெரிவித்து மனு செய்தால் அவர்கள் விண்ணப்பம் அனுப்புவார்கள். தனிப்பட்ட முறையில் படித்தே நீங்கள் தேர்ச்சி பெற வேண்டும். இம்ப்ரூவ்மெண்ட் தேர்விற்குப் பள்ளி இயக்குனரிடம் விண்ணப் பிக்க வேண்டும்.

இ. ஞானசம்பந்தம், பாளையங்கோட்டை

எனக்கு வயது 19. தற்போது எனக்கு பின் மண்டையில் இருந்து முடிகள் கொட்ட துவங்கி உள்ளது. எனது தகப்பனுருக்கு



தலையில் வழுக்கை உண்டு. தாத்தாவிற்கும் வழுக்கை உண்டு. எனவே எனக்கு வழுக்கை விழுவதைத் தடுக்க முடியுமா?

பதில்:

பரம்பரை வழுக்கைக்கு யாரும் ஒன்றும் செய்ய முடியாது. பலரும் பலவித யோசனை களைக் கூறுவர். நீலிபிருங்காதி தைலம், வெங்காயம் தேய்த்துக் கொள்ளுதல், போன்றவற்றால் ஓரளவு வழுக்கை விழும் வேகத்தைத் தடுக்கலாம். முடிகளை வழுக்கை உள்ள இடத்தில் நடும் ஆபரேஷன் முறையும் இப்போது உள்ளது. இது டெல்லி போன்ற இடங்களில் செய்யப்படுகிறது.

# இதோ ஒரு ஹேர்-டை எளிதாக உபயோகிக்கக் கூடியது, நம்பமுடியாத குறைந்த விலையில்!

கோத்ரெஜ் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் உங்களுக்காகவே விசேஷமான கலவை முறையில் தயாரிக்கப்படுகிறது. இந்தியாவில் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் இது ஒன்றே. இது தானாகவே பரவுகிறது. ஆகவே நீங்கள் சிறிதளவே உபயோகித்தால் போதும்! மிகமிக முக்கியம், நீங்கள் நம்ப முடியாத அளவுக்கு குறைவான விலையில் இது கிடைக்கிறது!



**கலப்பது சுலபம்**

இந்தப் பவுடரை சிறிதளவு நீருடன் கலக்கவும். உபயோகிப்பதற்கு இப்போது தயார்.



**உபயோகிப்பது சுலபம்**

இதை சிரமமின்றி இலேசாகத் தடவுங்கள், தானாகவே ஒரே சீராக, மென்மையாக முடியிற் பரவி விடுகிறது.

உங்கள் கேசத்துக்கு இளமையான அழகுத் தோற்றத்தைத் தருகிறது!



இந்தியாவில் தானாகவே பரவும் பவுடர் ஹேர் டை இது ஒன்றே.




Godrej

பவுடர்
ஹேர்-டை
கான்ஸென்ட்ரேட்

**தரமோ நீங்கள் நாடுவது, விலையோ உங்களுக்குப் பிடித்தமானது.**

CASGS 108-244 TAM

# எங்கள் ஆதங்கம்!

என் பெண் தி. நகரில் உள்ள ஒரு பள்ளியில் எட்டாவது வகுப்புப் படிக்கிறாள். அண்ணாநகரிலிருந்து பல்லவன் பஸ்ஸில் பள்ளிக்குச் செல்கிறாள். அவளுடன் சீர் வரிசை போல ஒரு பை நிறையப் புத்தகங்கள், கையில் எடுத்துச் செல்லும் டிபன் டப்பா, வாட்டர் பாட்டில், டவல் அடங்கிய ஒரு கூடை. புத்தகப் பையில் இடம் இல்லாததால் கையில் ஏறும் லாங் சைஸ் நோட் புக்குகள் இத்தனையும் செல்ல வேண்டும்.

ஒரு நாள் நான் கேட்டேன்: ''ஏன் வல்லி, இத்தனை புத்தகங்களையும் போட்டு அந்தக் கூடையிலே இப்படி அடைக்கிறயே, டைம் டேபிள் கிடையாதா? எங்கே காட்டு பார்க்கலாம்! என்னடி இது? டைம்டேபிளில் இல்லாததெல்லாம் உன் கூடையிலே இருக்கே ஹிஸ்டரி பீரியடே இல்லே. நீ ஹிஸ்டரி புக், நோட், மேப், டிராயிங் எல்லாத்தையும் எடுத்துண்டிருக்கே. சையன்ஸ் பீரியட்ல கெமிஸ்ட்ரி என்று போட்டிருக்கு. நீ பயாலஜி பிஸிக்ஸ் எல்லாத்தையும் எடுத்திண்டிருக்கியே! டைம்டேபிள் என்ன, அழகுக்குக் கொடுத்திருக்காளா? அது பிரகாரம் எடுத்துண்டு போக வேண்டியதுதானே?''

''போம்மா, எங்க மிஸ் பத்தி உனக்குத் தெரியாது. பேருக்குத்தான் டைம் டேபிள். பிஸிக்ஸ் பீரியட்லே கெமிஸ்ட்ரி எடுப்பா. கெமிஸ்ட்ரி பீரியட்லே பயாலஜி எடுப்பா. இரண்டு மூணு சப்ஜெக்ட்டுக்கு ஒரே மிஸ் தான். திடீரென்று இங்கிலீஷ் பீரியட்டில் ஹிஸ்டிரி முடிச்சுடறேன் அப்படின்னுவா. எப்ப எது கேப்பான்னு சொல்ல முடியாது. கொண்டு வராதவங்களுக்கு டெஸ்ட் மார்க், எக்ஸாம் மார்க் இதிலே 'மைனஸ் பண்ணிடுவா. அதுக்குப் பயந்துண்டுதான் நாங்க தினம் எல்லாத்தையும் தூக்கிண்டு போறோம். எங்களால் மட்டும் இந்த பஸ்ஸில கும்பல்ல முடியறதா என்ன. கஷ்டமாத்தான் இருக்கு. என்ன செய்யறது?''

என் பெண் சொன்னதைக் கேட்ட பிறகு அவளுக்கு என்ன பதில் சொல்வது? எதற்காக டைம் டேபிள் என்று பள்ளியில் வைக்கிறார்கள்? ஒரு நாளைப் போல பொதி மாடு போல இப்படிச் சுமந்து கொண்டு சென்றால் சிறிய வயதில் கூன்விழ வேண்டியதுதான்.

இனைப்படி பாடப் புத்தகங்கள் தவிர என் பெண் அட்லாஸ், ரன் அண்டு மார்டின் கிராமர் புக், டிக்ஷனரி, இருக்குறள் புத்தகம் இத்தனையும் எடுத்துச் செல்கிறாள். தினம் கண்டிப்பாகக் கொண்டு வர வேண்டும்.

அடுத்த பிரச்னை ஹோம் ஒர்க். எப்போது பார்த்தாலும் எழுத்து, எழுத்து, எழுத்து



தான்; வாய் விட்டுப் படிப்பது என்பதே கிடையாது. அதற்குத்தான் நேரமே இருப்பதில்லையே. ஹோம் வொர்க் தவிர கிளாஸ் வொர்க் கணக்கையும் வீட்டில் செய்கிறார்கள் இப்படிப் படிக்க நேரம் இல்லாமல் எழுதிக் கொண்டே இருப்பதால்தான் ஆங்கிலப் பள்ளிக்கூடங்களில் படிக்கும் குழந்தைகள் கூட சரளமாக ஆங்கிலம் பேச முடிவதில்லை. வார்த்தை உச்சரிப்பு சில சமயங்களில் சரியாக இருப்பதில்லை. இன்று 100க்கு 75 சதவீதம் சிறிய வயதிலேயே கண்ணாடி போட்டுக்கொண்டிருப்பதற்குக் காரணம் இந்த அதிகமான எழுத்து வேலையும் அளவுக்கு மீறித் திணிக்கப்படும் பாடங்களின் கனமும் தான் என்பது என் கருத்து.

வீட்டில் படித்த பெற்றோர் இருந்தாலும் கூட இன்றைய பாடத் திட்டங்கள், குறிப்

பாகக் கணக்கு, அவர்களுக்கே புரிவதில்லை. ஆசிரியர்கள் பொறுமையாக ஒரு முறைக்கு இருமுறை தெளிவாக நடத்த வேண்டும். எதற்காகவாவது எழுந்து நின்றாலே ''ஸிட் டவுன். வொய் ஆர் யு ஸ்டாண்டிங்?'' என்று கத்தினால் மாணவர்கள் பயந்து, 'ஒன்று மில்லை மிஸ்!' என்று உட்கார்ந்துவிடுகிறார்கள். இதில் ஆசிரியரின் பங்கு அதிகமானது. அவர்தான் பொறுமையாகக் கேட்டுப் புரியாததை புரிய வைக்க வேண்டும்.

சென்ற வாரம் நடந்த வகுப்பு டெஸ்டில் என் பெண் 50 மார்க் வாங்கியிருந்தாள் ஒரு பாடத்தில். விடைகள் எல்லாம் சரியாகத்தான் எழுதியிருக்கிறாள். ஆனால் மார்க் இரண்டு, இரண்டரை என்று போட்டிருக்கிறார்கள். போய் கேள் என்று சொன்னால் அதற்கும் பயம். ''நோட்ஸ்ல இருக்கறதை எழுதினாத்தான் எங்க மிஸ் மார்க் போடு வாங்க.'' என்று சில பெண்கள் சொல்வதையும், ''புக்கில என்ன கொடுத்திருக்கோ அதுதான் எழுதணும். நம்ப ஒன்லே எழுதினா மார்க்கே போட மாட்டாங்க'' என்று சில பெண்கள் சொல்வதையும் நான் கேட்டிருக்கிறேன்.

சரி, நாமாவது ஒரு நாள் மத்தியானம் பள்ளிக்குச் சென்று வகுப்பு ஆசிரியர்களைச் சந்தித்து இந்தப் பிரச்னைகளைப் பற்றி விவாதிக்கலாம் என்றால், பெண் அலறுகிறாள். ''ஐயோ! நீ பள்ளிக்கூடத்துக்கெல்லாம் வராதேம்மா! உனக்கென்ன நீ சொல்லிட்டுப் போயிடுவே. அப்புறம் எங்க மிஸ் என்னைத் திட்டுவா. வேண்டாம்மா!'' இது எப்படி இருக்கிறது?

ஒரு மானிட வாழ்க்கையில் பள்ளிப் பருவம் என்பது எவ்வளவு இனிமையானது! மாணவர்களின் பருவம்தான் மகிழ்ச்சியான கவலையில்லாத பருவம் என்று பெயர். ஆனால் இன்றைய மாணவர்கள் படிப்பின் சுமையால் வெறும் எழுத்துக் கூலிகளாக மாறிக் கொண்டு வருகிறார்கள். சுய சிந்தனை இல்லாமல் வளர்க்கப்படும் இவர்களின், நாட்டின் எதிர்காலம்தான் என்ன?

—ராஜி ரகுராமன்

# இம்மாத இல்லத்தரசி போட்டி

**பொருள்:** கூட்டு வகைகள்

**முடிவு தேதி:** 15-11-83.

## சமையல் கூப்பன்

................ என்று தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

இரவெல்லாம் தூக்கத்திலும் விழிப்பிலும், தேம்பலிலும், திடுக்கிடலிலுமாய் தவித்துப் புரண்டாள். எழுந்தாள், நடந்தாள். அறையில் விச்ராந்தியாகப்படுத்திருந்த அப்பாவைப் பார்த்தாள். வாழ்க்கைத் தரத்தில் உடம்பின் வளத்தை இழந்து வறுமையின் கைப்பிடிக்குள் சிக்கிவிட்ட வற்றிய மேனி. அவரிடம் நிதானம், அன்பு, இரக்கம் எல்லாம் விடைபெற்றுக் கொண்ட உணர்வுகள். கோபத்தை மட்டுமே விகவாமித்திரரிடமிருந்து ஒட்டுமொத்தமாகக் குத்தகை எடுத்திருந்தார் அவர். பாவம்! எல்லாம் அவரால் பிறப்பிக்கப்பட்ட உயிர்களுக்காகத்தான்.

இதோ அம்மா... அந்தத் தெய்வத்தின் பொறுமை, தியாகம்தான் அங்கே குடை நிழலாகக் கவிந்து ஆறுதல் அளிக்கிறது. அவளது அடக்கப்பட்ட கண்ணீரும், ஒடுக்கப்

# என்று முடியும் இந்தத் துயரக் கதை

கோமகள்



பட்ட அபிலாஷைகளுமே அந்தக் குடும்பத்தின் அஸ்திவாரமும், ஆணிவேரும்.

இதோ இரண்டு அக்காக்கள். பருவத்தின் விகசிப்பில் பாவாடை, தாவணிப் பருவம் மாறி, புடவைக்குள் பொக்கிஷங்களாகப் பாதுகாக்கப்படுபவர்கள். நோக்கும், இலக்கும் எட்டாமல் இழுபறி செய்தாலும் நம்பிக்கைக் கனவுகளில் நளின நீச்சலிடும் அழகின் விஸ்வரூபங்கள். அப்பாவின் மனத்தில் நெருப்புக் கோளங்கள். அம்மாவின் நெஞ்சில் தீப்பந்தங்கள்.

இவர்களோடு கூட அவளும் ஒரு தீயாகவோ, பெரு நெருப்பாகவோ அல்லாமல் ஒரு எரிமலையாய் உருமாறி நிற்கிறாள் என்ற பிரக்ஞை அப்பா, அம்மா இருவருக்குமே தெரியாது. ஏனென்றால், அவள் கடைசிப் பெண். கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு வேலையில் அமர்ந்து புரொபேஷன் பீரியட்டைத்தாண்டிவிட்ட அக்காக்களைப் போலில்லாமல் கல்லூரிக்குள் இன்னும் ஓராண்டு வளைய வரவேண்டியவள்!

இவளுக்கு இப்படி ஒரு அவசரமா? இப்படி ஒரு ஆசையும், துணிச்சலுமா?

முந்தின நாள் மாலை அம்மா கோவிலுக்குப் போயிருந்தபோது அக்காக்கள் காபி குடித்த ஆசுவாசத்துடன் வாரப் பத்திரிகைகளோடு தூணில் சாய்ந்து கொண்டு பெருமூச்சுக்களை ரகசியமாக விட்டுக் கொண்டிருந்தபோது...

இவள் ஒரு பேப்பரை எடுத்து முதன் முதலாக தன் அப்பா, அம்மாவுக்கு தபாலில் போடாத ஒரு கடிதத்தை எழுதி முடித்தாள். தனது தெய்வீகக் காதல் பற்றி, தான் கைப்பற்றப்போகும் ராஜசேகரன் ஒரு செல்வந்தன் என்பது பற்றி, அவன் வீட்டில் மறுப்பு இருப்பதால் அவனோடு தனியே வாழ விரும்பும் அவன் எண்ணம் பற்றி, தன் வீட்டில் நிச்சயம் மறுப்பு வரும் என்பதால் மௌனமாகவே தான் புறப்படுவது பற்றி அதற்காக மன்னிப்பை வேண்டி...

கடிதத்தை எழுதியிருந்த விதம் அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. இது தன் பெற்றோர்களின் நியாயமான தீர்ப்பைப் பெற்றுத் தருமென்ற நம்பிக்கை இருந்தாலும் ஒரு பயம். கடிதத்தை பிளவுஸிலிருந்து எடுத்து அக்காவின் மேஜை மீதிருந்த கண்ணாடி பேப்பர் வெயிட்டின் கீழ் வைத்தாள். முதலில் அக்கா பார்ப்பாளா? என்ன நினைப்பாள்? மனசில் ஒரு கலவரம்.

அம்மாவின் கண்ணீர்... அந்த மௌனக் கண்ணீர்... அவள் கண்களில் நீர் கோர்த்து நிறுக்க வைக்கும். ஆனால் அதை வழிய விட மாட்டாள். இந்த நினைப்பில் நெஞ்சில் ஒரு கேவல். அப்பா வழக்கம் போல் குதிப்பார். ஆர்ப்பாட்டம் பண்ணுவார். அடுத்த வீட்டு வரதராஜனைப் பார்த்ததும், அவமானத்தால் சிறுத்துப் போவாரே...

இதுநாள்வரை மென்மையான போதையாக மனத்தில் பூத்து நர்த்தனமாடிக் கொண்டிருந்த காதல் மலர் மெல்ல நடுநடுங்கியது. 'ஓ! டியர் ஃபிளவர் ட்ரம்பின்



நாட்' என்று வேர்ட்ஸ் வொர்த் கவிதை வரிகளைத் தன் காதல் மன்னருக்கு ஆறுத லாக முணு முணுத்தாள்.

கடைசி விநாடியிலும் நழுவி விழமுயலும் துணிச்சலைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டு இருளின் நிழல்களாகக் கிடந்த அந்த நான்கு பேரையும் ஒருசேரப் பார்த்துவிட்டு கதவை மெல்லத் திறந்தாள்.

இந்த வீட்டை நான் துறக்கிறேன் என்ற நினைத்தபோது ஒரு சின்ன அழுகை கோர்த்த போது, எனக்குச் சொந்தமான வீடு ஒன்றை அமைக்கப் போகிறேன் என்ற மகிழ்ச்சியில் அதைக் கரைத்தாள்.

கபாலீஸ்வரர் கோயிலின் உச்சி விளக்கும் குளத்தின் பரந்த நீர்ப் பரப்பும் வெறிச்சிட்ட வீதிகளும் பால்கேன்களைச் சைக்கிளில் வைத் துச் செல்லும் ஒருசில பையன்களும்... எல் லோருக்கும் வாழ்க்கை அவசியம்....

'என்னைப் புரிந்தவர்கள் என்னை ஆசிர் வதிப்பார்கள்' என்று முணு முணுக்கும் போதே ராஜசேகர் நிற்பது புரிந்தது. அவ

---

**கையில் நகக்சுத்தியோ காயமடைந்து வீங்கினாலோ கொப்பளித்துக் குத்து வலி எடுக்கிறதா? ஒரே நாளில் சீழ் பழுக்க வழி இதோ:-**

**கறுப்பு எள்ளை சிறிதளவு ஜலம் விட்டு, வறளிமஞ்சளைச் சேர்த்து மிக வும் நைஸாக அரைத்து வைத்துக் கட்டுங்கள். எள்ளில் உள்ள எண் ணெயும் மஞ்சளும் சீழ் பழுத்து உடையவும் புண்ணை ஆற்றவும் சிறந்த மருந்து. - சித்ரா**

---

னுக்குத் தெரிய வேண்டும் என்பதற்காகவே அவன் ஒரு விளக்குக் கம்பத்தருகே நிற்கிறான் என்று புரிந்து கொண்டபோது ஒரு புன் னகையில் அவளது குழப்பங்கள் விடைபெற் றன. அவனை நெருங்கிவிட்டபோது தனது பிறந்த வீட்டுப் பந்த பாசங்கள் பழசாகிப் போனாற்போல் உணர்ந்தாள்.

''எங்கே நீ வரமாட்டாயோ என்று பயந்தே போனேன்'' என்றான் அவன் மெல்லிய கிசுகிசுப்புடன்.

''நானும்தான் பயந்தேன்...'' அவளது நிம்மதிப் பெருமூச்சு.

''என்னது பையிலே....''

''என்னோட ரெண்டு செட் டிரஸ், கொஞ் சம் பணம், எனது சங்கிலியும், வளையலும்.''

''ஒண்ணுமே வேண்டாம்னு சொன்னே னில்லே....?''

''என்னைச் சொல்லிட்டு நீங்க என்ன பெரிய பெட்டியாய்....''

''நான் வெறுங் கையா வர முடியுமா? இந்த ராணியைக் காப்பாத்தற ராஜா நான் தானே... உம்... உம்... விடியறது... புறப் படலாமா?''

''நிச்சயமா!''

ஆட்டோவின் குலுக்கலில் அவர்கள் அண் மையை ரசித்தார்கள்.

சென்ட்ரலில் இறங்கி, தமக்குத் தெரிந்த வர்கள் யாராவது இருப்பார்களோ என்ற அச்சத்தில் அவசர அவசரமாய் தங்களை கோவை எக்ஸ்பிரஸில் திணித்துக்கொண்ட போதும், வண்டி புறப்பட்டதும், வாழ்க் கையின் தாகங்கள் பற்றி, எதிர்கால திட் டங்கள் பற்றி அவர்கள் பரிமாறிக்கொண்ட எண்ணங்கள்தாம் எத்தனை?

நடக்க வேண்டியவைகளைப் பின்னுக்குத் தள்ளி, உணர்ச்சிகளின் தீவிரத்துக்கே முத லிடம் தந்து அன்பின் வெளிப்புகளை, பரிமாற்றங்களை, பருவத்தின் ஈடுபாடு களை நிறைவேற்றிக் கொண்ட பின்தான் தேறாட்டல் பின் பயமுறுத்தியது.

ஒரு சின்ன வீடாகப் பார்த்து, ஒரு வேலை தேடிக் கொண்டு தாங்களே சமைத்துச் சாப்பிட்டு முறையாக ஒரு கோயிலிலாவது மாலை மாற்றிக் கொள்ளாமல்... தேனிலவுத் தம்பதிகளைப் போல் எத்தனை குதூகலமாய்.. முறையாய் வாழும் உரிமை பெற்றாற்போல் எத்தனை பாதுகாப்புணர்ச்சியோடு... நிகழ் கால பிரக்ஞையே இல்லாமல் ஒரு கன வுலகில் சஞ்சரித்துக் கொண்டு, குளிர் காலப் பறவைகள் போல் ஒடுங்கிக்கொண்டு..

தமிழ் நாளிதழில் ''காணவில்லை'' என்று அவர்களது புகைப்படங்கள் வந்தபோது தான் இருவருக்கும் விழிப்பு வந்தது. இரண்டு உள்ளங்களில் மணமயமான கனவுகள் சற்றே கலைந்தன. கவர்ச்சிகள் ஒரு நிலைப்பட்டபோது கலவரம் ஆரம்பித்தது.

வாழ்க்கை என்பது வேறு... இன்றைய தரிசனம் வேறு... ஓடிவந்தது பெரிதில்லை. இணைந்தது பெரிதில்லை.

இவைகள் எல்லாம் கேள்வி தெரியாமல் எழுதப்பட்ட விடைகள்! அந்தக் கேள்வியை இப்போது தெரிந்து கொண்டால் பதிலும் புரிந்துவிடும். ஆனால் அது எப்படி? அவள் தேம்பினாள். விம்மியவாறே அவனது மார் பில் புகலிடம் தேடினாள். அவனும் ஆறுதல் படுத்தத் தெரியாமல் கண் கலங்கினான்.

காலை உணவை அவர்கள் அறைக்கே கொண்டுவந்த சர்வர்தான் இவர்களைக் காட் டிக்கொடுக்கும் புண்ணியத்தைக் கட்டிக் கொண்டான். தினத்தாளின் ஒரு பக்கத்தில் பிரசுரமாகியிருந்த புகைப்படங்களை ஒத் திடவே அவன் அவசரமாக வந்தான். சரி பார்த்த திருப்தியில் ஏக உபசரிப்போடு அவர்களிடம் விடைபெற்றவன் ராஜ சேகரனுக்காக அவன் அப்பா அறிவித் திருந்த ரூபாய் இரண்டாயிரத்தையும் அவள் அப்பா அறிவித்திருந்த 'தகுந்த சன்மானத் தை'யும் மனத்துக்குள் கூட்டியவாறே போலீஸ் ஸ்டேஷனை அடைந்தான்.

சரியாகப் பத்து மணிக்கு அவர்களைப்- போலீஸ் சூழ்ந்தது.

அவர்கள் அறையை லாட்ஜ் மக்கள் சூழ்ந் தனர். பத்திரிகைகளுக்குப் பரபரப்பான நீனி.


துணிகளின் தூய வெண்மைக்கு
ரீகல்
சொட்டு நீலம்
500 ML, 250 ML, 100 ML, 60 ML, 40 ML.
ஆகிய அளவுகளில் எங்கும் கிடைக்கும்
REGAUL
LIQUID ULTRA BLUE
INDIA TRADING AGENC
100 ML.
PHONE
24330 34299
THE SOUTHERN INDIA TRADING AGENCIES,
POST BOX NO. 133.
COIMBATORE-1.
"வியாபார விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன"

போலீஸ்ஸ்டேஷன்வராந்தாவில் இருவரும் அமர்ந்திருந்தபோது அவன் அவமானத்தால் தலை குனிந்திருந்தான். அவள் பயத்தால் முகம் வெளுத்துக் கண்களில் அழுகை கோர்க்க அமர்ந்திருந்தாள். ஒரு கேலிப் புன்னகையோடு மற்றவர்கள் அவளைப் பார்த்தபோது உடம்பெல்லாம் முள்ளாய் உறுத்தியது.

அகப்பட்டுக் கொண்டோமே 'அப்பா கொன்றுவிடுவாரே' என்று அவளும்' அப்பா புலி மாதிரி பாய்வாரே' என்று அவனும்...

''என் மிஸ்டர் ராஜசேகர், உங்களில் யார் இந்த முடிவுக்குத் தூண்டியது?''

''நாங்கள் இருவரும் எடுத்த முடிவுதான் இது.''

''இப்போது என்ன செய்வதாக உத்தேசம்?''

''நாங்கள் திருமணம் செய்து கொள்ளப் போகிறோம்.''

'கொல்'லென்ற சிரிப்பொலி அவர்கள் உடம்பை எரிப்பதைப் போலச் சுட்டது.

''ராஜ்! எனக்குப் பயமா இருக்கு....''

அவளது முணு முணுப்பு.

''பத்மா! அப்பா வந்ததும் நான் கேட்கப் போகிறேன். பயப்படாதே!''

''என்ன அதற்குள் உங்களுக்குள் பேச்சு?''

மீண்டும் கேலிப் புன்னகைகள்.

''எங்களை என்ன செய்யப் போகிறீர்கள்?''

''உங்கள் அப்பாவுக்கு எஸ். டி. டி. கால் போட்டோம். அவரது குடும்ப நண்பர் உங்களைக் கூப்பிட்டுப் போக வருகிறார்...''

''இவள்....?''

''இவங்க பெற்றோருக்குத் தகவல் போச்சு. இவங்க சித்தி இப்ப வருவாங்க...''

இப்படி இன்ஸ்பெக்டர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஒரு நடுத்தர வயதுப்பெண் ''எங்கே அவ, குடிகேடி, பழிகாரி....!'' என்று கூச்சலோடு உள்ளே வந்தாள்.

''சித்தி....!'' என்று மெல்லக் கூவினாள்.

''சீ! சித்தின்னு என்னைக் கூப்பிடாதேடி. நல்ல குடும்பத்திலே புல்லுருவி பாய்ஞ்சா மாதிரி நீ எங்கே இருந்துடி வந்து முளைச்சே?''

''அம்மா கூச்சல் போடாதீங்க. பத்மா எந்தத் தப்பும் பண்ணிடலே!'' என்று ராஜசேகரன் குறுக்கிட...

''போடா! உன்னைப் போல போக்கிரிப் பசங்கதான்டா பொம்பளைப் பிள்ளைகளைக் கெடுக்கறது....'' என்று சித்தி பாய...

இன்ஸ்பெக்டர், ''அம்மா! உட்காருங்க. உங்க முடிவைச் சொல்லுங்க...'' என்றார்.

''முடிவா? இவ அப்பா தகவல் அனுப்பியிருக்கார். இவளை யாரோ கடத்திக்கிட்டுப் போயிருப்பான்னு நினைச்சாராம். இவ இவனோட ஓடிவந்துட்டான்னு தெரிஞ்சதுமே வீட்டுப் பக்கமே இவ வரப்படாதுன்னுட்டார். போலீஸ் என்ன செய்யணுமோ அதைச் செய்துக்கலாம்.''

''சித்தி!'' பத்மா அலறினாள்.

''பத்மான்னு ஒரு பொண்ணு எங்க குடும்பத்தில பொறக்கலேன்னு தலை முழுகிடறோம்.''

நெருப்பை வாரிக் கொட்டிவிட்டு சித்தி விலகிவிட்டாள். இல்லை, பத்மா தன் குடும்பத்திலிருந்து விலக்கப்பட்டு விட்டாள். ராஜசேகரன் என்ன செய்வதென்று தெரியாமல் நெளிந்தான்.

வரதராஜுலு ஸ்டேஷனுக்குள் நுழைந்ததும் ''ஹலோ'' என்று அவனைக் கைகுலுக்கினார். ''டோன்ட் ஒர்ரி, திஸ் அன்ட் ஆல் ஆர் பாஸிங் க்ளெய்ட்ஸ்!''

''அங்கிள்! நான் இவளை விட்டுட்டு வர மாட்டேன்.''

வரதராஜுலு அவனைத் தட்டிக் கொடுத்தார். ''காம் யுவர்ஸெல்ஃப்! நான் எப்பவும் உங்க பக்கம்தான். பார்த்டைம் பீயிங் நீ என்னோடு புறப்படு. இந்தப் பெண்ணை பத்திரமாக ஒரு இடத்துக்கு அனுப்ப ஏற்பாடு செய்கிறேன். வித்தின் செவன் டேஸ், உனக்கும் இவளுக்கும் கல்யாணம், என்னை நம்பறியா ராஜா?''

''தேங்க்யூ அங்கிள்!''

இதே வார்த்தைகளை அவளும் மனப்பூர்வமாக முணு முணுத்தாள்.

ராஜசேகர் கிளம்பும்போது பத்மாவைப் பார்த்தான். ஒரு வாரமாக, உடலும் உள்ளமும் ஒருசேரத் துய்த்த இன்பங்கள் நினைவில் ஊசலாடின. அவை சட்டென தாகத்திற்கு எட்டாத கானலாக மாறியதை எண்ணி ஒரு திடுக்கிடல் ஆட்கொண்டது.

''அம்மா பத்மா! உன்னைத் தகுந்த இடத்தில் பாதுகாப்பாக வைத்திருப்பார்கள். நான் எல்லா உதவியும் செய்கிறேன். வரட்டுமா?'' அவளையும் ஆறுதல் படுத்திவிட்டுக் கிளம்பினார் வரதராஜுலு.

ராஜசேகரன் அவளைப் பிரிந்து... பிரிந்து தூரச் சென்று கொண்டிருந்தான்.

அவளிடம் ஒரு விம்மல் பீறிட்டது.

இரவு அவள் வந்து சேர்ந்த இடம் அபய இல்லம். ஆதரவற்ற அனாதைத் தன்மை. களங்கப்பட்டு விட்டதற்கான புறக்கணிப்பு. அநேகமாக இனி அதுதான் அவளுடைய நிரந்தரமான இடம்.

ராஜசேகர் பட்டு மெத்தையில் புரள்கிறான். பழவகை, பால் உண்கிறான். ராஜ உபசாரத்தில் அப்பா திக்குமுக்காட வைத்து தன்னையொத்த ஒரு பெங்களூர் தொழிலதிபரின் மகளை அவன் மனைவியாக்கும் முயற்சிக்குப் பேச்சு வார்த்தை நடத்துகிறார். அநேகமாக அந்த இடம் முடிந்து விடும்.

இந்த நாட்டில் ஆணும் பெண்ணும் சமமாம்! எல்லோரும் பேசிக் கொள்கிறார்கள்!

---

**வெங்காயத்தைச் சுட்டு அத்துடன் மஞ்சளையும் சிறிது நெய்யையும் விட்டுப் பிசைந்து கட்டிகளின் மீது கட்டினால் கட்டிகள் பழுத்து உடைந்துவிடும்.**

**-எஸ். விஜயா சீனிவாசன்**

---



இம்மாத இல்லத்தரசி போட்டிக்கான பரிசுக் குறிப்புக்களைத் தேர்ந்தெடுத்தவர்கள்:

**திங்கள் அறநிலையச் சங்கம்,**

**சென்னை-18.**

**தவலை**

பரிசு வழங்குபவர்:

**S. P. பாலசுப்பிரமணியன்**

**முருகன் ஸ்டோர்ஸ்**

95, உஸ்மான் ரோடு,

தி. நகர், சென்னை-17.



**காய்கறி ஜாம்**

முதல் பரிசு: **தவலை**

காரட் 100 கிராம்
பீட்ரூட் 100 கிராம்
தக்காளி 100 கிராம்
உருளைக்கிழங்கு 100 கிராம்
சிட்ரிக் ஆஸிட் அரை டீஸ்பூன்
சர்க்கரை 200 கிராம்.

காய்களை தோல்சீவி, மாங்காய் துருவியில் துருவிக் கொள்ளவும். தக்காளியைச் சிறு துண்டங்களாக நறுக்கிக் கொள்ளவும். எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து அரை கப் தண்ணீர் சேர்த்து நன்றாக வேக விடவும். வெந்த பிறகு எடுத்து மிக்ஸியில் போட்டு நன்றாக மசிய அரைக்கவும். பிறகு அரைத்த விழுதில் சர்க்கரையும், சிட்ரிக் ஆசிடும் சேர்த்து அடுப்பில் வைத்து ஜாம் பதம் வரும் வரை கிளறவும். பிறகு இறக்கி பாட்டில்களில் எடுத்து வைக்கவும். இது ரொட்டி, சப்பாத்தி, பூரி முதலியவற்றிற்கு தொட்டுக் கொள்ள நன்றாக இருக்கும்.

-திருமதி கார்த்தி, சென்னை-90.

**மிக்ஸட் கிரேப் ஜாம்**

இரண்டாம் பரிசு: **ப்ளாஸ்க்**

**தேவையான பொருட்கள்:**

நன்றாகப் பழுத்த திராட்சை 200 கிராம்.
பன்னீர் திராட்சை — 100 கிராம்
ஹைதராபாத் பச்சை திராட்சை 100 கிரா







புளிப்பில்லாத சிறிய பச்சை திராட்சை— 100 கிராம்
சர்க்கரை — 500 கிராம்.
தண்ணீர் ஒன்றரை டம்ளர்.
திராட்சை பழ எஸன்ஸ் (டோனேவின் — அரை ஸ்பூன்
மெடோரெட்கலர் அல்லது ஆரஞ்சு ரெட் கலர் கொஞ்சம்
ஸோடியம் பென்ஸாயேட் ஒரு சிட்டிகை
சிட்ரிக் அமிலம் ஒரு சிட்டிகை.

**செய்முறை:**

திராட்சைப் பழங்களைத் தனித்தனியாக உதிர்த்து சுத்தமாக அலம்பவும். பின், ஒவ்வொரு பழமாக எடுத்து அழுத்தினால் சதையும், விதையும் தோலை விட்டு வந்து விடும். விதையை எடுத்து விட்டுச் சதையை ஒரு பாத்திரத்தில் போட்டுக் கொள்ளவும். ஹைதராபாத் திராட்சையிலுள்ள கொட்டையை எடுத்துவிட்டு, அதையும், சிறிய பச்சை திராட்சையையும் ஈரம் இல்லாத மிக்ஸியில் அரைத்துக் கொள்ள வேண்டும். கருப்பு திராட்சை பன்னீர் திராட்சை தோலை ஒரு கரண்டி தண்ணீர் விட்டு கசக்கிப் பிழிந்து விட்டு அந்தச் சாற்றில், அரைத்த திராட்சையின் சதைப்பாகத்தையும் சேர்த்துக் கொள்ளவும்.

சர்க்கரை, தண்ணீர், சிட்ரிக் அமிலம் மூன்றையும் ஒரு வாய் அகலமான கனமான பாத்திரத்தில் போட்டு, கம்பிப் பாகு காய்ச்ச வேண்டும். அதில் திராட்சைக் கலவையைப் போட்டு நன்றாகக் கிளற வேண்டும். ஜாம் பதம் வந்தவுடன் அடுப்பிலிருந்து இறக்கவும். கலர், எஸன்ஸ், ஸோடியம் பென்ஸாயேட் இவைகளை எல்லாம் ஜாமுடன் நன்கு கலக்கும்படி கிளறி இறக்கவும்.

ஜாம் பதம் பார்க்கும் முறை:—

ஜாமை ஒரு துளி தட்டில் விட்டால் அது ஓடக் கூடாது. சிறிது ஆறிய உடன் விரலினால் தொட்டால் சுருக்கம் வரும். ஜாம் கொதிக்கும் போது தண்ணீர் வற்றி மேலே குமிழ்களாக கொதிக்க ஆரம்பித்த உடன் பதம் பார்த்து இறக்கவும். ஜாம் சரியான பதம் வராமல் இறக்கி விட்டால் சீக்கிரம் கெட்டுவிடும். ஜாமை செய்த பாத்திரத்திலேயே அதிக நேரம் வைக்கக் கூடாது. ஜாம் பாத்திரச் சூட்டில் இறுகிவிடும்.

—திருமதி சீதாலக்ஷ்மி, ஸ்ரீரங்கம்

## மல்டி ஃப்ரூட் ஜாம்

மூன்றும் பரிசு: டார்ச்

அன்னாசிப்பழம் (சின்னது) — 1
சாத்துக்குடி (அ) ஆரஞ்சு — 6
சப்போட்டா — 12
பப்பாளி — 1
கருப்புதிராட்சை — கால் கிலோ
(ப்ளம் — 10
(செர்ரி — 12
ஆப்பிள் (பெரியது — 4
தக்காளி (பழம் — கால் கிலோ
வாழைப்பழம் — 6
பலாப்பழம் (பெரிய சுளை — 6
மாம்பழம் — 3
இஞ்சி — 100 கிராம்
எலுமிச்சம்பழம் (பெரியது — 6
உப்பு — கால் டீஸ்பூன்.
லெமன் எல்லோ — 2 சிட்டிகை
மாங்கோ எஸன்ஸ் — 2 டீஸ்பூன்
சோடியம் பென்சோனேட் — கால் ஸ்பூன்

**செய்முறை :**

அன்னாசிப் பழத்தை நன்றாகத் தோல்சீவி சிறிய துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். ஆரஞ்சு, சபோடா, பப்பாளி முதலிய வற்றை தோலை நீக்கி விதையை நீக்கவும். மாம்பழம் தோலை எடுத்து, கொட்டையை நீக்கித் துண்டு போடவும். திராட்சை, ப்ளமின் விதையை நீக்கவும். வாழைப்பழம் தோலை நீக்கி, சிறிய துண்டுகளாக்கவும். செர்ரி (பழத்தின் கொட்டையை அகற்றவும். ஆப்பிள் சிறிய துண்டங்களாக வெட்டவும். பலாப்பழம் சிறிய துண்டுகள் செய்யவும்.

அரை டம்ளர் கொதிக்கும் ஜலத்தில், தக்காளியைப் போட்டு, சிறிது வேக வைத்து தோல் விதையை நீக்கி, வடிகட்டி சாறை எடுக்கவும்.

இஞ்சியின் தோலைக் கத்தியால் சுரண்டி, சிறிய சிறிய துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும்.

எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து, கொட்டையை நீக்கி, சாறு பிழிந்து கொள்ளவும்,

மேற்கண்ட பழத்துண்டுகளை (தக்காளி, ஜூஸைத் தவிர) இஞ்சி துண்டுகளையும், மிக்ஸியில் தண்ணீர் விடாமல் நன்றாக அரைத்துக் கொள்ளவும்.

மிக்ஸி இல்லாதவர்கள், பிரஷர் குக்கரில், தண்ணீர் விடாமல் வேக வைத்து, நன்றாக மசித்து எடுத்து வைத்துக் கொள்ளவும்.

இந்த அரைத்த பழக்கலவையை, ஒரு கிண்ணத்தில் அளந்து கொள்ள வேண்டும். அதைப்போல் ஒன்றரை பங்கு சர்க்கரை போடவும். இரண்டையும் கலந்து, அத்துடன் தக்காளி ஜூஸும், உப்பும் சேர்த்து அடுப்பில் வைக்கவும்.

தீ நிதானமாக இருக்க வேண்டும். கைவிடாமல் கிளறிக் கொண்டே இருக்க வேண்டும். அப்பொழுது தான் அடி பிடிக்காமல் இருக்கும். தீயாது. நன்றாகச் சேர்ந்து அல்வா பதத்தில் வந்தவுடன் எலுமிச்சம் பழச் சாற்றை விட்டு, ஒரு கிளறு கிளறி இறக்கி விடவும். வேண்டு

மாஞல் லெமன் எல்லோ கலர் பிட்டிகையும் மேங்கோ எஸன்ஸில் 1 டீஸ்பூனும் சேர்க்கலாம்.

கெடாமல் இருக்க, "ஸோடியம் பென் சோனேட்" கால் டீஸ்பூன் சேர்த்து நன்ருகக் கிளறவும்.

நன்ருக ஆறியவுடன், உடனே பாட்டிலில் காற்றுப் புகாதபடி போட்டு, நன்ருக மூடி வைக்கவும்.

—ருக்மணி ராஜகோபாலன்
ஹைதராபாத்-20

குறிப்பு:— எல்லாப் பழங்களும் போடவேண்டும் என்ற அவசியமில்லே. கிடைத்த பழங்களைப் போட்டுச் செய்யலாம். கொய்யாப் பழம் போடக் கூடாது. எல்லாப் பழங்களும் ரொம்பவும் பழுத்ததாக இருக்கக் கூடாது. பழங்கள் எல்லாவற்றையும் நன்ருக அலம்பி, ஈரமில்லாத துண்டில் நன்ருக ஈரம் போகத் துடைக்கவும்.

ஆபீஸ் நேரத்தில் பெண்கள் கால்மேல் கால் போட்டுக்கொண்டு உட்காருவது நல்லதல்ல. அப்படி உட்கார்ந்தால் கால்களிலுள்ள இரத்த நாளங்கள் பலவீனப் படும். இதனுல் முட்டுவலி நரம்புத்தளர்ச்சி ஏற்படக்கூடும். கால்களின் கீழ்ப்பகுதியில் வீக்கம் உண்டாகும். - லட்சுமிசிவம்

## பெங்களூர் ஜாம்

**ஆறுதல் பரிசு:** **கைப்பை**

**தேவையான பொருட்கள்:**

பெரிய பிஞ்சான சௌசௌ (அதாவது வேக வைத்துக் கூழ் ஆக்கினுல் 1 லிட்டர் வர வேண்டும்.)
சீனி — 1 லிட்டர்
சிட்ரிக் ஆசிட் — ஒன்றரைத் தேக்கரண்டி
ராஸ்பெர்ரி ரெட் பவுடர் — கால் தேக்கரண்டி.
எஸென்ஸ் அன்னுசி — 1 தேக்கரண்டி,
பொட்டாஷியம் மெட்டாபைசல்பேட் — கால் தேக்கரண்டி

**செய்முறை:**

சௌசௌவின் மேல் தோலைச் செதுக்கி, நடுவில் இருக்கும் கொட்டைப் பகுதியை நீக்கி சிறிய துண்டுகளாக்கி, சிறிது நீர் விட்டு நன்ருக வேக வைத்து ஆறிய பின் மிக்ஸியில் அடித்துக் கூழ் ஆக்கிக் கொள்ளவும். சௌசௌ கூழையும், சீனியையும் சேர்த்து அடுப்பில் வைத்துக் கிளறவும். சிறிது கெட்டியானவுடன் சிட்ரிக் ஆசிட், கலர் சேர்த்துக் கொள்ளவும். பிறகு கெட்டியான வுடன். அதாவது கரண்டியில் சிறிது ஜாம் எடுத்துக் கொட்டினுல் உடனே விழாமல், கரண்டி விளிம்பில் சிறிது நேரம் தங்கி பிறகு விழும். அப்பொழுது இறக்கி, எஸென்ஸ் சேர்க்கவும். பொட்டாஷியம் மெடாபைசல்பேட் சேர்த்து நன்ருகக் கிளறி பாட்டில்களில் அடைத்து ஆறிய பின் மூடி வைக்கவும். கலர், எஸென்ஸ் அவர் அவர் விரும்பும் கலரும், எஸென்சும் சேர்த்துக் கொள்ளவும்.

—சூரியா தியாகேசன்
தஞ்சாவூர்

## ஆப்பிள் ஜாம்

**ஆறுதல் பரிசு:** **கைப்பை**

**தேவையான பொருட்கள்:**

ஆப்பிள் — 1 கிலோ
சர்க்கரை — 1 கிலோ
இஞ்சி — 50 கிராம்
எலுமிச்சம்பழம் — 2
ஸிட்ரிக் ஆஸிட் — 1 டீஸ்பூன்
ஸோடியம் பென்சோனேட் — 1 சிம்டா,
ஜாமுக்குள்ள நிறம்.

செய்முறை:—

ஆப்பிள்களையும் இஞ்சியையும் நன்ருகத் தோல்சீவி சிறு துண்டுகளாக நறுக்கி கொஞ்சமாகத் தண்ணீர் விட்டுக் குக்கரில் பத்து நிமிடங்கள் வேக வைத்துக் கொள்ளவும்.

வேக வைத்த விழுதை நன்ருகக் கல்லுரலிலோ, அல்லது மிக்ஸியிலோ அரைத்து அரைத்த விழுதை ஒரு பாத்திரத்தில் கொட்டி, அதில் சர்க்கரையைக் கலந்து, எலுமிச்சைப் பழத்தின் சாற்றையும், கலந்து அடுப்பில் வைக்கவும். அடுப்பு நிதானமாக எரிய வேண்டும். அந்த விழுதை மரக்கரண்டி ஒன்றுல் அது கெட்டியாகும் வரை கிளறிக் கொண்டே இருக்க வேண்டும்.

ஜாம் எடுத்துப் பதம் பார்த்தால் ஆறிய பிறகு அந்தக் கரண்டியிலிருந்து தண்ணீராக ஓடாமலும் கரண்டியில் ஒட்டாமலும் விழும் பதத்தை அடைய வேண்டும்.

ஸிட்ரிக் ஆஸிட்டை அரை டேபிள் ஸ்பூன் தண்ணீரில் கலந்து ஜாமில் விட்டு அதை நன்ருகக் கிளறி அடுப்பில் அரை நிமிடம் வைத்து இறக்கவும். கொஞ்சம் இளம் சூடாக இருக்கும்பொழுது ஸோடியம் பென்சோனேட்டை 1 ஸ்பூன் இளம் சூடான தண்ணீரில் கலந்து அந்த ஜாமில் விட்டு நன்ருகக் கிளறி அதற்கு அழகு ஊட்டும் கலரையும் அதில் சேர்த்து நன்ருக அலம்பி துடைத்த பாட்டில் ஒன்றில் வைக்கவும்.

—பவானி நாராயணன்
கட்மா.



# பெண் கலை ஏன் தயங்குகிறது?

“நீங்கள் பல மாநிலங்களிலும் பணியாற்றியிருக்கிறீர்கள். கலைகளுடன் முழுமையான தொடர்பு உடையவர். தமிழ் நாட்டுப் பெண்களின் கலையார்வத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'' என்று சென்னை டி. வி. நிலையத்தின் டைரக்டர் திரு. சௌடேகரைக் கேட்டபோது—

நான் பெரிய கிரிடிக் இல்லை. பரத நாட்டியமோ அல்லது வீணை போன்ற இசைக் கருவிகளோ கற்றுக் கொண்டவன் இல்லை. அதே போல நான் போன ஊர்களை எல்லாம் முழுமையாகப் பார்த்து. மக்களின் கலாசார அடிப்படையை முழுமையாகப் புரிந்து கொண்டேன் என்று சொல்வதற்கும் இல்லை. ஆனால் நான் பார்த்த வரைக்கும் என்னால் சொல்ல முடியும். ...'' என்று அடக்கமாக ஆரம்பித்த சௌடேகர்.

'' ஆந்திரா, டெல்லி, மகாராஷ்டிரா மாநிலங்களில் நான் வசித்திருக்கிறேன். அங்குள்ள பெண்களின் கலையார்வமும் மகத்தானதுதான். அவர்களுடைய வண்ண மயமான நடனங்களும், சிறப்பான அபிநயங்களும் அற்புதமானவைதான். ஆனால் மனதையும் தாண்டி எங்கோ நம்மை அழைத்துச் செல்லும் ஒரு அதீதமான சக்தி கலைக்கு இருக்கிறதா. அப்படிப்பட்ட கலை எங்கே இருக்கிறது என்று நான் தேடியபோது—

அதை நான் தமிழ் நாட்டுப் பெண்களிடம் பார்த்தேன். காரணம் கலைக்காக அவர்கள் தங்களையே அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறார்கள். இப் பெண்மணிகளின் கலையார்வம். தெய்வீகமாக அதைப் போற்றி வழிபடுவதும் அற்புதமானது. அதனால்தான் தமிழ் நாட்டுக் கலை என்னை இவ்வளவு தூரம் ஈர்த்திருக்கிறது.

இன்னொன்றையும் நான் இங்கு சொல்ல விரும்புகிறேன். பண்டைய இந்தியாவின் புராதன மிக்க கலைப் பொக்கிஷங்களை இந்தத் தமிழ்ப் பெண்கள்தான் காக்க முடியும். ஏனென்றால் தங்களையே கலைக்காக அர்ப்பணித்துக் கொள்ளும் தன்மை இவர்களுக்குத்தான் இருக்கிறது.

மிகவும் ஆசாரமான குடும்பத்தில் நடனம் கற்றுக் கொண்டு முதன் முதல் மேடை ஏறும் பெண்கூடக் கொஞ்சம் கூட சபைத் தயக்கமில்லாமல் ஆடிவிட்டுப் போய்விடும் விந்தையை நான் இவர்களிடம்தான் பார்க்கிறேன். காரணம், கலையார்வம் அவர்கள்

மனதிலிருந்து ஊற்றாகப்பொங்கி வருகிறது.'' என்றார்.

இவ்வளவு கலையார்வமும், நுணுக்கமாக விஷயங்களை ஆராயும் திறனும் கொண்ட திரு. சௌடேகர் இங்கிருக்கும் பெண்களின் சமூக நிலைமையைப் பற்றியும் யோசனையுடன் கூறுகிறார்—

''இங்கேதான் இவர்களை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. பெண்களுக்குத் தீங்கு இழைக்கும்போதெல்லாம் அந்த அநீதிகளை எதிர்த்துப் போராடும் தன்மை மற்ற மாநிலப் பெண்மணிக்கு வந்துவிட்டிருக்கிறது. வரதட்சிணைக் கொடுமைக்கு எதிர்ப்புத் தெரிவிக்கிறார்கள். போஸ்டர், வியாபார விளம்பரங்கள் போன்றவற்றில் பெண்களை ஒரு 'செக்ஸ் பொருளாக'ப் பயன்படுத்தும்போது அதைக் கடுமையாகக் கண்டிக்கிறார்கள். ஆர்ப்பாட்டங்கள் செய்கிறார்கள். இப்போதெல்லாம் காவல் துறையினர் பெண்களுக்குப் பதில் சொல்லி மாளவில்லை..

ஆனால் தமிழ்நாட்டில் பெண்கள் இந்த வகையில் பயன்படுத்தப்படும்போது அதை எதிர்த்து வன்மையாகக் கண்டிப்பவர்கள் யாருமில்லை. அதனால்தான் பெண்களுக்குச் சம்பந்தமில்லாத விளம்பரங்களில் கூட கவர்ச்சியான போஸில் பெண் பயன்படுத்தப்படுகிறாள். இது மற்ற மாநிலங்களை விட இங்கு அதிகமாக இருக்கிறது. இதை ஆக்க பூர்வமாக எதிர்த்துப் போராடப் பெண்கள் முன்வரவில்லை.

அதனால்தான் சொல்கிறேன். இவர்கள் இந்த விஷயத்தில் தயக்கத்துடன் இருக்கிறார்கள். மிகவும் பழமையான குடும்பத்திலிருந்துவரும் ஒரு பெண்கூட அற்புதமாக மேடையில் நடனமாடிவிட்டுப்போய் விடுகிறாள். ஆனால் சமுதாய அநீதிகளை எதிர்த்து யாரேனும் குரல் எழுப்புகிறார்களா என்றால் அதுதான் இல்லை. ஏனிந்த முரண்பாடு என்று எனக்குத் தெரியவில்லை....''

என்கிறார் திரு சௌடேகர்.

ஒரு அற்புதமான கருத்தை வெளியிட்டிருக்கிறார் நமது டி. வி. டைரக்டர். பல்வேறு சமூக சேவை நிறுவனங்களும், ஏராளமான தனியார் அமைப்புகளும் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் கேவலமான முறையில் பெண்களைப் பயன்படுத்தப்படுவதை எதிர்த்துத் தலைமை தாங்கி அணி வரையும் கூட்ட இங்கு யாருமில்லைதான். 'ஐயோ, இந்தத் தவறு நேர்ந்து விட்டதே. இந்தப் பெண்கள் பட்டாளம் வந்து நம்மை உண்டு இல்லை என்று ஆக்கி விடுவார்களே' என்று மற்ற இடங்களில் பயப்படுவது போல் இங்கு பயப்பட வேண்டிய நிலையில் இல்லைதான். 'இங்கு மட்டும் ஏனோ பெண்மை தயங்குகிறது.

# அழகுக்குச் சில டிப்ஸ்!

**அழகு நிலையம் நடத்தும் திருமதி மஞ்சுளா விஜயகுமார் கூறுகிறார்.**

இளம்பெண்ணானாலும் மனைவியானாலும், தாயானாலும் தன்னை அழகு செய்துகொள்ள வேண்டும். "திருமணமாகி விட்டால் சில பெண்கள் அத்துடன் தான் அழகாக இருக்க வேண்டுமென்று அவசியம் இல்லை என்று நினைத்துக் கொள்கிறார்கள்.

சாதாரணமாக அழகு நிலயத்திற்கு என்று அழகு செய்து கொள்வதெல்லாம் நடிகைகளாலும் மற்றும் பணக்காரப் பெண்களாலும் தான் முடியும் என்று நினைக்கிறார்கள். இது தவறு. புடவை வாங்கிக் கொள்வது, சினிமா போவது மற்றும் பல செலவுகள் போல் இதுவும் ஒன்று. இதை ஆடம்பரச் செலவு என்று நினைக்கக் கூடாது.

**சாதாரணமாக இங்கு வரும் பெண்களுக்கு எப்படி உங்கள் ட்ரீட்மெண்ட் ஆரம்பிக்கிறீர்கள்?**

முதலில் அவர்கள் முகத்திலிருக்கும் அழுக்கை நீக்கி முகத்தை ப்ளீச் செய்கிறோம். நீங்கள் என்ன தான் சோப்புப் போட்டுத் தேய்த்தாலும் சூரிய வெப்பத்தினாலும் வெளித் தூசியினாலும் முகத்தில் உங்களுக்குத் தெரியாமலே அழுக்கு இருக்கும். ப்ளீச் மட்டும் செய்தால் போதாது. தொடர்ந்து முக மசாஜ் செய்ய வேண்டும். பாதாம் பருப்பை அரைத்து எலுமிச்சை சாறு போன்ற மற்ற மூலிகைகளால் செய்த பசையை முகத்தில் போட்டு ஊற வைக்கிறோம். டென்ஷன் இல்லாமலே சிறிது நேரம் ஓய்வு கொடுத்து, ரத்த ஓட்டம் சீராக அமைய மசாஜ் செய்கிறோம். பிறகு நீராவியினால் முகத்தை சுத்தம் செய்கிறோம்.

நாங்கள் உபயோகிக்கும் கருவிகள் எல்லாம் விலையுயர்ந்தவெளிநாட்டுப்பொருட்கள். ஆனால் முகத்திற்கு உபயோகிக்கும் அழகுப் பொருட்கள் எல்லாமே மூலிகைகளிலிருந்து வீட்டிலேயே தயாரித்தது.

முகத்தில் நிச்சயம் நிறைய மாறுதல் ஏற்படும். அழகு கூடும்.

**இப்படி ஒரு முறை செய்து கொண்டால் போதுமா?**

ஒருமுறை செய்து கொண்டதும் மாறுதல் தெரியும். ஆனால் மீண்டும் பழைய நிலைமைக்கு வராமல் இருக்க வேண்டுமென்றால் இதுபோல் மாதத்திற்கு ஒரு முறை செய்து கொள்வது நல்லது.

**முகப்பரு வராமல் இருக்க என்ன செய்யவேண்டும்?**

முகப்பரு வராமல் இருக்க முதலில் மலச் சிக்கல் இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். நன்றாக நீர் இறங்க வேண்டும். நிறைய தண்ணீர் குடிக்க வேண்டும். தினமும் இரண்டு டம்ளர் பால் குடிக்க வேண்டும். எண்ணெயில் பொறித்த பண்டங்களைத் தவிர்க்க வேண்டும். பருக்களை கிள்ளக்கூடாது. கிள்ளினால் வெளிவரும் துர்நீர் முகத்தின் மற்ற இடங்களில் பட்டு பருக்கள் அதிகமாகும்.



மஞ்சள் பூசிக் குளித்தால் எந்த அழகுப் பொருட்களும் தேவை இல்லை என்று பெரியவர்கள் கூறுகிறார்களே, இதைப் பற்றி என்ன கூறுகிறீர்கள்?

மஞ்சள்பூசி தொடர்ந்து குளித்து வந்தால் தோல் தடியாகி முகம் முற்றிப் போய் விடும். அதனால் நான் இதைச் சிபாரிசு செய்ய மாட்டேன்.

தலைமுடி உதிராமல் இருக்க என்ன வழி?

தலைமுடி கொட்டுவதைத் தவிர்க்க, பேன் வராமல் இருக்க, ஸ்கால்ப் ட்ரீட்மெண்ட் எடுக்கலாம்.

நீராவியினால் தலை முழுக்க சுத்தம் செய்யலாம். தலைக்குத் தினமும் எண்ணெய் தடவிக் கொள்ள வேண்டாம். இதனால் தெருவில் போகும் போது தூசி எல்லாம் தலையில் ஒட்டிக் கொள்ள வாய்ப்பு அதிகமாகிறது. வாரத்திற்கு மூன்று நாட்கள் எண்ணெய் தடவிக் கொண்டால் போதும். இரண்டு நாட்கள் தலைக்குக் குளிர்ந்த நீரில் குளிக்கவும். வாரத்திற்கு ஒருமுறை நன்றாக எண்ணெய் தேய்த்துக் குளிக்கவும். தலையைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். இது மிக முக்கியம். நரைக்கு, ஹென்னா என்ற மருதாணியினால் ஆன எண்ணெயை உபயோகித்து முடியை பிரவுன் நிறமாக ஆக்கலாம்.

பேட்டி: கலாமூர்த்தி

# கோலி குண்டில் திராட்சைக் கொத்து.

**சேப்பங்கிழங்கில் ஒரு பஜ்ஜி:**

சேப்பங்கிழங்கை முழுதாக வேக விட்டு, நன்றாக வெந்ததும் தோலுரித்து விட்டு, வேண்டிய வடிவங்களில் வெட்டி (முழுதாகவோ) பஜ்ஜி மாவில் தோய்த்துப் பொரியுங்கள். [illegible] சேனை [illegible] ருசியான பஜ்ஜி இது. இருக்கும் இது!

-உமா





## மாதம் ஒன்றாகக் கற்றுக் கொள்ளுங்கள்!



**தேவையான பொருட்கள்:**

1. மெல்லிய ட்யூப் ஒயர்கள் - சுமார் 1½ அடி (18") நீளம் - 10.
2. பழைய கோலி குண்டுகள் - 10. (சராசரி அளவு). (கண்டிப்பாக, பழைய, மேற்புறம் சற்று சொர சொரப்பான கோலி குண்டுகள் தான் வேண்டும். புதிய கோலிகள் அடிக்கடி வழுக்கி விழுமாதலால் பழைய கோலிகள் தான் இதற்குச் சிறந்தது.



**செய்முறை:**

ஒயரில் சுமார் 2½" நீளம் விட்டு, படம் 1ல் காட்டியுள்ளபடி அமைத்துக்கொண்டு, அதனுள் கோலியினை நுழைத்து, சற்று இறுக்கிக்கொள்ளவும்.

மீண்டும் இந்த ஒயரினுல் மேற்புறம் சுற்றிக்கட்டி இறுக முடிச்சுப் போட்டுக் கொள்ளவும் இப்போது இது பார்ப்பதற்கு உரியில் கட்டிய பானை போன்று, கோலியின் நான்கு புறங்களிலும் ஒயர் ஓடியிருக்கும்.

இப்போது நீளமான ஒயரினுல், கோலி குண்டைச் சுற்றி "கூடைப்பின்னல்" முறையில் பின்னிக் கொண்டு வரவும் (அதாவது சுற்றிக் கட்டியுள்ள ஒயரின் மேற்புறமாக ஒரு முறையும், அதற்கு அடியில் கொடுத்து ஒரு முறையுமாக; - ஒரு சுற்றுக்கு, இருமுறை மேற்புறமும் இரு முறை கீழ்ப்புறமுமாக வரும்.)

இவ்வாறு கோலி முற்றிலும் மறையும்படி, மேலும் பின்னுவதற்கு இடமில்லாத வரையில் பின்னி, மீதமுள்ள ஒயரை அப்படியே விட்டு விடவும்.

மீதமுள்ள கோலிகளையும் இது போல பின்னி, எல்லா வற்றையும் ஒன்று சேர்த்து, சற்று முன் பின்னுக, இறுகக் கட்டி விடவும்.

**இலைகள்:**

இலைகள் வேண்டுமானுல், இந்த ஒயருக்குள் நுழையக் கூடிய மெல்லிய மயிரிழை அளவு பருமனுடைய கம்பி ½ அடி நீளம். பச்சை நிற ஒயர் 1½". நீளம்.

ஒயரை கம்பியினுள் நுழைத்து, படத்தில் காட்டியபடி வளைத்து, நீள் குறுக்காக, படம் 2ல் காட்டியபடி இலை வடிவத்தில் கட்டி முடிந்து கொள்ளவும்.

சுமார் 1½ அடி நீளமுள்ள மற்றொரு பச்சை நிற ஒயரினுல், இலையின் முடிச்சுப் போட்ட பகுதியிலேயே முடிந்து கொண்டு, ஒயரினுல், முற்சொன்ன கூடைப் பின்னல் முறையினுல் இறுதி வரை பின்னி, முனையில் முடிந்து கொள்ளவும்.

இவற்றை ஏற்கனவே செய்துள்ள திராட்சைப் பழங்களுடன் சேர்த்து அலங்காரமாகக் கட்டித் தொங்க விடலாம்.

-சந்தானலட்சுமி



# சொல்ல விரும்புகிறோம்



● கமிஷனர் ஸ்ரீபாலின் தாயாருடைய கட்டுரை அருமையாக வழி காட்டும் முறையில் அமைந்திருந்தது. அந்த அன்னையின் மற்றொரு ஒப்புயர்வற்ற சிறப்பையும் விட்டு விட்டீர்களே! தனக்கென இரண்டு கண் மணிகளாகக் குழந்தைகள் இருந்தும், மூன்றாவதாக வேறொரு பெண்ணையும் தத்து எடுத்து வளர்க்கிறார். மருத்துவக் கல்லூரியில் மூன்றாவது ஆண்டு படிக்கும் குமாரி கமலி திருமதி விஜயலட்சுமியின் தத்துப் பெண் என்று சொன்னால் யாரும் நம்ப மாட்டார்கள். தன் மணி வயிற்றில் பிறந்த பெண்ணாகவே அல்லவா வளர்த்திருக்கிறார்!

லீலா — சென்னை-7

● ஒரு படத்தில் நடித்துவிட்டு பெரிதாக அலட்டிக்கொள்ளும் நடிகைகளுக்குத் திருமதி பத்மினியின் வாழ்வு ஒரு பாடம்.

திருவையாறு — திருமதி நரசிம்ம ராவ்

● இரண்டாவது அட்டைப் படம் பூசை அறையில் மாட்டும்படி அமைந்துள்ளது. அன்னத்தின் எக்கரை பசுமை நிர்தாட்சண்யமான உலகியல் நடப்பின் எதிரொலி.

பொள்ளாச்சி — வெ. வசந்தகோகிலம்

● விமலா ரமணியின் ''மாத்ரு ரூபேண'' என்ற எழுத்தோவியம்...ஹோ...ஹோ...சர்வ கலாசாலையில் பாடமாக்கப் பட வேண்டிய அற்புத காவியம். என் உள்ளத்தையும் உடலையும் குலுக்கி, நெஞ்சமுக்கெல்லாம் கரைந்து, கன்னங்களில் பாதை போட்ட அந்தக் காப்பியத்தை — காவியத் தலைவியை இருகரம் கூப்பி நமஸ்கரிக்கிறேன்.

மதுரை-3 — திருமதி தேவனாதன்

● போன பிறவியில் எவ்வளவு உண்மையாக உழைத்தாலும் அன்பு செலுத்தினாலும் குறைகூற மருமகன் இருந்து விட்டான் என்று இப்பிறவியில் பசுவாகப் பிறந்து பால் கொடுப்பதுடன் லட்சுமி கடாட்சமும் அளிக்கலாம் என்று பெரியம்மா பிறவி யெடுத்து அவரது கணவருக்கு இறுதி காலத்துத் தானப் பொருளாக மாறி, பின்னர் சாஸ்திரிகள் மூலம் சந்துருவின் வீட்டிற்கே விலை போன நிலை விமலா ரமணியின் விஸ்தாரமான கற்பனைக்குச் சான்று.

தஞ்சாவூர்-9 — அ. சம்பத்

● கமிஷனர் ஸ்ரீபால் என்ற மரத்தின் வேராக நின்ற அவரது அன்னையையும் செயலையும் விளக்கி யிருந்தது மாறுதலான தொகுப்பு. ஒவ்வொரு வெற்றிகரமான ஆணுக்குப் பின்னும் ஒரு பெண் உண்டென்றால் அது தாயானால் என்ன தாரமானால் என்ன?

திருநெல்வேலி — ஜி. சதாசிவம்

● எங்கள் வீட்டில் கோது வைத்திருக்கிறோம் என்று சொன்னால் போதும். அவர்கள் தரும் கடலைப் பருப்பு, கண்டலை வாய் மென்றுவிட்டு வருவதுண்டு. ஆனால் சாஸ்திரப்படி ஒன்பது நாட்களிலும் எப்படி நடத்த வேண்டும் என்று படித்தபொழுது இத்தனை சிறப்புடைய விழாவினை முழுமையாக அறிந்தோம் என்ற நிறைவு ஏற்பட்டது.

திருச்சி — மோகனா

● வரவுக்கு மேல் செலவு செய்தல் கூடாது. இருக்கிறது என்று உடன் செலவு செய்தலும் கூடாது. எதிர் காலத்தைப் பற்றிச் சிந்திக்காமல் ஆடம்பரமாக வாழ்தலும் கூடாது. இதை உணர்த்திய ''எக்கரை பசுமை?'' சிறுகதை எக்காலத்திலும் அழியவே அழியாது.

பம்பாய்-58 — ஏ. கணேசன்




தீபாவளி வருகிறது. அல்வாவும் ஜிலேபியும் கேஸரியும் செய்பவர்கள் கேஸரிப் பவுடர் உடம்புக்குக் கெடுதல் என்று பயப்படுகிறீர்கள். கலர் இல்லா விட்டால் ரமிக்காது. இதோ அனுபவ யோசனை.

முற்றலான காரட்டைத் துருவி அதனுடைய இயல்பான ஜூஸை எடுத்துக் கொள்ளுங்கள். அல்வாவுக்குக் கோதுமைப் பாலில் விடுங்கள். கேஸரி கலர் கிடைக்கும். ஜிலேபிக்கும் இதே மாதிரி ரவாவை வறுத்த பிறகு இந்த காரட் ஜூஸில் பிசறி வைத்து விடுங்கள். பிறகு கேஸரி செய்யுங்கள். கேசரிப் பவுடர் போட்ட மாதிரியே இருக்கும். காரட் துகளை 'ஸாலட்' செய்து விடலாமே!

* * *

ஜிலேபி போன்றவற்றின் ஜீரா மீந்து விட்டால் கவலையே வேண்டாம். மீண்டும் அடுப்பில் வைத்து பாகு காய்ச்சி அகலக் கரண்டியால் தேய்த்து விட்டால் அருமையான குழைவு ஜீனி கிடைக்குமே!

## கோல்டன் பர்பி

**தேவையான பொருட்கள்:**

தேங்காய்த் துருவல் (பூந்துருவலாக) அரை கப்
காரட் துருவல் ஒரு கப்
பால் ஒரு கப்
நெய் அரை கப்
சர்க்கரை இரண்டரைக் கப்

**செய்முறை:**

பாலில் சர்க்கரைப் பாகு வைக்கவும். பாகு கம்பிப்பதம் வந்த பிறகு தேங்காய் துருவலைப் போட்டு ஒரு சுழற்றுச் சுழற்றிய பிறகு, காரட் (சன்ன துருவல்) துருவலைப் போடவும். புஸ்ஸென்று வரும்போது, நெய்யைக் கொட்டி, நுரைத்து வரும் சமயம் நெய் தடவிய தாம்பாளத்தில் கொட்டி துண்டுகள் போடவும். மிகவும் எளிமையும் ருசியும் உடையது. தீபாவளிக்கு எடுப்பானது. இஷ்டப்பட்டவர்கள் முந்திரியைத் தூளாக்கி நெய்யில் வறுத்துப் போடலாம். 10 நிமிடத்தில் தயார்.

**காரட் அல்வா செய்பவர்கள் கவனத்துக்கு:**

மிக்ஸியில் காரட்டைத் துருவுங்கள். சன்னமான அந்தத் துருவலில் ஒரு கப் துருவலுக்கு கால் கப் வீதம் பாலை விட்டு ஒரு அரையும் அரைக்கவும். பிறகு கனமான பாத்திரத்தில் இதைப் போட்டு வேக விட்டால் விரைவில் வேகும். மீதிப் பால், சர்க்கரை எல்லாம் ஒன்றாகவே போடலாம். (காரட்) கேசரி மாதிரி மிகவும் ருசியாக இருக்கும் எரிபொருள் குறைவு. இயல்பான கலருடன் இருக்கும்.

"சித்ரா"

# தீபாவளி ஸ்பெஷல்

## புருட் பர்பி

**தேவையான பொருட்கள்:**

(சர்க்கரை சேராத) பால்கோவா 1 கி.
சர்க்கரை 250 கிராம்
செர்ரி பழம் 100 கிராம்
ஏலக்காய் 4
வெள்ளி ரேக் 6
குங்குமப்பூ அரை கிராம்

**செய்முறை:**

சர்க்கரை சேராத பால்கோவாவை சுத்தமான வாணலியில் 250 கிராம் சர்க்கரை போட்டு கிண்ட வேண்டும். நன்ருகக் கிண்டி எடுத்துக் கீழே இறக்கி உருண்டை செய்யும் அளவுக்குப் பாகு கிடைத்தவுடன் ஏலக்காயைப் பொடி செய்து போட வேண்டும். லேசாகச் சூடு குறைந்தவுடன் கீழே இறக்கி செர்ரிப் பழத்தைச் சிறிய துண்டுகளாகநறுக்கி குங்குமப்பூவுடன் சேர்த்துப் பாகில் போட்டுக் கிண்ட வேண்டும். பின்னர் பெரிய தட்டில் போட்டுச்சரி சமமாகப் பரப்ப வேண்டும். சூடு ஆறியவுடன் வெள்ளி ரேக்கை மேலே ஒட்டவும். ஒட்டியவுடன் நமக்கு வேண்டிய அளவுக்குக் கத்தியால் வெட்டி எடுத்துக் கொள்ளலாம்.

* * *

## காலா ஜாம்

**தேவையான பொருட்கள்:**

(சர்க்கரை சேராத) பால்கோவா 1 கி.
மைதா மாவு 125 கிராம்
சாரப் பருப்பு 25 கிராம்
ஏலக்காய் 4
சர்க்கரை 2 கிலோ
நெய் 1 கிலோ
கிராக்ஷை 25 கிராம்
சோடா உப்பு 3 கிராம்

**செய்முறை:**

சர்க்கரை இல்லாத பால்கோவாவில் மைதா மாவு சேர்த்துக் கொஞ்சம் தண்ணீரைத் தெளித்துப் பிசையவேண்டும். இதை 10 நிமிடம் ஊறவைக்க வேண்டும். சோடா உப்பு அரை டீஸ்பூன் தண்ணீரில் கலந்து மாவுடன் சேர்க்கவும். ஏலக்காய் பொடி செய்து போடவும். சாரப் பருப்பு போடவும். மாவுடன் கிராட்சை போடவும். பிறகு 15 கிராம் சர்க்கரை கலந்து கொள்ளவும். 2 கிலோ சர்க்கரை பாகு செய்து தனிப் பாத்திரத்தில் வைத்துக் கொள்ளவும். நெய் மிதமாகச் சுட வைத்தவுடன் சிறிய சிறிய உருண்டைகளாக்கிக் கொண்டு நெய்யில் வறுக்க வேண்டும். கரிய நிறம் லேசாக வரும் வரை வறுக்க வேண்டும். அதை ஒவ்வொரு உருண்டையாகத் தயாரிக்கப் பட்ட பாகில் போட வேண்டும். ஒரு மணி நேரம் கழித்து எடுத்தால் சாப்பிட மிகவும் சுவையாக இருக்கும்.

—நன்றி: 'அகர்வால் பவன்'
சென்னை-1



வண்ணப்படம்: 'அகர்வால பவன்'



விருந்தினரை
வரவேற்க -
இதோ

# நரசூஸ் காபி

அது ஜீவனுள்ள
ஒரே காபி.
''தேர்மலோ'' முறை
தயாரிப்பு காபி.










## நவரத்தின மிக்சர்

**தேவையான பொருட்கள்:**

எண்ணெய் 2 கிலோ: கடலை மாவு 2 கிலோ: பச்சைப் பருப்பு 200 கிராம்: முந்திரி 250 கிராம்: ஓமத்தூள் 50 கிராம்: வெள்ளரி விதை 100 கிராம்: திராட்சை 50 கிராம்: பச்சைக் கலர் பவுடர் 5 கிராம்: லெமன் பவுடர் 5 கிராம்: மிளகு 50 கிராம்: மிள காய்த் தூள் 50 கிராம்: டேபிள் சால்ட் தேவையான அளவு.

**செய்முறை:**

கடலை மாவை தேவையான அளவு தண்ணீர் விட்டுப் பிசைந்து கொள்ள வேண்டும். அதை ஓமப்பொடி அச்சில் போட்டுப் பிழியவும். கொஞ்சம் கொஞ்சம் மாவை எடுத்து லெமன் கலர் சேர்த்துக் காராபூந்தியாகவும் பச்சைக் கலர்சேர்த்து காராபூந்தியாகவும் போட வேண்டும். பச்சைப் பருப்பை சற்று தண்ணீரில் ஊற வைத்து அதைப் பொறிக்க வேண்டும். மீதியுள்ள மேலே குறிப்பிட்டுள்ள பொருள் எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து தேவையான அளவு உப்பு, காரம் போட வேண்டும். இது மாலை நேர சிற்றுண்டிக்கு சிறந்த கார உணவாகும்.

## ஸ்பெஷல் மிக்சர்

**தேவையான பொருள்கள்**

அரை கிலோ கடலை மாவு தண்ணீர் விட்டுக்கரைத்து காராபூந்தி போடவும்.

கால் கிலோ கடலை மாவு, கால் கிலோ அரிசி மாவு கலந்து ஓமப்பொடி போடவும்.

கால் கிலோ அரிசி மாவு, 100 கிராம் டால்டா போட்டுப் பிசைந்து தேன் குழல் செய்யவும்.

கால் கிலோ அரிசி மாவு, 100 கிராம் டால்டா போட்டுப் பிசைந்து முறுக்கு இடவும்.

150 கிராம் கடலை மாவு, 150 கிராம் அரிசி மாவு போட்டுப் பிசைந்து தகட்டுப் பக்கோடா போடவும்.

300 கிராம் வேர்க்கடலை, 300கிராம் முந்திரி, 500 கிராம் பொட்டுக் கடலை பொரித்துப் போடவும்.

500 கிராம் அவலையும் பொரித்துப் போடவும்.

**செய்முறை:**

இவை எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து வேண்டிய அளவு உப்பு, மிள காய்த் தூள் சேர்த்துக் கொள்ளவும்.

மொத்தம் 5 கிலோ மிக்சர் கிடைக்கும்.

* * *

நன்றி: தி கிராண்ட் ஸ்வீட்ஸ் அன்ட் ஸ்நாக்ஸ், காந்தி நகர், சென்னை-20

# ஸோன் பப்டி

**தேவையான பொருட்கள் :**

மைதா ஒரு கிலோ
சர்க்கரை 1.750 கிராம்
நெய் 1.250 கிராம்
திராட்சை 50 கிராம்
முந்திரி 50 கிராம்
சாரப்பருப்பு 50 கிராம்
எலுமிச்சம் பழம் 1

**செய்முறை:**

முதலில் நெய்யையும் மைதா மாவையும் ஒன்றாகச் சேர்த்து அடுப்பில் வைத்து நன்றாக வறுக்க வேண்டும்.. அடுப்பு நிதானமாக எரிய வேண்டும். மாவு பொன் வறுவலாக இருக்க வேண்டும். அதை எடுத்து வேறு தட்டில் ஊற்றிக் கொள்ள வேண்டும். வேறு ஒரு வாணயில் சர்க்கரை போட்டு தண்ணீர் தேவையான அளவு ஊற்றி, அழுக்கு எடுக்க வேண்டும். எலுமிச்சைப் பழம் அரை தேக்கரண்டி ஊற்ற வேண்டும். சர்க்கரை பாகு கையில்எடுத்தால் இரண்டாக உடைய வேண்டும். அந்தப் பதம் வந்தவுடன் அதை வேறு தட்டில் ஊற்றி,சர்க்கரை ஆறவேண்டும். ஆறியவுடன் மாவும் சர்க்கரையும் ஒன்றாகச் சேர்த்து இழுக்க வேண்டும். இழுத்தால் பந்து மாதிரி வந்துவிடும். பிறகு திராட்டை,முந்திரி, சாரப்பருப்பு தூவி விடவேண்டும். பந்து மாதிரி இருக்கும் கலவையை அதன் மேல் நன்றாக தேய்க்க வேண்டும். ஆறியவுடன் சிறு சிறு துண்டுகளாக வெட்டிக் கொள்ளலாம்.

# கேஷ்னெட் கதலி

**தேவையான பொருட்கள்:**

சர்க்கரை ஒன்றரை கிலோ
முந்திரி ஒன்றரை கிலோ
ரேக் 2 பாக்கெட்
நெய் கால் கிலோ
ஏலக்காய் 10 கிராம்

**செய்முறை:**

முதலில் முந்திரியை அரைத்து வைத்துக்கொள்ளவும். சர்க்கரையில் ஒரு லிட்டர் தண்ணீர் விடவும். சர்க்கரை கரைந்து கொதி வந்தவுடன் நன்கு, கைவிடாமல் கிளறிவிடவும். நெய் அவ்வப்போது விட்டுப் பாத்திரத்தில் ஒட்டாமல் கிளறவும். நெய் கக்கிக் கொண்டு அல்வா பதம் கருண்டு வந்தவுடன் அதை டேபிளில் தட்ட வேண்டும். பிறகு அதன் மேல் ரேக் ஒட்ட வேண்டும். முக்கோணம் முக்கோணமாக வெட்ட வேண்டும்.





# கூந்தல் வளர...



'தலை முடி வளரவில்லையே, 'இப்படி அநியாயமாகக் கொட்டுகிறதே' என்று வருந்தி கண்ட எண்ணெய்களை உபயோகிப்பவர்களை நாம் சந்திக்கிறோம்.

தலைமுடி வளராதது மட்டுமல்ல: தலைப் பொடுகு, மற்றும் தலையின் அழுக்குகள், முகத்தில் பருக்களையும், படைகளையும் ஏற்படுத்தும் என்பது எத்தனை பேருக்குத் தெரியும்?

எனக்குத் தெரிந்த ஒரு பெண்ணுக்கு தலையில் ஏற்பட்ட அதிகமான பொடுகுகளால் காதின் பின்புறம் படைபோன்ற சிரங்கு ஏற்பட்டு, அதன் காரணமாக மிகவும் துன்புற்று, பின் மருத்துவரை அணுகி, அது 'பொடுகின்' கைங்கர்யம் என்று அறிந்து, (செல்சன் என்ற பொடுகு நீக்கி உபயோகித்துக் குணம் அடைந்தாள்.

ஒரு முட்டையின் வெள்ளைக் கருவுடன் சிறிதளவு எலுமிச்சம் சாறைக் கலக்கிக் கொண்டு, தலை முடியின் அடிப் பகுதியில் நன்கு தேய்த்து விட வேண்டும். ஒரு மணி நேரம் ஊறிய பின் குளித்துவிட்டு, சீயக்காய் போட்டு தலையை அலசவும். தொடர்ந்து வாரம் ஒரு முறை, ஐந்தாறு வாரம் செய்தால் பொடுகு மறைந்து விடும்.

பொடுகு மட்டுமல்ல, பேன்களும் ஈறுகளும் நமக்கு ஆஸ்துமா, ஜுரம் முதலியவைகளுக்கு வழி கோலும்.

பேனை ஒழிக்கச் சிறிதளவு தேங்காய் எண்ணெயில் கற்பூரத்தைக் கரைத்துக் குளித்தால் தலைப் பேன் அகலும்.

தலையில் அளவுக்கு அதிகமான எண்ணெய் தடவுதல், அழுக்கை நீக்காமல் இருப்பதும்தான் பேன், ஈறு, பொடுகுகளுக்குக் காரணம்.

பொடுகுகள் தலையின் பின் பகுதியில் பிடரியிலோ, தோள் பட்டைகளிலோ விழும்போது சிவப்பான படைகளை உண்டாக்கி, பெருக்கிவிடுகின்றன.

தலைக்குச் சுத்தமான தேங்காய் எண்ணெய் அல்லது பாதாம் எண்ணெய் தடவி தினமும் சுத்தமான சீப்பினால் காலை மாலை இரு வேளைகளிலும் சுமார் பத்து நிமிடமாவது தலையைச் சீராக வாரவேண்டும்.

பல் அகன்ற, பல் நொறுங்கிய, பல் உடைந்த சீப்புகளைப் பயன்படுத்துவதைத் தவிர்க்க வேண்டும். வாரம் ஒரு முறை சீப்பைச் சுத்தம்செய்யவேண்டும்.

ஒருவர் சீப்பை மற்றொருவர் உபயோகிக்கக் கூடாது. வாரம் ஒரு முறை ஷாம்பூ அல்லது சீயக்காய் தேய்த்துத் தலையைச் சுத்தமாக அலசிக்கொள்ள வேண்டும்.

மாதம் ஒரு முறையாவது பிளவு பட்ட முனை உடைய முடிகளை நீக்குவதால், மேலும் பிளவு படாமலும், முடி உதிருவதையும் தடுக்கலாம்.

எல்லாவற்றுக்கும் மேலாக முடி செழிப்பாக வளர, முடி வளர்ச்சிக்கு இரும்புச் சத்தும், வைட்டமின் 'பி' சத்தும் அவசியம். உடல் ஆரோக்கியத்தினால்தான் முடியும் வளருகிறது.

எனவே உடலையும், மனத்தையும் செழிப்பாக வைத்திருந்து அழகிய கூந்தலைப் பெறுவோம்,

-லட்சுமி நடராஜன்

மர்மத் திகில்

# மாலா-பாலா

கதை: மகிந்ச்சிக் கண்ணன்
சித்திரம்: விஜயா

சாமியார் அறையில் மேலிருந்து ஊஞ்சல் இறங்குகிறது.




சாமியார் ஊஞ்சல் பலகையில் மேலே செல்ல, பாலா ஆச்சர்யத்தில் நிற்கும் போது அழைக்கின்றனர் மாலா, ராதா




மாலா, ராதா, பாலா வரதராஜன் அறைக்கருகே வந்ததும் பாலா தன்னிடமுள்ள துப்பாக்கிகளில் ஒன்றினால் பூட்டை உடைக்கிறான்.

மாலா டக்கென லைட் அடித்து இளங்கோவின் துப்பாக்கியைத் தட்டிவிட















வாங்கய்யா, பெரிய மனுஷ மனுஷங்களா, நாமும் உள்ளே போவோம்!

அடடா இன்னொரு ஹெலிகாப்டர்!

ஐ.ஜி வராரு

மாடியில் இன்னொரு ஹெலிகாப்டரிலிருந்து ஐ.ஜி இறங்குகிறார்.

குட் ஈவினிங் ஸார்!

எங்க இளங்கோ?

அதோ திருடன், அயோக்கியன் ஆள்காட்டி!

ஓ, இவன்தான் இத்தனைக்கும் காரணமா?

சாமி, நாங்க கள்ளச் சாராயம் காய்ச்சி வெளியே வித்துட்டிருந்தோம். அதான் தொழில். அதனால் தான் பயங்காட்டி எங்களை சிலரை போலீஸ்ல புடிச்சிக் குடுத்தாங்க

அதோட விஷயம் சொல்ல வந்த எங்கப்பாவை எரிச்சு சாவடிச்சாங்க!

சாமி, இனிமே நாங்க எல்லாம் திருந்திட்டோம். கள்ளச் சாராயம் காய்ச்ச மாட்டோம்.

ரொம்ப நல்லது. மிஸ்டர் வரதராஜன், மிஸ் சுசேதா காணாமல் போன எல்லாப் பசங்களையும்...

இதோ இருக்காங்க... எங்கள்ள சமாரா அம்பது பேரை வித்துட்டிருப்பாரு. சாமியாரைக் கேட்டா தெரியும்

சாமியாரா திருட்டுச் சாமியாரு... உம் ஏறுங்கயா... ரொம்ப நன்றி வரதராஜன்.

வரதராஜனுக்கு நன்றி சொல்றதைவிட அவரது பொன்னான மகளு ஜெயஸ்ரீ பாப்பாவுக்குத்தான் நன்றி சொல்லணும்.

முற்றும்.

சின்னா அம்மாவுக்கு விஸ்தாரமாகக் கடிதம் எழுதினாள்: "நான் பிடிவாதமாக மறுத்துவிட்டேன். எனக்கென்னவோ அது மஹா பாவம் என்று தோன்றியது. என்ன என்னவோ காரணங்கள் சொல்லிப் பார்த்தார். எல்லாவற்றிற்கும் மேலாக இவருடைய சுயநலம் எனக்குத் தெளிவாகப் புரிந்தது. இப்போது குழந்தை பெற்றுக் கொண்டால் நச்சு. அதை வளர்க்கக்கஷ்டப் படுவோம். இஷ்டத்திற்கு சுற்றிப் பார்க்க முடியாது. பரவாயில்லை, அம்மா. சுற்றிப் பார்க்காவிட்டால் என்ன போயிற்று? நான் வளர்த்துக் கொள்கிறேன், என்றால் சமாளிக்க முடியுமல்லவா?

அம்மா, எனக்கு மத்தியானத் தூக்கத்தின் போதும் அதிகாலையிலும் சில சமயம் கனா எல்லாம் வருகிறது. புரியாத கனா. ஆனால் பயமாக இருக்கிறது. செத்துப்போன முகம் தெரியாத அந்த அம்மா கூப்பிடுகிறாற் போல! பைத்தியக்கார யோசனைகள் எல்லாம் வருகிறது. என் தம்பிகளை அடிக்கடி நினைத்துக் கொள்கிறேன். மதுவுக்கு கல்யாணம் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறதாக அப்பா எழுதியிருந்தாரே அத்தனை பெரியவனாகிவிட்டானா? எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. உங்களை எல்லாம் பார்க்க வேண்டும் போல இருக்கிறது. உடனே பிரசவத்துக்குப் புறப்பட்டு விடலாம். என்றால் இவர் இத்தனை சீக்கிரம் அனுப்ப மறுக்கிறார். முதலில் இவரை அனுப்ப சம்மதிக்க வைப்பதே பெரும்பாடாகி விட்டது. எட்டு மாசத்துக்கு மேல் பிரயாணம் செய்வது நல்லதல்ல என்று டாக்டரே படித்துப் படித்து சொல்லியிருக்கிறார். டிக்கெட் வாங்கு என்று இனப்படி சொல்லியாகிறது. ஏதாவது சாக்கு சொல்லி தள்ளிப் போட்டுக் கொண்டிருக்கிறார் நீதான் திமர் என்று வந்து என்னை அழைத்துக் கொண்டு போனால் என்ன? இல்லை அப்பாவையாவது, மதுவையாவது அனுப்பக்கூடாதா? மது, ரவி, ரகு எல்லாரும் எப்படி இருக்கிறார்கள்?

எனக்கு பலமுறை அழுகை வருகிறது. தெம்பாக ஏதாவது எழுதேன். நல்ல காரமாக ஊறுகாய் இருந்தால் பார்ஸல் பண்ணி அனுப்பேன்.

சின்னாவுக்கு இப்படி அடிக்கடி அழுகை வந்தாலும் பலசமயம் அவள் தன் வயிற்றை பார்த்து உற்சாகப்பட்டிருக்கிறாள். ராமச்சந்திரன் அவளைத் தட்டிக் கழித்து ஊருக்கு அனுப்பவில்லையென்றாலும் அந்த அனுபவத்தைத் தனியாக சமாளிக்க தைரியம் ஏற்பட்டிருந்தது. இருந்தாலும் அம்மாவிடம் போய் உட்கார்ந்து கொண்டு இங்கே வலிக்கிறது. அங்கே பிசகினாற்போல் இருக்கிறது என்று தன்னை முழுமையாக அவளிடத்தில் கொடுத்து விடவும் இச்சையாக இருந்தது. அம்மாவிடம் போய் அங்கே பிறந்தால் மற்ற கவலைகள் ஏதும் இல்லை! அம்மாவுக்கு குழந்தை பெற்றோ, வளர்த்தோ அனுபவமில்லைதான். இருந்தாலும் பெரியவள், வாழ்க்கையை நிறைய பார்த்தவள். மற்ற பேர் இருப்பார்கள் துணையாக தெம்பாக இருக்கும்.

சின்னா ஜன்னல் வழியாக எட்டிப்பார்த்த போது தெரியும் பஞ்சாபிக்குழந்தைகளையெல்லாம் பார்க்கும்போது அவள் கண்கள் பிரகாசமாகும்.

அவளுக்குள் ஏதோ நாடகம் நடப்பது போலத்தான் அந்த நாட்களில் இருந்தது. ஒரே சமயத்தில் பெரிய சொத்துக் கிடைத்து விட்டது போலும். தனக்கு ஏதோ ஒரு குறுக்கீடு ஏற்பட்டு விட்டது போலவும் உணர்ந்தாள். அவளுக்குள் வளரும் கருவா? அல்லது அவளை ஆக்கிரமித்துக்



கொண்ட வெளி ஜீவனா? அது அவனுடையதா? அல்லது அவள் அதனுடையதா? அந்த சின்ன ஜீவன் அவளுடைய எதிர்காலம் போலத்தான் தோன்றியது. அதைச் சுமக்கும் போது அவள் உலகளாவி பெரிதாகி விட்டமாதிரி உணர்ந்தாள். அதே சமயம் அந்த வளர்ச்சி தன்னையே சாப்பிடுவது போலவும் உணர்ந்தாள். அவனும் அதுவும் விதிவசமாகப் பிணைந்துவிட்ட விநோத ஜோடி. எப்போதாவது அஜ்மல்கான் ரோடில் நடந்து போகும்போது சின்னப் பெண்கள் இவள் சாய்ந்த வயிற்றைப் பார்த்துப் பரிகாசமாக சிரிப்பது அவளுக்கு கோபம் வரவில்லை. ஒருநாள் நீயும் எங்கே போகப் போகிறாய்? என்றுதான் தோன்றும். பின்னும் அந்த அனுபவத்தை அந்த வேதனையை அந்த ஆறுதலை அவன் மார்பில் ஆக்கிரமிப்பை பயத்துடனும் சந்தோஷத்துடனும் எதிர்பார்த்தாள். ஒரு வழியாக ராமச்சந்திரன் டிக்கெட் வாங்கி வைத்தான். அவன் நண்பன் ஒருவன் எல்.டி.ஸி.யில் சென்னை போகப் போவதால் அந்த சமயத்தில் துணை அகப்[illegible]து என்று அதே கம்பார்ட்மெண்டில் டிக்கெட் வாங்கிவிட்டான். 'ஏன் நீங்கள் வரக் கூடாதோ' என்று கேட்க வேண்டும் போலத்தான் இருந்தது. இதில் ஏமாற்றம் தான். ஆபீஸில் அப்படி என்ன தலைபோகிற வேலை?

''குழந்தை பிறந்ததும் வந்து பார்க்க வேண்டாமா பின்னே? அப்ப லீவு கொடுக்க மாட்டேன்னு சொல்லிட்டா என்ன பண்றது? உங்கப்பாவுக்கு தந்திகொடுத்துட்டு டெலிபோன்லயும் பேசிடறேன். நேரா ஸ்டேஷனுக்கு வந்து நலுங்காம அழைச்சுண்டு போயிடுவார். உன் தம்பிமார்கள்ள யாராவது வருவானோல்லியா? அப்புறம் மறக்கவே மறக்காதே. திரும்பி வரப்ப அம்மாவைக் கூட்டிண்டு வந்து ரெண்டு மூணு மாசத்துக்காவது இருக்கட்டும். தாஜ்மகால்லாம் காட்டறேன்னு சொல்லு! நிச்சயம் உங்கம்மா வந்து ஆகணும். சொல்லிட்டேன். நானும் லெட்டர் எழுதிடறேன்.''

அப்பா! என்ன சுயநலம்! அம்மாவும் மாப்பிள்ளையே கைப்பட எழுதியிருக்கிறார் என்று வரத்தான் போகிறாள். இந்த மனுஷனுக்கு எந்தவித சிரமமும் கூடாது. குழந்தையை சுண்டுவிரலால் கூடத் தொட மாட்டார். பிரயாணத்தின் போது களைப்பாக இருந்தது. ராமச்சந்திரன் சிநேகிதரின் மனைவிக்கு எட்டு வயசிலும் ஆறு வயசிலும் இரண்டு பையன்கள். 'இத்தனை லேட்டா போறியேம்மா' என்று கவலைப்பட்டாள். 'நானும் சொல்லிப் பார்த்தேன் மாமி. இவர் கேட்டாத்தானே?'

ராமச்சந்திரன் கேப்பானே என்றார்

# எப்போதும் பெண்

சுஜாதா



ஸினெதெர். சின்னுவுக்கு தன் தோற்றத்தைப் பற்றி அப்போது கவலையோ கூச்சமோ இல்லாமல் இருந்தது. சீட்டு பூரா உட்கார்ந்து கொண்டு தொளதொளவென்ற பாடியுடன் என்னவோ புடவை என்னவோ பொட்டு என்னவோ நடை பூதாகாரமாக. இங்கே அங்கே நடப்பதற்குள் ஆயாசம்! ''பொஸிஷன் எல்லாம் நேராத்தானே இருக்கு? லேடி டாக்டர் பாத்து சொல்லிட்டாளோல்லியோ?''

ஸ்டேஷனுக்கு மதுவும், ரவியும் வந்திருந்தார்கள். பார்த்து ஒரு வருஷம் கூட ஆகவில்லை. இரண்டு பேரும் மாறியிருந்தார்கள். மதுவைப் பார்த்ததும் என்ன மது கல்யாண மாமே என்றாள்.

''என்டா நீயே பொண்ணு பார்த்தியா? அப்பா பார்த்தானா?''

''எல்லாம் ஆத்துக்கு வா. சொல்றேன். சின்னு உடம்புக்கு ஒண்ணுமில்லையே டாக்ஸில போகலாமோல்லியோ. கொஞ்சம் களைச்சாப்பல இருக்கே சின்னு.''

''ஏன் அம்மாகிட்ட இருந்து லெட்டரே வரலே நான் போட்டதுக்கு?''

''அதையேன் கேக்கறே. ஆஸ்பத்திரிக்கும் ஆத்துக்குமா அல்லாடிண்டிருக்கா.''

''ஆஸ்பத்திரியா?''

''ஆமா சின்னு. அப்பாவுக்கு உடம்பு சரியாயில்லே.''

''என்ன உடம்புக்கு?''

''என்னவோ சொல்லு ஒண்ணும் நேரா இல்லே'' என்று குள் கொட்டினன். அவா கல்யாணத்தை வேற எட்டாம் தேதிக்கு வெச்சிக்கலாம்னு சொல்லியிருக்கா. நீயும் வந்தாச்சு. அப்பாவுக்குச் சரியாப் போயிடுத்துன்னு நல்லது.''

''ஆத்தில தானே இருக்கார்?''

''ஆமாம். ஆஸ்பத்திரியில் படுத்துக்க மாட்டேன்னுட்டார். ஸ்திரமாக ஒரு வைத்தியம் பார்த்தோம்னு இல்லே. ஒரு நா இங்கிலீஷ் வைத்தியம். ஒரு நாள் நாட்டு மருந்து. ஒரு நா ஹோமியோபதின்னு மாத்திண்டே இருந்தா எப்படி?''

''என்னடா, ரகு கூட வேலைக்குப் போறதாமே?''

''ஆமாம் சின்னு. மூணு பேரும் வேலைக்கு சேர்ந்தாச்சு. அம்மா தான் வீட்டில ஒண்டியா இருக்கா அப்பாவை வெச்சண்டு. பைசா வசதி ஒண்ணும் குறைச்சலில்லே. ரிடையராயிட்டார் தெரியுமா?''

''தெரியும். அம்மா எழுதியிருந்தா. அதான் கடைசி கடுதாசி''.

''ஏதோ நிம்மதியா இருக்கலாம்னு முடியலே பாரு?''

''யாரு நிம்மதியா இருக்கலாமாம்னு?''

''எல்லாம் அப்பாத்தான்.''

வீட்டுக்கு வந்த போது வாசலில் நின்று கொண்டிருந்தார் அப்பா. மப்ளரைப் போட்டுக் கொண்டு.

''எதுக்காகப்பா வாசல்ல வந்து நிக்கறேள். டாக்டர் சொல்லியிருக்காரோல்லியோ நீங்க ரொம்ப வரவழைச்சுக்கறீங்கப்பா. ராத்திரி பூரா இருமல்...''

''இருக்கட்டும்டா. சின்னுவைப் பார்க்க ஆசையாக இப்பத்தான் வெளில வந்தார்'' என்றாள் அம்மா. சின்னு அப்பாவைப் பார்த்ததும் கண்ணீர் வடித்தாள். ''என்னப்பா இது, இப்படி குன்னிப்போயிருக்கேள்?''

''வயசாயிடுத்தும்மா.''

''அப்படி என்னப்பா வயசு உங்களுக்கு?''

''அதெல்லாம் அப்புறம் சொல்றேன். வா வந்து உக்காரு. மாப்பிள்ளை ஏன் வரலே?''

''அவருக்கு எத்தனையோ வேலைம்மா. இனிமே அவர் வந்து என்னைப் பார்க்காம நான் திரும்பிப் போறதில்லேன்னு வெச்சிருக்கேன்.''

''சின்னு உன் ஜாதகத்தைப் பார்த்து என்ன சொன்னன் தெரியுமோ?''

''போறும். போறும் வாம்மா. என்ன சாப்பிட்டியா? டேய் ரவி போய் ஒரு ஓவல்டின் வாங்கிண்டு வந்துடு.''

''டி. வி. எப்பம்மா வாங்கினது?''

மூன்று பிள்ளைகளும் சம்பாதிப்பதால் பல சௌகரியங்கள் வீட்டில் ஒட்டிக்கொண்டிருப்பதைப் பார்த்தாள்.

''உன் அலமாரியை அப்படியே கலைக்காம வெச்சிருக்கோம் சின்னு''.

ரவி அவளைத் தொட்டுப் பார்த்தான். ''என்னடி இப்படி குண்டாயிட்டே?''

''எல்லாம் புள்ள பெத்ததும் பழையபடி ஆயிடுவா!''

''ப்ரெக்னண்டுன்னு இவ்வளவு பெரிசா ஆயிடுவாளா?'' என்றான்.

''போடா''.

அம்மா ஆத்தி, ஆத்திகொண்டுவர ''இப்ப எதுக்கும்மா பாலு.?'' என்றாள்.

''சரியாப் போச்சு. இப்பலேர்ந்தே அதுக்கும் சேர்த்து சாப்பிட்டாகணும் நீ! என் கணக்குப்படி வைகாசி விசாகத்துக்குள்ள பொறந்துடும். இங்க பக்கத்திலேயே நர்ஸிங் ஹோம் இருக்கு. ரொம்ப சௌகரியம் ராப்பகலா திறந்து வெச்சிருக்கு. ஜீவன் நர்ஸிங் ஹோம்ல தானேக் கார்த்தாலேயே லேடி டாக்டர்கிட்ட கொண்டு காட்டிடலாம் பயமே இல்லே.''

''சின்னு நீ போய்ப் படுத்துக்கம்மா.''

''இரும்மா. அவ டில்லி கதையெல்லாம் சொல்லட்டும்.''

''அதெல்லாம் அப்புறம்'' என்று அம்மா பிடிவாதமாக உட்கார வைத்து சாப்பிட வைத்து ஹாலில் ஃபான் அடியில் பாய் போட்டு, மெத்தை போட்டு, ரெண்டு தலைகாணி கொடுத்து படுக்க வைத்தாள். அப்பா படுத்திருந்த ரூமைச் சார்த்திவிட்டு ''ராத்திரி இருமுவார்'' என்று சிம்னி விளக்கை ஏற்றி வைத்துவிட்டு பக்கத்தில் செம்பில், காய்ச்சி ஆறவைத்த ஜலம்வைத்து மூட அம்மா பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு விஷயத்தைச் சொன்னன்.

அப்பாவுக்குக் கான்ஸராம். (தொடரும்)

# மங்கல மதிமுகத்தில் மெருகூட்ட

# ஐடெக்ஸ்

## டீலக்ஸ் குங்குமம்

## matt finish



**இலவசம்**

தீபாவளியை முன்னிட்டு
எமது மதிப்பிற்குரிய
வாடிக்கையாளர்களுக்கு
ஐடெக்ஸின் அழகூட்டும்
அன்பளிப்பு

இதோ! உங்கள் எழில் வதனத்தை
ஜொலிக்கச் செய்யும் ஐடெக்ஸ்
டீலக்ஸ் மேட் ஃபினிஷ் குங்குமம் –
ஒவ்வொரு 9 கிராம் அல்லது
5 கிராம் வாங்கும்போது –
ஐடெக்ஸ் மீடியம் கண்மை
ஒன்றினை இலவசமாகப் பெறுங்கள்.

முத்துக்கள் ... 22-10-1983 முதல்
அமுலாகும் இச் சலுகை ஸ்டாக்
உள்ளவரை – தென்னிந்தியாவில் மட்டுமே.

அரவிந்த் லாபரட்டரீஸ் சென்னை 600033

Imageads M-1807

# ராசி பலன்

நவம்பர் 83

## மேஷம்

சில நாட்களாகப் படுத்திவந்த உடல்நிலை இம்மாதம் நல்ல முறையில் சீரடையும். மனக்கவலைகளும் பெரும்பாலும் குறையும். புதிய இடங்களுக்குச் செல்லுதலும், புதிய மனிதர்களின் சேர்க்கையுமாக உற்சாகமான மாதமாக இம்மாதம் கழியும். எதிர்காலத் திட்டங்களைச் செம்மைப்படுத்துவதற்கும், அதனைச் செயலாற்றுவதற்கும் ஏற்ற மாதமிது. குடும்பச் சூழ்நிலையிலும் மனவேறுபாடுகள் மாறி அமைதியான சூழ்நிலை உண்டாகும்.



## ரிஷபம்

கடமைக்காகவே உழைத்துக் கொண்டிருந்த உங்களுக்கு இம்மாதம் நல்ல ஓய்வு கிடைக்கும். பொழுது போக்கு அம்சங்கள் நிறைந்த மாதமாக இம்மாதம் விளங்கும். இல்லத்தில் சுபநிகழ்ச்சிகள் உண்டாகி அதனால் மகிழ்ச்சியும், சுற்றத்தார்களின் வருகையும் உண்டாகும். எதிர்பாராத விருந்தினர்களின் வருகையால் ஓரளவு பணச் செலவும் ஏற்படும். குழந்தைகளினால் வெளியுலகத்தில் புகழும், புதிய நண்பர்களின் அறிமுகமும் கிடைக்கும்.



## மிதுனம்

வழக்கமான வருமானத்தை விட அதிக அளவில் பணவரவு உண்டாகவும், வெற்றிகரமாகத் திட்டமிட்ட காரியங்களைச் செய்து முடிக்கவும் இம்மாதம் அனுகூலமாக இருக்கும். இதுவரை இருந்து வந்த சஞ்சலங்களும், தடுமாற்றங்களும் மாறி எதிர்காலம் உங்கள் கையில் என்ற நன்னம்பிக்கை பிறக்கும். வெளியூர்ப் பிரயாணங்களும், அதனால் நினைத்தபடி ஆதாயங்களும் கிடைக்கும். பணவரவு சரளமாக இருக்கும்.





## கடகம்

அரசாங்க உத்தியோகத்தில் உள்ளவர்களுக்கு எதிர்பார்த்த பதவி உயர்வோ, இடமாற்றமோ உண்டாகும். மேலதிகாரிகள் உங்களின் உண்மையான உழைப்பையும், நேர்மையான கண்ணோட்டத்தையும் புரிந்து கொள்ளுவார்கள். வீட்டில் இருக்கும் அன்பும், ஆதரவும் காரணமாக புதிய தொழிலை மேற்கொள்ள விரும்புகிறவர்கள், வெற்றிகரமாக அதனைத் தொடங்கலாம். பணச்செலவு ஓரளவு அதிகமாகவே இருக்கும். குழந்தைகளினால் மனஅமைதி குறைவு படும்.



## சிம்மம்

வேலைக்கு முயற்சித்துக் கொண்டிருப்பவர்களுக்கு இது ஒரு நன்மைதரும் மாதம். எதிர்பாராத இடத்திலிருந்து பிரகாசமான வாய்ப்புகள் வர இடமுண்டு. பொதுஜனங்களிடையே வேலை செய்பவர்களின் உழைப்பிற்கும் சமூக உணர்விற்கும் கௌரவத்தைக் கொண்டு தரும் மாதமாக இருக்கும். பெரிய தலைவர்களின் சந்திப்பும் அவர்களுடைய நட்பும் நன்மை தரும் வகையில் அமையப் பெறும். ஓரளவு கடின உழைப்பை மேற்கொள்ளும் நிலையே உண்டாகும். உழைப்புக்கேற்ற பலனும், புகழும் உண்டாகும்.



## கன்னி

சிறிது நாளாக இருந்து வந்த பொருளாதார நெருக்கடி ஓரளவு குறைந்து, பணவரவுக்கான மார்க்கங்கள் தெரிய ஆரம்பிக்கும். எதிர்பாராத விதமாக நண்பர்களின் உதவியாலும் கடன் தொல்லைகளில் இருந்து விடுபடக் கூடும். எனினும் பணவிஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாகவும், செலவு செய்ய வேண்டிய விஷயங்கள் ஒவ்வொன்றிலும் கணக்குப் பார்த்துக் கண்காணிப்புடனும்

இருக்க வேண்டிய மாதமிது. மனைவி, மக்களிடையே அபிப்பிராய பேதங்களும்தோன்றி மனம் சஞ்சலத்துக்கு ஆளாகலாம்.



**துலாம்**

தனியார் துறைகளிலும், சொந்த வியாபாரத்திலும் ஈடுபட்டுள்ளவர்களுக்கு வழக்கத்தை விட அதிக பொறுப்புள்ள கடமைகளை ஏற்க வேண்டிய நிலைமை ஏற்படும். வெளியூர்ப் பிரயாணங்களும், புதிய பலன் தரக்கூடிய நண்பர்களின் சேர்க்கையும் உண்டாகும். குடும்பத்தில் சுபநிகழ்ச்சிகள் உண்டாகும். குழந்தைகளைப் பொறுத்த வரை எதிர்பார்த்தது போலில்லாத ஏமாற்றங்கள் உண்டாகலாம். செலவு வரவுக்குள் அடங்கியதாக இருக்கும்.



**விருச்சிகம்**

மிகுந்த செல்வாக்குள்ள நண்பர் ஒருவரின் வருகையால் உங்களுடைய வாழ்க்கையில் புதியதொரு மலர்ச்சி உண்டாகும். இதுநாள் வரை இருந்து வந்த சோர்வும், தைரியமின்மையும் மாறி புதியதொரு நல்ல எதிர்காலத்திற்கு வழி காண்பீர்கள். குடும்பத்தாரிடையேயும் பொது மக்களிடையேயும் உங்களுடைய செல்வாக்கு பெருகும். பண வரவு சரளமானதாக இருக்கும்.



**தனுசு**

திருமணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்களுக்கு இனிய செய்திகளைக் கொண்டு வரும் மாதமிது. அயல்நாடுகளில் இருந்து நற்செய்திகள் கிடைக்கும். கலைஞர்களுக்கும், இரும்பு சம்பந்தப்பட்ட வியாபாரிகளுக்கும் நல்ல பலன் கிடைக்கும். குழந்தைகளின் காரணமாக வீட்டில் நிலவி வந்த குழப்பங்கள் மாறி சுமுகநிலை கிடைக்கும். நல்லகாரியங்களின் பொருட்டு செலவினங்கள் அதிகப்படும்.



**மகரம்**

எதிர்பாராத சூழ்நிலையில் வாழ்க்கையில் ஏமாற்றத்திற்கு உள்ளாக வேண்டி நேரலாம். ஆனால் புதிய நபர்களிடமோ, நண்பர்களிடமோ அதி ஜாக்கிரதையாகவும், வாக்குவாதங்களில் ஈடுபடாமலும் இருப்பது நல்லது. உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் செய்த வாக்குறுதிகளும் தவற நேரலாம். அதனால் மனத்தளர்ச்சி அடையாமல் தொடர்ந்து கடமையைச் செய்து வந்தால் மாதத்தின் இறுதி வாரத்தில் சூழ்நிலைகள் மாறுபடும்.



**கும்பம்**

பொருளாதார உதவியொன்றை எதிர்பார்த்துக் காத்திருக்கும் உங்களுக்கு விரைவில் நல்ல செய்தியொன்று கிடைக்கும். எதிர்பாராத இடத்திலிருந்து வேலைவாய்ப்பொன்றும் கிடைக்கக் கூடும். வரும் சந்தர்ப்பங்களை இந்தச் சமயத்தில் நன்கு உபயோகப் படுத்திக் கொண்டு விடுவீர்களானால் வாழ்க்கையில் உன்னத நிலையை அடைவீர்கள். மனதுக்கு மிக அன்னியமானவர்களிடமிருந்தும் நிறைவு தரும் செய்தி கிடைக்கும். பணச்செலவு வரவுக்கேற்றதாக இருக்கும்.



**மீனம்**

மாதத்தின் முதல் மூன்று நாட்களில் ஏதேனும் ஏமாற்றம் தரும் செய்திகளாக நடந்தாலும் மன அமைதியை இழக்கவேண்டிய தேவையில்லை. ஏனெனில் அவையாவும் விரைவில் மறைந்து விடக் கூடியவை. பெரியோர்களின் ஆசியும், தெய்வானுகூலமும் உங்கள்பால் நிறைந்துள்ளது. இம்மாதக் கடைசி மற்றும் அடுத்த மாதத்திற்குள் நிலைமைகள் முழுமையாக மாறி மகிழ்ச்சி தரக் கூடிய செய்திகள் வரும். பணச் சிக்கல்களும் மறைந்து போகும்.

# கரை சேர்க்கும் தோணிகள்

சுபா

குறுநாவல்

## 1

அந்த நாள் வெகு தூரத்தில் இல்லை என்பது மட்டும் அவனுக்கு நிச்சயமாகத் தெரிந்தது. ஒத்திப் போடுவதிலும் தள்ளிப் போடுவதிலும் இந்தப் பிரச்சினைக்கு ஒரு தீர்வு கிடைத்துவிடப் போவதில்லை என்று புரிந்தது. பையிலிருந்து சிகரெட் பாக்கட்டை எடுத்து ஒரு சிகரெட்டை உருவி எடுத்து உதடுகளில் பொருத்தினான். 'சர்ரக்' என்று நெருப்புக் குச்சியைக் கிழித்து அதன் முனை பற்றவைத்து நெஞ்சு வரை புகையை இழுத் தான். ஜன்னல் வழியாக வெளியே பார்த் தான். கடைசி நேரப் பரபரப்பில் மக்கள் அலைந்து கொண்டிருந்தார்கள். 'கூக் கூக்' 'கூக்' என்று சப்தித்துக் கொண்டு கிரஷ் பாட்டில்கள் நகர்ந்தன.

'காப்பி, டீஈஈஈ, டீ, காப்ப்பிய்ய்ய்'

'போய்ச் சேர்ந்தவுடனே மொதக் காரியமா ஆசாமியைப் போய்ப் பார்த்து வேலைய முடிச்சிடு....'

பாக்க வைக்குத்தான் குடுத்து வக்கலே.'

பத்ரி நாராயணன் எல்லாவற்றையும் மறந்து சிகரெட்டை ஆழமாய் இழுத்து புகை எதுவும் வெளி வராமல் நெஞ்சில் அடக்கிக் கண்களை மூடிக் கொண்டான்.

நெஞ்சில் மண்டியிருந்த புகை வெளிவரத் தவித்த மாதிரி அவனுள் நினைவுகள் முட்டி மோதிக் கொண்டன. எத்தனை நாள் சமாச்சாரம் அது?

'ஜிவுக்' என்று இழுபட்டு வண்டி மெல்ல நகர ஆரம்பித்தது.

## 2

"ஊருக்குப் புதுசா நீ?"

"ஆமா மாமா."

"ஜாகை?"

"ஸ்கூல்லயே இருந்துக்கோன்னு சொல்லிட்டா."

"ஒனக்கு யாரு சொன்னு இந்த எடத்தைப் பத்தி?"

'கப்பையா வாத்தியார்தான் சொன்னார். சன்னதித் தெருவுல தெற்குக் கோடிலேர்ந்து நாலாவது வீட்ல வீட்டுச் சாப்பாடு கெடைக்கும்னு..."

"ஆறு எந்த நாழின்னு சொல்லலையாக் கும்?"

பத்ரி லஜ்ஜையில் நெளிந்தான். விறகு பற்றவைக்கு முன் விருந்துக்கு உட்கார்ந்து விட்ட மாதிரி குறுகினான்.

"நான் போயிட்டு அப்புறம் வரேன்..." என்று நழுவப் பார்த்தான்.

"பரவால்ல உக்காரு... இன்னும் கால் மணி நேரத்துல தயாராகும்... சொந்தூர் எது?"

பத்ரி நிஜமாகவே சங்கடமாய் உணர்ந் தான். இவர்தான் கப்பையா சொன்ன 'வெங்கடேச மாமா'வாய் இருக்க வேண்டும். இரண்டு கைக்கு அடங்காத கூந்தலைக் குடுமி யாய் முடிந்திருந்தார். அதில் கறுப்பை விட வெள்ளை பிரதானமாய் இருந்தது. நெற்றி அகலமாய் இருந்தது. புருவங்களில் முடி சொற்பம். புருவ மேடுதான் தெரிந்தது. கண்கள் கத்தி கிழித்த மாதிரி இடுங்கி யிருந்தன.

**மோர் குழம்பில், வேகவைத்த உருளைகிழங்கு துண்டுகளை வதக்கிய பின போட்டால் மிகவும் ருசியாக இருக்கும். அரை உருளை கிழங்கு துண்டினை மசித்துப் போட்டால் குழம்பு கெட்டியாக இருப்பதுடன், அரிசி மாவு கரைத்து விடவேண்டிய அவசியமும் இல்லை.**

- ரீதாலக்ஷ்மி

' எந்த ஊர்னு கேட்டேன்...'' மறுபடியும் அவரே கேட்டார். குரல் சற்று வித்தியாசமாய் இருந்தது. பேச்சு உதிர்கையில் கூடவே ஒரு மெல்லிய எதிரொலி மாதிரி கீழ் ஸ்தாயியில் இன்னொரு குரலும் சேர்ந்து வந்தது.

''பத்மனுபன்கோயில்.''

''பக்கத்திலதான். அப்பா என்னவாயிருக்கார்?''

''அப்பா இல்லை... அம்மாவும் போய்ச் சேர்ந்துட்டா...''

''த்சு...த்சு... கூடப் பொறந்தவா?''

' ஊஹூம்.''

' பத்மனுபன் கோயில்ல தனியாவா இருந்தே?''

''பெரிப்பா வீட்லதான் கொஞ்ச நாள் இருந்தேன். எனக்கும் அவாளுக்கும் ஒத்து வரலை.சுப்பையாதான் வாத்யார் உத்யோகம் இருக்கு. வந்துடேன்னு கூப்ட்டார் வந்துட்டேன்...''

''ஸ்கூல்லயா?''

ம்.''

' இன்னும் முடிவாகல்லே. நூறே... நூத்தி இருபதோ தருவான்னு நெனைக்கிறேன் அதுவும் அப்பப்போ கிராண்ட் வந்தால் தான் கெடைக்கும் போல இருக்கு.'

வெங்கடேசன் சட்டென்று நிமிர்ந்தார்.

''ரெண்டு வேளை சாப்பாட்டுக்குக் கூடக் காணுதே.''

' சாப்பாட்டுச் செலவு மாத்திரம்தான். இருக்கிற எடத்துக்கு வாடகை கெடையாது. வருஷத்துக்கு மூணு மாசம் லெக்கேஷன்... வேற உத்தியோகம் பண்ணியும் சம்பாதிக்கலாம். இதெல்லாம் போக ட்யூஷனுக்கு ஏற்பாடு பண்ணித் தரேன்னு சொல்லியிருக்கார் சுப்பையா. அதுல ஒரு நாப்பது அம்பது கெடைக்கும் போல இருக்கு.''

''எதுவரைக்கும் வாசிச்சிருக்கே?''

''எஸ்ஸெஸ்ஸெல்ஸி.''

''கஷ்டம்தான். நீயாவது அதை பாஸ் பண்ணிட்டே. உன் வயசுல எனக்கொரு பிள்ளை இருக்கான். கரண்டியைப் பிடிக்கத் தான் லாயக்கு... அவனோட அண்ணன் ரொம்பச் சமர்த்து... படிச்சான். டவுன் காலேஜுக்குப் போனுன். பாஸ் பண்ணுன். பூனுல பெரிய கம்பெனில உத்யோகம்.. அவ்வளவுதான். அதோட எங்களையும் இந்த ஆண்டிமங்கலத்தையும் மறந்துட்டான்.''

ஐந்து நிமிஷப் பழக்கத்தில் இத்தனை விஷயங்களைச் சங்கோஜமில்லாமல் அவர் பேசியது பத்ரிக்கு ஆச்சரியமாய் இருந்தது.

''ரகுபதி...'' என்று உள்ளே திரும்பிக் குரல் கொடுத்தார்.

நான்கு முழ வேட்டியை மடித்துக் கட்டி இடுப்பில் ஒரு துண்டை உருட்டிக் கட்டிக் கொண்டு இறந்த மார்போடு வாசலைத் தாண்டி வெளியே வந்தவனை பத்ரி பார்த்தான். வெங்கடேசனின் ஜாடை அப்பியிருந்தது. அதே அகல நெற்றி இடுங்கின கண்கள். குடுமி வைக்காமல் கிராப் வைத்திருந்தான்.

''என்னப்பா?''

''ஆச்சா?''

''அந்த நிமிஷத்துல எலை போட்டுரலாம்.''

''நம்ம ஸ்கூல்ல வாத்தியாராச் சேர்ந்திருக்கானும். பத்ரிநாராயணன்னுதானே சொன்னே?''

''ஆமா மாமா.''

''சுப்பையா சொல்லி விட்டாராம்.... இனிமே இங்கதான் சாப்பாடு.... அக்கௌண்டா, கேஷா?''

''அக்கௌண்டுன்னு சௌகரியமாயிருக்கும்.''

''நோட் புக்ல ஒரு புதுப் பக்கம் போட்டுடு ரகுபதி....''

''சரிப்பா.''

அன்றைக்கு முதன் முறையாய் ரகுபதியைப் பார்த்தபோது கூட அது ஒரு வியாபார உறவாய்த்தான் இருக்குமென்று தோன்றியதே தவிர ஆழமாய்ப் பின்னிக் கொள்கிற நட்பாய் பின்னுல் மலரப் போகிறது என்று எதிர்பார்த்திருக்கவில்லை. ஆரம்பத்திலிருந்த சங்கோஜமும் லஜ்ஜையும் கொஞ்சம் கொஞ்சமாய் உதிர்ந்து போய், ஸ்கூல் முடிந்தவுடன், டியூஷனுக்கு வருகிற பையன்களை அனுப்பியவுடன் நேரே சன்னிதித் தெருவுக்குத்தான் கால்நடக்க ஆரம்பித்தது. வெங்கடேசனுடன் கொஞ்ச நேரம், ரகுபதியோடு நிறைய நேரம் என்று பேச்சுக்கு மனது அலைய ஆரம்பித்தது. ஒரு மாதத்திலேயே ஒட்டுதல் அதிகமாய்ப் போய் பத்ரி தேடிப் போகாத நாளெல்லாம் ரகுபதி அவனைத் தேடி வருகிற அளவுக்கு நெருக்கமாகி விட்டது.

ஆற்றங்கரையில் அரை நிலவு வெளிச்சத்தில் கால் பதியப் பதிய நடப்பதிலும்,

---

**உளுந்துமாவை எவ்வளவுக் கெவ்வளவு நைசாக அரைக்கிறேமோ, அவ்வளவுக்கவ்வளவு எண்ணெய் இழுத்துக் கொள்ளும். ஆகவே வடை மாவை நைசாக அரைக்காமல் கரகர வென்று அரைத்து ஒரு ஸ்பூன் அரிசிமாவையும் கலந்துசரக்கையால் வடையைத் தட்ட, வடை பெரிதாக பூரித்து வரும்.**

**- திருமதி தேவனுதன்**

இரவு விழுந்த பின்னும் கூட நினைத்துக் கொண்ட மாதிரி வேஷ்டியைக் களைந்துவிட்டு தண்ணீரில் தொபேலென்று குதித்து எதிர்க் கரைவரை போட்டி போட்டுக் கொண்டு நீச்சலடிப்பதிலும் ஒரு சொகுசான சுகம் பொதுவாய்க் கிடைத்ததினால்தானு தன் வேர்கள் கிளம்பின என்று நிறைய நாள் யோசித்திருக்கிறுன். இன்னதுதான் என்று வரையறுக்க முடியாத ஏதோ ஒரு பொது வான பிடிமானம்தான் இந்த உறவுக்கு உயிர் கொடுத்திருக்க வேண்டும் என்று மட்டும் புரிந்தது.

## 3

**லே**சான ஒரு அதிர்வில் கண்ணைத் திறந் தான் பத்ரி. வண்டி மை இருட்டில் நின்று கொண்டிருந்தது. 'கிர்'ரென்று மேலே மின் விசிறி சுற்றியும்கூட ஏகமாய்ப் புழுங்கியது. எதிர் ஸீட்டில் குழந்தை யொன்று மடியில் தலை சாய்த்திருக்க அதன் இதழ் கடையில் பால் துளி ரோஜா இதழ் மேல் விழுந்த மாதிரி தெரிந்தது. அதன் தாயின் மார்பு குழந்தைக்காக மூடாமல் திறந்திருக்க, பாதி வாய் திறந்த நிலையில், அவள் தூங்கிக் கொண்டிருந்தாள். ஜன்னலிலிருந்து வெளி யில் பாய்ந்த வெளிச்சம் சதுரமாய் கீழே விழுந்து சிதறியிருந்த கருங்கல் ஜல்லியைக் காண்பித்தது. பத்ரி நிலைகொள்ளாமல் மறு படி கண்களை மூடிக் கொண்டான். விடிய வேண்டும் ஊர் போய்ச் சேர.

## 4

"**அ**ப்பா கையோட கூட்டிண்டு வரச் சொன்னுர்டா பத்ரி."

"வேண்டாம்ரகு...நான் எங்கேயோவெளி யில போய்ட்டேன்னு சொல்லிடு."

"முடியாது. வா.. வரத்தான் போறே."

"ஒனக்கு என் நெலமை தெரியாதாடா? என்னவோ இருந்தாப்ல இருந்து உடம்புக்கு முடியலை. படுத்துண்டேன். உடம்புன்னு வைத்தியம் பார்க்காம இருக்க முடியாது. வைத்தியம்னு சும்மாவா நடக்கும்? கொஞ் சம் நஞ்ச காசும் செலவாய்டுத்து ரகு..."

"இதெல்லாம் என்கிட்டச் சொல்ல வேண் டாமே. அங்க வந்து சொல்லிக்கோ..... தொரைக்கு வேற கோபம்... ரெண்டு நாளா நா வந்து உன்னைப் பார்க்கலையேன்னு. நான் அகரமாங்குடிக்குப் போயிட்டேன்டா. அத ஞலதான் வர முடியலை.... வா... ப்ளீஸ்... வான்னு வரணும்..."

பத்ரிக்கு கண்ணில் லேசாய் நீர் திரண்டு போயிற்று. வெங்கடேச மாமா முகத்தில் விழிப்பது என்பதே ஒரு சங்கோசமான செய லாய்த் தோன்றிற்று. நான்கு வீதி தள்ளி யிருக்கும் சன்னிதித் தெருவுக்கு வந்து சேர் வதற்குள் கால்கள் பின்னிபின்னித் தடு மாறின.

வாசலிலேயே வெங்கடேச மாமா நின்று கொண்டிருந்தார்.

"சாப்பிட்டேளாமே மாமா?"

"ரெண்டு நாளாத் தலையைக் காட்டாம இருந்துட்டு, இப்ப இழுத்துண்டு வரச் சொன்னதுக்கப்புறம்'சாப்பிட்டேளாமே'வா?

"......"

"ஏன் வரலை?"

"வயிறு கொஞ்சம் உப்பினப் போல இருந் தது மாமா, பசியேயில்லை..."

"பொய் சொல்லப்படாது. கண் ஏன் கீழே பார்க்கறதாம்... தைரியமா என்னைப் பாத்துச் சொல்றது..."

"கொஞ்சம் பணத் தட்டுப்பாடு... ஏற் கெனவே போன மாசத்துப் பாக்கி நிக்கறது.

**கேக் வேக வைக்கும்போது அதன் மேல் ஒரு பிரவுன் பேப்பர் போட்டு மூடினால் வெந்தபின் கேக்கின் மேல் ஆடை கட்டா மல் இருக்கும்.**

**-சரஸ்வதி**

காசு கொடுக்காமச் சாப்பிடறதுக்கு யோச னையா இருந்தது மாமா..."

"பணம் என்னிக்கு வரும்?"

"தெரியலை... ஒரு வாரம் ஆகலாம்."

"ஆக இந்த எட்டு நாளும் ஈரத் துணிய வயித்துல போட்டுண்டு இருக்கப் போறி யாக்கும்?... இல்லன்னு வேற எடத்துல சாப்பாட்டுக்கு ஏற்பாடு ஆகியிருக்கா?"

"மாமா... சன்னிதித் தெருவைத்தவிர வேற எடத்துல ஒரு பருக்கை கூட எனக்கு எறங்காது..."

"நெஜமாத்தான் சொல்றியா?"

"சத்தியமா மாமா..."

"அப்ப உள்ள வந்து உக்காரு... ரகு பதிக்கும் உனக்கும் நான் வித்தியாசம் பாக்கற தில்லை... நீ பிரிச்சுப் பிரிச்சுப் பேசறது எனக்குப் பிடிக்கலை... வா.. பொண்டு கள்ளாம் இன்னும் சாப்பிடாம நமக்காகக் காத்திண்டிருக்கா..."

"சரி..."

"அம்மாடீ கல்யாணி... இலை போடு... இலை போடு... பத்ரி வந்துட்டான்."

முற்றத்தில் இறங்கி கையை அலம்பிக் கொண்டான். மனசு இருந்த இருப்பில்

சாப்பாடு சரியாய்க் கொள்ளவில்லை. சாப்பிடு கிற சாப்பாட்டுக்கு யாராவது கடன் வைப் பார்களோ?

மெதுவாய்க் கடன் ஏறிக் கொண்டேதான் இருந்தது. மாதா மாதமும் ஏதாவது ஒரு வகையில் இழுத்தடித்து வெங்கடேச மாமா பணத்திற்கு ஓட்டை விழுந்தது. வெங்கடேச மாமாவும் கேட்கக் கூடாது பண விஷயம் என்று சங்கல்பம் கட்டிக் கொண்ட மாதிரி அது பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

அந்தக் கடனோடு நின்றிருந்தால் வெறும் பண விஷயம்தான் என்று மனது சமாதானப் பட்டுப் போயிருக்குமோ என்னவோ! பள்ளிக் கூடத்திலேயே ஆனது ஆகட்டும் என்று தங்கி யிருந்துவிட்டுச் சாப்பாட்டுக்கு மட்டும் அங்கே போய்க் கொண்டிருந்தால் இந்தப் பிரச்சினையே வந்திருக்காதோ என்னவோ?

''என்ன பத்ரி மென்னு மென்னு முழுங் கறே... சொல்லேன்.''

பத்ரி பதில் சொல்லாமல் இலையை மடித்து எழுந்தான்.

''நீ கேளுடா ரகுபதி.''

''அப்பா கேக்கறுனே சொல்லேன் பத்ரி.''

பத்ரி வாசல் தொட்டியில் இலையைப்-போட்டுவிட்டு முற்றத்தில் கையை அலம் பிக்கொண்டு திண்ணையில் வந்து உட்கார்ந் தான். வெங்கடேசன் வெற்றிலைப் பெட்டி யுடன் வந்து சேர்ந்து கொண்டார்.

''உடம்புக்கு மறுபடியும் ஏதாவது?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே மாமா... இன்ஸ்பெக்ஷனுக்கு வந்திருந்த ஆபீஸர் ஸ்கூல்ல இனிமே வாத்தியார்லாம் தங்கக் கூடாதுன்னு கண்டிஷனாச் சொல்லிட்டார். ஒரு வாரம் டயம் குடுத்திருக்கா....''

''அட அசமஞ்சம்... இதுக்கு இவ்வளவு கஷ்டப்படுவானேன்... என்னைக் கேட்டா நான் ஒரு எடம் இங்கேயே ஒழிச்சுத் தர மாட்டேனா பத்ரி?''

''ஏற்கனவே சாப்பாட்டுக்கே கடன் எழுதி எழுதியே நோட்டு தீர்ந்துபோச்சு... இதில ஜாகைக்கு வேற உங்க கிட்டயே எப்படி மாமா நான் கேப்பேன்?''

''என்னை நீ இன்னும் வேத்து மனுஷனாவே நெனைச்சுண்டிருக்கே...''

''நான் இங்க வந்துட்டா உங்களுக்கெல் லாம் சிரமம் ஜாஸ்தியாயிடும்.''

''அந்தக் கவலை எனக்கில்ல இருக்கணும்.''

# 5

**ப**த்ரிநாராயணனுக்கு அந்த நினைவுகளின் பேரில் ஒரு அபரிமிதமான காதல் இருந்தது. நான்கு வருஷங்களுக்கு முன் இந்த மாதிரி சிகரெட் பிடித்துக் கொண்டு தூக்கம் விழித் துக்கொண்டு ஒரு பயத்துடனும், படபடப் புடனும் கவலையுடனும் பயணப்படுவோம் என்று எண்ணிக் கூடப் பார்த்ததில்லை. ஆனை யடிமங்கலமும் அதன் ரம்மிய அழகும், எல் லைக் காளியின் குங்குமப் பொட்டும் தான் நெடுநாள் சுவாசிக்கப் போகிற இட மென்று நினைத்திருந்தான். வெங்கடேச மாமாவின் வீட்டில் ஒரு சின்ன ட்ரங்குப் பெட்டியும், துணி உலர்த்துகிற சப்பாணிக் கயிறுமாய்க் குடிவந்தபோதே அந்த இடத் தில் தான் கடைசிவரை ஜீவனம் செய்ய நேருமென்று தோன்றிற்று.

அந்த முனைப்பில் கிடைத்த அந்தச் சின்ன பகையில் மனசு தானுய்ப் படிந்து அவர்களுடன் ஒட்டிக் கொண்டு விட்டது. ட்யூஷனுக்கு மாத்திரம் பள்ளிக் கூடத்தில் பெரிய மனசு பண்ணி ஒரு அறை ஒழித் துக் கொடுத்திருந்தார்கள். அங்கேவேலைமுடிந்ததும்ராத்





திரி சாப்பிட்டுவிட்டு ரகுபதியோடு காலாற நடந்து போய்விட்டுத் திரும்பியவுடன் வாசல் புறத்துக் கயிற்றுக் கட்டிலில் படுத்துக் கொண்டு, பக்கத்துக் கட்டிலில் வானம் பார்த்துப் படுத்திருக்கும் வெங்கடேச மாமாவோடு மணிக் கணக்காய் ஊர் வம்பையும், சுய புராணத்தையும் மூட்டை, பவிழ்த்து விட்டுக் கொண்டே தூங்கிப் போவது கொஞ்சம் கொஞ்சமாய்ப் பழக்கப் பட்டுப் போனது.

சாப்பாட்டுக்கு மாத்திரம் வந்து சென்று கொண்டிருந்த நாட்களில் இல்லாத ஒரு புதுப் பரிச்சயம் இப்போது கிடைத்திருந்தது.

வெங்கடேசனின் மூன்று பெண்கள். அவரோடு பேசுகிறபோது தரையைப் பார்த்துப் பேசும் கல்யாணி, ராதா, உமா.

''பேசாம மண் தரைல நெடுகக் கண்ணாடியைப் பதிச்சுடலாமான்னு பாக்கறேன்'' என்றான் ரகுபதி ஒரு நாள்.

''எதுக்குச் சொல்றே ரகுபதி?''

''இல்லை நீயும் சரி, என் தங்கைக் கழுதைகளும் சரி, ஒருத்தர் மூஞ்சை ஒருத்தர் பார்த்துப் பேசறதுக்கு சௌகரியமாயிருக்கும் பாரு....''

அன்றைக்கு வெங்கடேச மாமாவோடு சேர்ந்து எல்லோரும் சிரித்தார்கள்.

இடையிலிருந்த திரை கொஞ்சம் கொஞ்சமாய் விலகிஅவர்கள் அவனோடு சகஜமாய்ப் பழகுவதற்கு ஆறு மாதம் கூடப் பிடிக்கவில்லை. தை வந்தது. கூடவே கல்யாணிக்கு வரன் வந்தது.

குழந்தைகளுக்கு மலம் சரியாகப் போகாமல் மப்பியிருந்தால் இரண்டு ஸ்பூன் கடுகை நன்கு கருகவிட்டு நீர் விட்டுக் கொதிக்கவிட்டுப் பின் இதை வடிகட்டிப் புகட்டினால் மலம் நன்கு போகும்.

-உஷாலக்ஷ்மி

''நீ எங்காத்துல காலை வச்ச முகூர்த்தம் தாண்டா பத்ரி முதப் பொண்ணுக்கு கல்யாணம் நிச்சயமாயிடும் போல இருக்கு... ராசியானவண்டா நீ...''என்று வெங்கடேச மாமா இவனைக் கட்டிப் பிடித்தபோது நிஜமாகவே பெருமையாய் இருந்தது.

''யாரு மாமா பையன்?''

''உங்கூருதான்.''

''பத்மனாபன்கோயிலா?''

''ஆமா... பெத்தவாதான் அங்க இருக்கா. பையன் மைசூர்ல ஏதோ எலக்ட்ரிக் கம்பெனில இருக்கானாம். கைநிறையச் சம்பளம் வரது...''

''ராஜகோபாலனா மாமா?''

''உனக்கு அவனைத் தெரியுமாடா பத்ரி?''

''கேள்விப்பட்டிருக்கேன்... ஆனா அவா அப்பா அம்மா பணம் பிடுங்கியாச்சே மாமா. அழிச்சாட்டியம் பிடிச்சவாளாச்சே... நம்மால அவ்வளவு முடியுமான்னு பாத்தேனா?''

''எல்லாம் பேசியாச்சுடா. கொஞ்சம் கூடத்தான் எதிர்பார்க்கறா... ஆனா பையன் நல்ல உத்தியோகத்தில இருக்கான். கொஞ்சம் முன்னைப் பின்னை போனாலும் முடிச்சுடலாம்னு இருக்கேன். வெள்ளிக் கிழமை பொண் பார்க்க வரேன்னு சொன்னா... பையன் எப்படி? அதைச் சொல்லு.''

''ராஜகோபாலனோட எனக்குப் பழக்கம் கெடையாது. சின்ன வயசுலேயே அவன் மாமாவோட மைசூருக்குப் போயிட்டான். அவனுக்குக் கல்யாணியைப் பிடிச்ச, அவளுக்கு அவனைப் பிடிச்சிருந்தா மத்த விஷயங்களைப் பத்தி நமக்கென்ன கவலை மாமா?''

ஆனால் கவலை அலை அலையாக வந்து தாக்கிற்று. கல்யாணம் நிச்சயமாகிறபோது எதிர் பார்த்ததை விட ஏராளமாய்ச் செலவு பண்ண வேண்டி வந்தது. கௌரவத்திற்காக விட்டுக் கொடுக்க முடியாமல் நடத்தி வந்த ஹோட்டலை முதலியாருக்கு எழுதிக்கொடுத்துப் பணம் புரட்ட வேண்டி இருந்தது.

கல்யாணி ஒரு வழியாய்க் கட்டுச்சாதக் கூடையோடு புக்ககத்திற்குக் கிளம்பிப்போன போது வெங்கடேச மாமா பிழிந்து போட்ட சக்கை மாதிரி உணர்ந்தார். பூனாவிலிருந்து வந்திருந்த மூத்த பையன், 'நான் என்னப்பா செய்யறது?' என்று கையை விரித்து விட்டான். ரகுபதி உபயோகமற்றவனாய் நொடித்திருந்தான். பத்ரிக்கு மனசு ஆறாமல் வெந்து கொண்டிருந்தது. இத்தனை செய்த குடும்பத்துக்குத் தான் எப்படித் திருப்பிச் செய்யப் போகிறோம் என்று பிரமிப்பாய் இருந்தது. ஏதாவது உடனடியாகச் செய்ய வேண்டும் என்கிற துடிப்பு மாத்திரம் விடாமல் நெஞ்சை உறுத்திக் கொண்டிருந்தது. சொல்லி வைத்த மாதிரி சுப்பையா வாத்தியார் ஒரு வழி காண்பித்தார்.

''மெட்ராஸ்ல ஏதோ ஸ்கூல்ல வாத்தியார் உத்தியோகம் காலியாயிருக்குன்னு இந்தப் பேப்பர்ல வந்திருக்கு... நீ வேணாப் போட்டுப் பாரேன் பத்ரி...''

அப்போதுதான் தமிழ்ப் பேப்பரில் மற்ற வேலைகளுக்கான வாய்ப்புகள் விளம்பரமாய் வருவதே அவனுக்குத் தெரிந்தது. அந்த வாத்தியார் உத்தியோகத்துக்கு மட்டுமல்லாமல் இன்னும் கண்ணில் பட்ட இரண்டு மூன்று விளம்பரங்களுக்கும் சேர்த்து விண்ணப்பித்து வைத்தான். சரியாய் நாற்பத்திரண்டாவது நாள் சென்னையிலிருந்து அழைப்பு வந்தது இன்டர்வ்யூவுக்கு. கூப்பிட்டிருந்த டயர் கம்பெனி வியாபாரத்தில் அழுத்தமாய்க் கிளை பரப்பிக் கொண்டிருந்தது.

அந்தச் சின்ன ட்ராங்குப் பெட்டியைக் கீழே வைத்துவிட்டு வெங்கடேச மாமாவின் காலில் சாஷ்டாங்கமாய் விழுந்து கண்ணீர் பொங்க கதறியபோது அவர் அவனைத் தூக்கி நிறுத்தினார்.

''ஏண்டா அழறே அசடு... நல்ல வேலைக்குத்தானே போறே... ஜாக்கிரதையாப் போயிட்டு வா... லீவு கெடைச்சா எங்களையெல்லாம் வந்து பார்த்துண்டுரு... மறந்துடாதே...''

''எப்படி மாமா மறப்பேன்... மறக்கறதுக்குத்தான் வயிறு சம்மதிக்குமா? நான்












90 ஆண்டுகளாக நம்பகமானது.

அமிர்தாஞ்சன்

துரித நிவாரணம் உறுதியுடன் அளிப்பது.
தீய பின்விளைவுகள் இல்லாதது

OBM 8321 TM

நீங்கள்...
தரமான பொருளைப் பெற அதிகமாக
செலவு செய்கிறீர்களா?
அல்லது மட்டமான பொருளே போதும்
என்று இருந்து விடுகிறீர்களா?

# பிஜ் கொண்டு அதை மதிப்பிடுங்கள்

### செயல்திறனிலே

எவர்ஸில்வர் பாத்திரங்கள், கண்ணாடிப் பாண்டங்கள், வாஷ் பேஸின்கள், எவற்றிலிருந்தும் ஸுப்பர் பிஜ், கறைகள், கசடு, பிசுக்கு இவற்றை தீவிரச் செயல் புரிந்து நீக்கி விடுகிறது. விரைவில் நுரைவளம் பெருகும் திறனுள் ளாகக்கான பாகங்களையும் சொரசொரப்பான பாகங்களையும் மேன்மையாகவும், எளிதாகவும் சுத்தம் செய்கிறது. பல-வித உபயோக பிஜ் இருக்கையிலே வெவ்வேறு துலக்கும் தேவைகளுக்கு விலை அதிகம் கொடுத்து வெவ்வேறு பவுடர்கள் வாங்குவானேன்? உயர்ந்த சேமிப்பு மற்றும் உயர்ந்த செயல்திறன்— இவை சரியான அளவில் இணைந்த பிஜ் வாங்குவீர்.

### விலையிலே

பிஜ், சிறந்த முறையில் சிக்கனம் மற்றும் தரம் இரண்டையும் பிணைக்கிறது. உண்மையில், பிஜ் அளிக்கும் சிக்கனம் இருதரப்பட்டது. இதோ கண்டுகொள்வீர்—இதர நன்கறிந்த துலக்கும் பவுடர்களைவிட பிஜ் 25% குறைந்தவிலை கொண்டது. அத்துடன், மட்டமான துலக்கும் பவுடர்களைவிடக் குறைந்த அளவே பிஜ் போதும் மாசற்ற பளபளப்பு வீசுவதற்கு.




கோத்ரெஜ் தயாரிப்பு

## விலையோ குறைவு, தரமோ உயர்வு

CASGS-163-183TM

அங்கே போய் செட்டில் ஆனதும் எழுதறேன். நீங்கள்ளாம் அங்க வந்துடுங்கோ மாமா... சேந்து இருக்கலாம்.''

''தாரள மனசுடா உனக்கு... க்ஷேமமாயிரு...'' குரல் தழுதழுக்கச் சொன்னான் ரகுபதியின் அம்மா. தெரு முனையில் வண்டி திரும்புகிற வரைக்கும் ராதாவும் உமாவும் கையை ஆட்டிக் கொண்டிருந்தார்கள்.

ரயிலடியில் துண்டு நனைய நனைய ரகுபதி கதறினான். ரயில் புள்ளியாய் மறைகிற வரை, அவனும், அவன் புள்ளியாய் மறைகிறவரைக்கும் பத்ரியும் கையை வீசி விடைபெற்றது. அப்படியே மனதில் பதிந்து நிறைய ராத்திரிகள் அவனை எழுப்பி உட்கார்த்தியிருக்கிறது.

## 6

சென்னை சம்பளம் தாராளமாய் இருந்தது. மனதுக்கு நிறையச் சந்தோஷமாய் இருந்தது. லகானை இழுத்துப் பிடித்து நடத்தினதில் மாதம் கொஞ்சம் பணம் மிச்சப்படுத்த முடிந்தது.

மாதக் கணக்கில் பாக்கி வைத்திருந்த பணத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய் வெங்கடேசனுக்கு அனுப்பினான். நிறைய கடிதங்கள் போட்டான். ஆனால் பதிலுக்கு எப்பொழுதாவது நினைத்தபோது ஒரு கடிதம் வரும். கடிதம் நிறைய சோகமும் வரும்.

'ரொம்ப நெருக்கமாய்ப் போய் முதலியாரிடமே ஹோட்டலை விற்று விட்டோம். அவர் பெரிய மனது பண்ணி இரண்டு அறை ஒழித்துக் கொடுத்திருக்கிறார். ஜீவனம் ரொம்பச் சிரமமாயிருக்கிறது...'

அந்தத் தபால் கார்டு எழுத்துக்களை அவன் படித்தபோது உதிர்ந்த கண்ணீர் கலைத்து விட்டது.

'பேசாமல் எல்லோரும் மெட்ராஸுக்குக் கிளம்பி வந்துடுங்கள்...' என்று அவன் எழுதின கடிதத்துக்குப் பதில் இல்லை. ஆனால் விடியலின் சாம்பலிலும், அஸ்தமன ஆரஞ்சிலும், நள்ளிரவுக் கறுப்பிலும் சிந்தனை முழுக்க அந்தக் குடும்பம்தான். அவர்களுக்கு எந்த விதத்திலாவது உதவ வேண்டும் என்று மனது அலைந்தது.

கூட வேலை செய்கிற செல்லையாதான் சொன்னான். ''ஏன் பத்ரி... அவரோட பொண்ணுகள்ள ஒருத்தியை நீ கல்யாணம் பண்ணிக்கலாமே... ஒரு பாரம் கொறையுமில்ல அவங்களுக்கு...''

சரேலென்று மனத்தில் அந்த எண்ணம் இறங்கி விட்டது. உடனே ரகுபதிக்குத் தனிப்பட்ட முறையில் ஒரு கடிதம் எழுதினான். நான்கு நாட்களில் வந்த பதில் அக்னியைக் கொண்டு வந்து மடியில் கொட்டியது.

'அன்புள்ள பத்ரி,

உன் கடிதம் கண்டு வியப்படைந்தேன். உன் மனசில் இப்படி ஒரு தப்பான எண்ணம்



### தீபாவளி சுக்குக் கழி

**தேவையான பொருள்கள்**

புழுங்கல் அரிசி 150 கிராம், உளுத்தம் பருப்பு 300 கிராம், வெந்தயம் 2 டீஸ்பூன், சுக்கு 50 கிராம், வெல்லம் (உருண்டை வெல்லம்) 500 கிராம், நல்லெண்ணெய் 500 மில்லி.

**செய்முறை:**

அரிசி, உளுந்து, வெந்தயம் இம்மூன்றையும் ஊற வைக்கவும். வெல்லத்தைத் தட்டி வைத்துக் கொள்ளவும். சுக்கை தட்டிப் பொடி செய்து கொள்ளவும்.

ஊற வைத்த அரிசி, உளுந்து, வெந்தயம் மூன்றையும் ஆட்டுரலில் போட்டு நன்கு மசிய ஆட்ட வேண்டும். மசிந்ததும் பொடி செய்த சுக்கைப் போட்டு ஆட்டி சிறிது நேரம் கழித்துத் தட்டிய வெல்லத்தைப் போட்டு வெல்லக்கட்டி இல்லாமல் ஆட்டவும். மாவு தண்ணீராக இருக்கும்.

ஆட்டிய மாவை ஒரு அகலமான வாணலியில் ஊற்றி கிளறிக் கொண்டே இருக்க வேண்டும். 10 நிமிடம் கழித்து நல்லெண்ணெயை கொஞ்சம் கொஞ்சமாக ஊற்றிக் கிளறிக் கொண்டே இருக்கவேண்டும். அல்வா போல் எண்ணெய் கக்கி வாணலியில் ஒட்டாமல் பரவலாக திரட்டி ஆறினதும் துண்டாகவோ அல்லது ஸ்பூன் கொண்டோ எடுத்துச் சாப்பிடலாம். இதுவே 'தீபாவளி சுக்குக் கழி' என்பதாகும்.

தீபாவளியன்று சாப்பிட்ட பலகாரம் ஜீரணம் ஆவதற்கென்றே இதை திருநெல்வேலிக்காரர்கள் செய்வார்கள். ஒரு மாதமானாலும் கெடாது. இது ஜீரண கோளாறையும், வாயு பிடிப்பையும் போக்கும் சிறந்த லேகியம் போல் ஆகும்.

—செல்வி கா. சாரதா, அரியலூர்.

எப்படி வந்தது? என் தங்கைகள் மூன்று பேருமே உன்னையும் ஒரு சகோதரனாய் நினைத்துப் பழகியிருக்கையில், உனக்கு இந்த மாதிரியான ஆசை எப்படி வர முடியும்? நாங்கள் ஏழைகளாயிருந்தாலும் கௌரவமானவர்கள் என்பதை நீ மறந்து விட்டாயா? அப்பாவுக்கு இது விஷயம் தெரிந்தால் துடித்துப்போவார். நம்முடைய நட்பு நெருக்கமாய் இருந்த காரணத்தால் இந்த விஷயத்தை அப்பாவிடமோ மற்றவர்களிடமோ நான் பிரஸ்தாபிக்காமல் விடுகிறேன். என் மதிப்பிலிருந்து நீ மிகவும் சறுக்கிவிட்டாய். வருத்தப்படுகிறேன் — ரகுபதி.'

எத்தனை நாட்களுக்கு அந்தக் கடிதத்தைப் பார்த்துப் பார்த்து மேஜையில் முஷ்டிமோதி தலையில் படபடவென்று அடித்துக்கொண்டு தவித்துப் போனானென்று செல்லையாவிடம் கேட்டால் அவன் சொல்லுவான்.

---

அழுக்கு, எண்ணெய்ப்பசை ஆகியவை படிந்துள்ள பாட்டிலை சுத்தம் செய்யவேண்டுமா? கொஞ்சம் மணலும் தண்ணீரும் கலந்து பாட்டிலுக்குள் போட்டு அரை மணி நேரம் கழித்துக் கழுவுங்கள். பாட்டில் பளிச்சென்று இருக்கும்.

-லட்சுமி சிவம்

---

' என்ன பத்ரி.. ஒன் ஃப்ரண்டு இப்படி அரைக் கிறுக்கா இருக்கான்... நீ என்னமோ எழுதின.. அதைத் தப்பாய்ப் புரிஞ்சுக்கிட்டு பேத்தியிருக்கானே... பேசாம அந்த லெட்டரைக் கிழிச்சுப் போட்டுட்டு அவங்களையெல்லாம் மறந்துடு...''

முடியாமல் பத்ரி தத்தளித்தான். ரகுபதிக்கு இன்னும் விளக்கமாய் மன்னிப்புக் கேட்டு ஒரு கடிதமும், பதில் வராமல் இன்னொன்றும் அதற்குப் பதில் வராமல் மேலும் ஒன்றுமாய் எழுதி எழுதிச் சளைத்துப் போய் நெஞ்சுக்குள் ளயே நொந்து நொந்து மறுகிப் போவதைத் தவிர வேறு வழியில்லாமல் போயிருந்தது.

கிட்டத்தட்ட ஒன்றரை வருடம் கழித்து ஒரு கல்யாணப் பத்திரிகை வந்தது.

ராதாவின் கல்யாணப் பத்திரிகை.

மாப்பிள்ளை கும்பகோணத்தில் பரிசாரகனாம். மனசு வேதனைப் பட்டது. கல்யாணத்துக்குப் போகாமல் ஐநூறு ரூபாய்க்கு டிராஃப்டை மட்டும் அனுப்பினான். அப்புறம் மறுபடியும் தொடர்பு விட்டுப் போயிருக்கையில் மறுபடியும் இந்தக் கடிதம்.

பத்ரி சுற்று முற்றும் பார்த்தான். இன்னும் யாருக்கும் பொழுது விடியாமல் இருந்தது. வெளியில் விடிகாலைக் கருக்கல் ஒரே அந்தகாரமாய்த் தெரிந்தது. சட்டைப் பையைத் தொட்டு உணர்ந்து அந்தக் கடிதத்தை எடுத்தான். பிரிக்கும்போதே கண்ணில் நீர் சுரந்தது அவனுக்கு.

அன்புள்ள பத்ரி,

நீ எங்களையெல்லாம் மறந்திருக்க மாட்டாய் என்று நினைக்கிறேன். போன வருடம் அப்பா திடீரென்று உடம்புக்கு வந்து செத்துப் போய்விட்டார்....'

சரேலென்று மறுபடியும் நடு நெஞ்சில் ஈட்டியைச் செருகி எடுத்த மாதிரி இருந்தது. அவர் இறந்து போனதை உடனுக்குடன் தெரிவிக்கக் கூடாத அளவுக்கா ரகுபதிக்குக் கோபம் இருக்க வேண்டும்.

....அப்புறம் எங்கள் குடும்பம் இன்னும் சீரழிந்து இப்போது தெருவுக்கே வந்து விட்டது. பட்ட காலிலே படும் என்கிற மாதிரி அம்மாவும் படுத்த படுக்கையாய் எந்த நிமிஷமும் எங்களை விட்டு விட்டுப் போய் விடத் தயாராயிருக்கிறாள். கல்யாணிக்கும் ராதாவுக்கும் கல்யாணம் செய்து கொடுத்த அப்பா உமாவுக்கு ஒரு வழி செய்யாமலே போய் விட்டார். அவளை யார் கையிலாவது பிடித்துக் கொடுத்தால்தான் அம்மா நிம்மதியாகச் சாக முடியும். எனக்கு உன்னைத் தவிர வேறு யாரிடம் போய்க் கேட்பதென்று தெரியவில்லை. நீ பழசையெல்லாம் மறந்துவிட்டு பெரிய மனது வைத்து உமாவைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். அப்பாவுக்காக இதை நீ கண்டிப்பாய் செய்வாயென்று நம்புகிறேன்.

அன்புடன்
ரகுபதி....

இந்த வேதனை ஜ்வாலையை நினைவுகள் விசிறி விசிறி பெரிய நெருப்பாய்க் கிளப்பி தகிக்கு முன் ஒரு தீர்வு காண வேண்டுமென்று பட்டும் பத்ரிக்குப் புரிந்தது. இதற்குத் தீர்வு சென்னையில் இல்லை. ஆனையடிமங்கலத்தில் இருக்கிறது என்பதும் தீர்மானமாய்த் தெரிந்தது.

ரயில் வேகம் குறைந்து கொண்டிருந்தது.

பத்ரிக்கு அதிர்ச்சியாய் இருந்தது. கண்ணில் செந்நீர் தளும்பும் போலிருந்தது. சிதிலமாகிப் போய்க் கலைக்கப்பட்ட சிலந்திக் கூடு மாதிரி அந்த வீடே தொய்ந்து கிடப்பதைக் காண்கையில் பழசெல்லாம் தொண்டையில் அழுகையாய்ப் புரையேறிற்று.

அவன் படியேறித் திண்ணையைத் தாண்டினான்.

# கண்கள்...









## இவற்றினால் உணர்வுகளை வெளிப்படுத்துங்கள்

சிரிப்பு. மகிழ்ச்சி. சினம்.
சிருங்காரம். அத்தனையும்
சிறப்பாக எடுத்தியம்ப
முடியும்... சிங்கார் டீலக்ஸ்
கண்மையுண்ட உங்கள்
கண்களால். கருமைப்
பளபளப்பு மிக்கது.
சிங்கார்—அடடா! எத்தனை
குளுமை... விசேடமான
தயாரிப்பு சிங்கார்
...ஆகவே அத்தனை
அழகு... கண்களுக்கு
எரிச்சல் இல்லாதது.






**சிங்கார்**

டீலக்ஸ் கண்மை

இது ஒன்றே கண்களுக்கு
நலமான கண்மை.

everest/83/SH/179rtm

''பத்ரி... வந்துட்டியா பத்ரி... நீ கண்டிப்பா வருவேன்னு எனக்குத் தெரியும்.''

ரகுபதியா அது? அப்பாவைப் போலவே சுருதி சேராத இரட்டைக் குரல். அவனுடைய உருண்ட தேகம் எப்படி இப்படி உலர்காய்ந்து உருவிழந்து போனது?

''ரகுபதி... பத்ரி வந்திருக்கேன்டா.'' என்கையில் குரல் குழறிற்று. சேர்த்து கொண்டபோது கண்ணீர் பொங்கிற்று.

''வந்துட்டேளா பத்ரி?''

சரேலென நிமிர்ந்தான்.

கல்யாணி! இடுப்பில் சின்னக் குழந்தையுடன். இவள் எதற்காக இங்கே வந்திருக்கிறாள்? கடைசி நேரத்திலே அம்மாவுடன் இருப்பதற்காகவா?

''எப்படி இருக்கே கல்யாணி?''

அவளை அந்தக் கேள்வி கேட்டிருக்கக்கூடாது. உடல் மெலிந்து மார் கருங்கி முகம் படிந்து ஈர்க்குச்சிக்குப் புடவை சுற்றியிருக்கிற அவளைப் பார்த்துக் கேட்டிருக்கக் கூடாத கேள்வி என்று அவனுக்குப் புரியுமுன் அவள் தொண்டையில் திமிருகிற விம்மல்களை அடக்கிக் கொண்டு உள்ளே திரும்பி ஓடினாள்.

''என்ன விஷயம் ரகுபதி? ஏன் அவ பேச மாட்டேங்கறா?''

''வாழாவெட்டியா வந்துட்டவளுக்கு மத்தவா கிட்டப் பேசறதுக்குக் கூச்சமாத்தானே இருக்கும் பத்ரி....''

''ரகுபதி...'' அவன் தோளைப் பிடித்து உலுக்கினான் பத்ரி. ''என்னடா சொல்றே?''

''பணம் பணம்னு ரத்தத்தை யெல்லாம் உறிஞ்சுட்டுத் தான்னு துப்பிட்டா பத்ரி அவா வீட்ல. அடி மேல அடி பட்டதுன்னு எழுதியிருந்தேனே... இதுவும் ஒரு அடி... ஒண்ணரை வருஷமாச்சு அவ வந்து... அந்தத் துக்கத்திலதான் அப்பா போயிட்டார்.''

''எனக்குக் கல்யாணியைப் பத்தி எழுதவேயில்லையே பத்ரி.''

''எழுதிப் போடறதுக்கு நல்ல சமாச்சாரமா பத்ரி... எத்தனை துக்கத்தைத்தான் எழுதறது சொல்லு... பத்ரி... டேய் பத்ரி... என்னை மன்னிச்சிட்டியாடா. நான் அந்த மாதிரி இறுக்குத்தனமா லெட்டர் எழுதினதை மறந்துட்டியாடா?''

பதில் சொன்னால் மேலும் துக்கம் கிளர்ந்து போகும்.

''அம்மா எங்கே?''

''உள்ளதான் இருக்கா.''

ரகுபதியின் அம்மா, வெங்கடேச மாமாவின் அருமை மனைவி உள்ளே 'இருந்தாள்'. படுக்கையில் ஒரு போர்வைக் கிழிசலினூடே எலும்புகளைப் போர்த்தின தோல் தெரிந்தது.

பத்ரிக்கு உடம்பெல்லாம் பதறியது. மனசில் விரிசல் விரிசலாய் எத்தனை வெடிப்புகள் என்று வருந்திற்று.

''அம்மா, பத்ரி வந்திருக்கேம்மா...'' என்று அவளருகே அமர்ந்து உடம்பை சேகரித்து அணைத்துக் கொண்டான்.

''பத்ரி... என் பொண்ணுக்கு ஒரு வழி காமிப்பா...''

குரல் மிகத் தேய்ந்து நிறையக் காற்றுடன் தொய்வாய் வந்தது.

''ராதா எப்படி இருக்கா ரகுபதி?''

''ஏதோ அவ வயித்துக்குச் சம்பாதிச்சுப் போடறான் மாப்பிள்ளை...''

''உமா எங்கே?''

''கோயிலுக்கு...''

''உங்களை இந்தக்கதிக்குக் கொண்டுவந்த சாமிக்கு நன்றி சொல்லப் போயிருக்காளாக்கும்...''

''பத்ரிக்குச் சாப்பிட ஏதாவது கொடுத்தியா?''




கட்டிலிலிருந்து குரல் மறுபடியும் காற்றாய் ரகுபதியை நோக்கி வந்தது.

பத்ரி எழுந்தான்.

''ரகுபதி ஆத்தங்கரை வரைக்கும் போய் விட்டு வரலாம் வாயேன்... நீ நெறைய விஷயம் எனக்குச் சொல்றதுக்குப் பாக்கியிருக்கு...''

ஆற்றுத் தோப்பில் சலனமே இல்லை. அவ்வளவு மௌனம். அமானுஷ்யமான மௌனம்.

''என்ன சொல்றே பத்ரி?'' என்று ரகுபதியின் மௌனத்தை உடைத்துக் கேட்டான். குரலில் திகிலும் வியப்பும் மாறி மாறித் தெரிந்தன.

''புரியும்படியாகத்தானே சொன்னேன்.''

''இது நடக்கிற காரியமா பத்ரி?''

''ஏன் நடக்கக் கூடாது?''

''அவ்வளவு பெரிய சுமையை உன் தலைல ஏத்தறதுக்கு எனக்கு மனசு வராது பத்ரி.''

''கல்யாணியை ஒரு சுமையா நான் நெனேக்கலே... நிஜமாப் பார்த்தா இதுதான் நான் வெங்கடேச மாமாவுக்குச் செய்யற உதவியாயிருக்கும்.''

''அப்ப உமா?''

''உமாவைப் பத்தின கவலேயை நீ விடு... அவ சின்னப் பொண்ணு... அழகு இருக்கு... வயசிருக்கு. அவளே ஒருத்தனுக்குக் கல்யாணம் பண்ணி வைக்கறதுல எந்தப் பிரச்னேயும் இருக்கப் போறதில்லே. அவளுக்கு மனசுக்குப் பிடிச்ச ஒரு மாப்பிள்ளேயைப் பாத்து கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டியது என் பொறுப்பு.... செலவு பண்ண இப்ப என்கிட்டப் பணம் இருக்கு... உமாவுக்கு ஒரு வழி தேடறது கஷ்டமில்லே. கல்யாணியைப் பத்தி நெனேச்சுப் பாரு.... இனிமே காலா காலத்துக்கும் அவ உங்க வீட்ல ஒரு பாரமாவே இருக்கறதுல அவ மனசு எப்படிக் கஷ்டப்படும்னு யோசிச்சுப் பாரு... கூடப் பொறந்த தங்கைகள் நல்ல கதில இருக்கறச்சே தான் மட்டும் சுகமில்லாம இருக்கறதுக்கு அவளுக்கு எவ்வளவு வேதனேயாயிருக்கும்? அவ குழந்தையோட எதிர்காலத்தைப் பத்தி நினேச்சுப் பாத்தியா?''

' ஆனு இது எப்படிச் சரியாகும்? ஏற்கனவே கல்யாணமான ஒரு பொண்ணே நீ?''

'நெஜமாகவே அவளுக்கு அதுதான் ரகுபதி நிம்மதியைத் தரும். இஷ்டப்பட்டா நீயும் அம்மாவும் கூட என் கூட வந்து இருக்கலாம்.''

''கல்யாணி இதுக்கு ஒத்துப்பாளா பத்ரி?''

''அவ கிட்ட எடுத்துச் சொல்லிச் சம்மதிக்க வைக்கறது நம்ம பொறுப்பு...''

**வா**னத்தில் தேய்ந்த நிலவு சோம்பலாய் ஏறிக் கொண்டிருந்தது. நுரை மேகங்கள் அடர்த்தியாய் அங்கங்கே தீவு சேர்ந்திருந்தன. இருட்டினிடையே பொத்தல்களிலெல்லாம் சர்க்கரை மாதிரி வெளிச்சம் சரிந்து கொண்டிருந்தது.

கல்யாணி மண் தரையில் அமர்ந்திருந்தாள். மடியில் குழந்தை குப்புறப் படுத்திருந்தது. இடது தொடையை மட்டும் மெலிதாய் உதறிக் கொண்டு 'ஜோ ஜோ' என்று தூங்கப் பண்ணிக் கொண்டிருந்தாள். முகத்தில் புரிபடாத உணர்ச்சிக் குழப்பங்கள்.

நாலடி இடைவெளி விட்டுக் கயிற்றுக் கட்டிலின் குழிவில் பத்ரி நாராயணன். அவனோடு தொடை ஒட்டி ரகுபதி. அவனுக்குப் பக்கத்தில் உமா. கவனம் பூராவும் கல்யாணியின் முகத்தில்.

''எனக்கு என்னமோ இது சரிப்பட்டு வரும்னு தோணலே...'' என்று கல்யாணி மெலிதாய் முனு முனுத்தாள்.

''ஏன் கல்யாணி?'' – ரகுபதிதான் கேட்டான்.

''ஏற்கெனவே வேறொருத்தர் கட்டினதாலி கழுத்தில இருக்கறச்சே இன்னொருத்தர் கூட நான் எப்படின்னு போய் இருக்க முடியும்?''



''கழுத்திலே தாலி இருக்கிறது மட்டும் தான் தாம்பத்யம்னு நெனைக்கிறயா கல்யாணி?''

பத்ரிநாராயணனின் குரல் குறுக்கில் வந்ததும் கல்யாணி நிமிர்ந்து பார்த்தாள்.

''தாம்பத்யத்தைத் தாலி கட்டினவன் கிட்டத்தான் அனுபவிக்கணும்கிறது நம்ம சாஸ்திரமில்லையா?''

''தாலி கட்டினவன் மூஞ்சைத் திரும்பிண்டு உன்னோடவாழத் தயாராயில்லேன்னு சொல்றதுக்கு அந்த சாஸ்திரம் என்ன சொல்றதாம்?''

''விதண்டா வாதம் பண்ணா நான் என்ன பதில் சொல்றது?''

''விவேகமாத்தான் பேசறேன் கல்யாணி''

''சாஸ்திரத்தை விட்டுட்டாக் கூட சட்டம் அதுக்கு ஒத்துக்காதே... ஒரே பொண்ணுக்கு ரெண்டு பேர், தாலி கட்டினாச் செல்லாதே...''

''ஒத்துக்கறேன். சட்டத்துக்கிட்டேயும் சமூகத்துக்கிட்டேயும் நாம கையேந்திண்டு நிக்கப் போறதில்லை... நாம பாட்டுக்குச் சந்தோஷமா வாழ்ந்துட்டுப் போறோம்

''அதெப்படி நீ இன்னொருத்தர் கூட வாழலாம்னு அவர் கேஸ் போட்டாக்க?''

''கேஸ் போடற அளவுக்கு அவனுக்கு யோக்யதை இருக்கா கல்யாணி? பொண்டாட்டியை வச்சுக் காப்பாத்தத் துப்பில்லாதவன் சொந்தம் கொண்டாடிண்டு மட்டும் வந்துடுவானா? சரி அப்படியேதான் கேஸ் போடட்டும். கோர்ட்லே பார்த்துப்போம்... என்னிக்கோ அவன் போடப் போற கேஸுக்காக இப்ப நாம ஏன் பயந்துக்கணும்? இல்லே, இப்ப நீ ஒரு வார்த்தை சொல்லு. அவனை நீ டைவர்ஸ் பண்றதுக்கு நானே ஏற்பாடு பண்றேன்...''

''கேக்கறதுக்கு நன்னாத்தான் இருக்கு... ஆனா....''

''கல்யாணிக்கா... எனக்கு பத்ரிசொல்றதுதான் சரின்னு படறது...''

''உமா, நீகூடவா அப்படிச் சொல்றே?''

''ஆமாம் கல்யாணிக்கா.. ஒரு பொண்ணுக்குச் சரியான பாதுகாப்பு கொடுக்கறதுக்கு ஒரு ஆம்பிளைத் துணை வேணும்... பத்ரி நாராயணனை விட உனக்கு வேற நல்ல துணை கெடைக்காது...''

''சரின்னு சொல்லு கல்யாணி...'' என்றான் ரகுபதி.

''சரின்னு சொல்லு கல்யாணி...'' என்றாள் உமா.

''சரின்னு சொல்லு கல்யாணி...'' என்றான் பத்ரிநாராயணன்.

''பத்ரி... 'உங்க வீட்டுக்கு நான் கடன்காரனாயிட்டேன்னு சொல்லிண்டே எங்களையெல்லாம் உனக்குக் கடன்பட வெச்சிட்டேடா.. எந்தஜன்மாவிலேதீர்க்கப்போறேன்னு தெரியலேடா பத்ரி...''

கம்பிகளுக்கு வெளியே ரகுபதியின் முகம் சிவந்து நனைந்தது. கல்யாணி பத்ரி நாராயணனுக்கு அடுத்த இருக்கையில் உட்கார்ந்து கலைந்துபோன சந்தோஷம் முகத்தில் கொஞ்சமாய் இழை பின்னியிருக்க, மடியில் அழுகிற குழந்தைக்கு ஜன்னல் வழியே வேடிக்கை காட்டிக் கொண்டிருந்தாள். உமா கம்பியில் ஒரு கை வைத்துப் பிடித்து நின்றிருந்தாள்.

''ட்ரெயின் மெட்ராஸ் எப்பப் போய்ச் சேரும்?''

''உன் கவலை எனக்குப் புரியறது உமா... நாளைக்கு விடியக்காத்தால மெட்ராஸ் போய்ச் சேர்ந்ததும் ஸ்டேஷன்லேருந்து உனக்கு வரன் பார்க்க ஆரம்பிச்சுடுவேன்... ஒரே மாசம் டயம் கொடு... மெட்ராஸ்ல உன் கல்யாணம் ஜாம் ஜாம்னு நடக்கும்.''

கணகணவென்று மணியடித்தது.

''அம்மாவை ஜாக்கிரதையாப் பார்த்துக்கோ ரகுபதி... நான் போனவுடனே காரியத்திலே இறங்கிடறேன்...''

குப்பென்று புகையைக் கக்கிவிட்டு இன்ஜின் வலியோடு ரயிலை இழுத்தது.

கொஞ்சம் கொஞ்சமாக வேகம் பிடித்து ரயில் புள்ளியாகிற வரை இவர்களும், இவர்கள் புள்ளியாகிறவரை அவர்களும் கையை வீசி வீசிப் பிரிந்தார்கள்.

---



**சென்ட்**

சென்ட் வாங்கினால், எல்லோரும் முகர்ந்து பார்த்து வாங்கி விடுகிறோம். இது தவறானது.

கொஞ்சம் எடுத்துத் தடவிப் பார்த்து அதில் உள்ள ஆல்கஹால் சம்பந்தப்பட்ட ரசாயன பொருள்கள் ஆவியான பின்னரே அதன் உண்மையான மணம் தெரியுமாதலால் பின்னரேவாங்க வேண்டும்.

—லட்சுமி நட்ராஜன்

---

# photo news

சென்னைப் பல்கலைக்கழகம் தனது 125—வது ஆண்டு விழாவை ஜனாதிபதி திரு. ஜைல்சிங் தொடங்கி வைக்க மிகச் சிறப்பாகக் கொண்டாடியது. இவ் விழாவை ஒட்டி சைவ, வைணவ, ஜைன மற்றும் பல மதத்துறைகள் திறந்து வைக்கப்பட்டன. படத்தில் சைவ, வைணவத் துறைகளின் தொடக் கவிழாவில் அமைச்சர் திரு. ஆர். எம். வீரப்பன் பேசுகிறார்.



இந்தியன் வெஜிடேரியன் காங்கிரஸ் தனது இரண்டாமாண்டு விழாவை சமீபத்தில் சிறப்பாகக் கொண்டாடி யது. அச்சமயம் சமையல் போட்டி களும், குறைந்த விலையில் சத்துள்ள உணவுகளைத் தயாரிக்கும் போட்டி களும், பல்வேறு கலைநிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

—கே. தியாகராஜன்

'அடையாறு நலவாழ்வுச் சங்கம்' பெண்கள் மற்றும் இளைஞர் அணி துவக்கவிழாவை காந்தி ஜயந்தி நாளான அக்டோபர் 2ந்தேதி கொண்டாடியது. பெண்கள் அணியினை திருமதி சுலோசனு சம்பத்தும், இளைஞர் அணியினை திரு. கே. ராதா கிருஷ்ணனும் தொடங்கி வைத்தனர். சிறப்பு விருந்தினர்களாக நீதிபதி திரு. கோகுலகிருஷ்ணனும், சபாநாயகர். திரு. ராசாராமும் கலந்து கொண்டனர்.





**முன்னுரை** — உருவமும் பெயருமற்ற மஹாசக்தி பற்பல தெய்வத் திருவுருவங்களும், திருநாமங்களும் கொண்டு, அவை ஒவ்வொன்றுக்கும் ஓர் அற்புத சரிதமும் படைத்துத் திருவிளையாடல் புரிந்திருக்கிறது. அவற்றில் இங்கு ஸ்ரீ லலிதா தேவியின் திவ்ய லீலைகளைக் காணப் புகுகிறோம். ராஜ ராஜேச்வரி என்றும், திரிபுரஸுந்தரிஎன்றும், காமேச்வரி — காமா — காமகோடிஎன்றும் போற்றுவது இவளைத்தான். இன்று வெகுவாகப் பரவிவரும் ஸ்ரீவித்யா மந்திர ஜபமும், ஸ்ரீசக்ர பூஜையும், லலிதா ஸஹஸ்ரநாம பாராயணமும் இவளைக் குறித்தனவே. பராசக்தியின் பல வடிவங்களில் எப்படிக் காளியன்னை கோர பயங்கரத்தின் எல்லையாயிருப்பவளோ அப்படியே அன்புக்கும் அழகுக்கும் எல்லையாயிருப்பவள் லலிதாம்பிகை.

அஞ்ஞானத்தில் ஆழ்ந்துழலும் மாந்தரைஎளிதே உய்நெறி செலுத்த உபாயம் என்ன என்று காணும் அருட்தவிப்புடன் அகஸ்திய மாமுனிவர் காஞ்சிபுரம் சென்றடைந்தார். அங்கே திருமால் குதிரைமுகம் கொண்ட பரமஞான மூர்த்தியான ஹயக்ரீவ வடிவம் கொண்டுஅகஸ்தியருக்குக்குருவாகி,கலபமாய் ஸத்கதி பெற வழி லலிதாதேவியின்வழிபாடே எனக் கூறினார். ''சாஸ்திரம் தெரியாமல் விதி தவறிப் பூஜித்தாலும் உள்ளமுவந்து இம்மையும் மறுமையும்அருளும் அம்மை இவளே'' எனக்கூறி அவளது லீலா சரிதத்தை விரித்துரைத்தார். விதி ஏதுமறியா தூயபேரன்பில் பெறப்படும் அவளை, அவளது சரிதையை இதயம் திறந்து பருகுவதாலேயே அடையலாமென வழி காட்டினார். விதி முறை வழுவாத மந்திர ஜபம், யந்திரபூஜை ஆகியவற்றால் அவளை எய்தவும் பாதை பாவினார்.

# ஸ்ரீ மாதா

## ரா. கணபதி

இங்கே நாம் லலிதையின் சரிதையை மட்டுமே அன்போடு கேட்கவிருக்கிறோம்; தந்திர சாஸ்திர நுணுக்கங்களில் பிரவேசிக்கவில்லை. வரலாற்றைபக்தியுடன் கேட்பதே வழிபாடாகும். மாண்டபுராணத்தின் ஒரு பகுதியாகஹயக்ரீவர் அகஸ்தியருக்கு உபதேசிக்கும் ஸ்ரீ லலிதோபாக்யானத்தை அடிப்படையாகக் கொண்டது இத்தொடர். அன்புரஸத்தின் முறுகிய மூர்த்தியாக, ஸஹஸ்ரநாமத்தில் முதற்பெயரே 'ஸ்ரீமாதா' எனக் கொண்ட அன்னை, அவளுடைய கதை கேட்பதற்காகக் கூடியுள்ள குழந்தைகளான நம்மை அணைத்துக்காப்பாளாக!

### 1

கதையின் நாயகி காமாக்ஷி.

கதை பிறப்பதோ காமன் வெந்து நீறான சாம்பரில்.

ஆசை எரிந்த பின்பே ஆறாத அன்பு உதிக்கும் என்பது அர்த்தம்.

ஆசை இயல்பாக அழிய விடாமல், அதை பலாத்காரமாக அழிக்கப் பார்த்தால் அதுவே சினமாக உருவெடுக்கும் என்று காட்டுவதற்காகக் காம தகனத்துக்கும் காமா உத்பவத்துக்கும் இடையே ஓர்

அஸுரன் பிறப்பதை முதலில் பார்ப்போம்.

மலர்க்கணை வீசிய மதனனை மலர்நுதற் கண்வீச்சால் எரித்தபின் சாந்தி பூத்து அமர்ந்திருந்தான் மஹாதேவன்.

அவனது பூதப்படைகளில் தலைவர்களில் ஒருவனான சித்ரஸேனன் என்ற கணேச்வரன், சற்றுமுன் வரையில் அழகுப் பெட்டகமா யிருந்து இப்போது பஸ்மமாகி விட்ட சாம்பல் குவியலை ஒரு புருஷ வடிவமாக அமைத்தான். பின்னர் பரமேச்வரனை நோக்கி விண்ணப்பித்தான்:

''பிரபோ! உன் சோதனை புரியவில்லை. தேவர்களுக்கு ஆட்சியதிகாரத்தால் செருக்கும் தருக்கும் உண்டாகும்போது தண்டித்துத் திருத்தவே நீ செய்யும் சோதனைகளில் ஒன்றாகத்தான் இதுவும் இருக்க வேண்டும். உக்ர தவம் புரிந்த தாரகாஸுரனுக்குப் பிரபலமாகி ஒப்பற்ற வலிமை தந்தாய். உன்னை நிகர்த்த ஒருவனன்றி வேறெவராலும் தனக்கு மரணம் சம்பவிக்கக் கூடாது என்று அவன் வரம் கோர, ஆகாவென்று அருளினாய். உனக்கு நிகர் நீ ஒருவனேதான், வரமருளிய நீயே வதம்



செய்யமாட்டாய் என்பதால் அவன் உடனே நிர்பயமாக தேவர்களைத் தாக்கி எல்லையில்லாத் துயர் தரலானான். உன்னிலிருந்தே உதிக்கும் ஒருவன்தான் உனக்குச் சமமான சக்தி பெற்றவனாகித் தாரகனை ஒடுக்க முடியுமென தேவர்கள் தெரிந்து கொண்டனர். தபஸ்வியான உன்னை எப்படித் தந்தையாக்கி இப்படிப்பட்ட புத்திரனைப் பிறப்பிக்கச் செய்வதென அமரர்கள் குழம்பிக் கொண்டிருந்தபோதே, பராசக்தியானவள் ஹிமவான் மகளாகப் பார்வதி என அவதரித்தாள். உன்னையே நாதனாகக் கைப்பிடிப்பதென்ற ஆருப்பிரேமையுடன் அவள் இத்தவச்சாலைக்கு வந்து உனக்குப் பணிபுரியலானாள். தங்களுக்கு நல்ல காலம் பிறந்து விட்டது என்று தேவர்கள் புதுத்தெம்பு பெற்றனர். பார்வதியிடம் உனக்குக் காதல் அரும்பினால், அது தங்களுக்குத் தேவைப்படும் சிவகுமாரனைக் கனியும் என்று ஆவலுடன் எண்ணினர். அவளிடம் உனக்குப் பிரேமை பிறக்கச் செய்யவே காமனை இங்கு அனுப்பி வைத்தனர். ஆனால் நடந்திருப்பதென்ன? தேவ காரியத்



துக்காக வந்த மாரனை நீறுபடச் செய்து விட்டாய். தபஸ்வியான உன் உள்ளத்தை உருக்கித் தன் பால் திருப்பத் தானும் கடும் தவம் புரிவதொன்றே உபாயமெனக் கருதி மலைமகள் இங்கிருந்து அகன்று ஏகாந்த யோகத்தில் அமர்ந்து விட்டாள்.

''ஐயனே! தேவர் துயரும், அன்னையின் தாபமும் எப்போது தீர்க்கப் போகிறாய்? அதெல்லாம் சற்றுத் தாமதித்தாலும், பிறர் காரியமாகவே வந்து உயிரிழந்த மன்மதனையேனும் இப்போதே உயிர்ப்பித்து அருள்வாய். நெற்றியின் நெருப்புக் கண்ணால் நீ பொசுக்கிய மன்மதச் சாம்பரை இதோ ஓர் உருவமாகப் பிசைந்து போட்டிருக்கிறேன். இதை உயிரளிக்கும் சந்திர சூரிய மயமான உன் மற்ற இரு கண்களால் குளிர நோக்கி ஜீவகலை ஊட்டுவாய்.''

நல்லெண்ணத்தின் மீதுதான் கணேசுவரன் இப்படிப் பிரார்த்தித்துக் கொண்டான். ஆயினும் நலமே உருவான சிவபெருமானுக்கு இவன் சொல்லித்தானா தெரிய வேண்டும்? இடைக்காலத்தில் தேவர்கள் இறுமாப்புப் பிடித்தலைந்ததற்குப் பிரதியாக இன்னமும் சில காலம் அவர்கள் அஸுரரிடம் அவதியுறவேண்டுமென்பதே பெருமானின் சித்தமாயிருந்தது. தேவ காரியத்துக்காகவே தியாகியாக மன்மதன் வந்து பாணம் தொடுத்ததாகச் சித்ரஸேனன் கூறிய போதிலும் உண்மையில் அவன் 'தன்னால் முடியாததில்லை' என்ற அஹம்பாவத்துடனேயே வந்தது ஐயனுக்குத் தெரியும். எனவே அவனுக்கு இப்போது புனர்ஜீவன் தர அவன் உளம் கொளவில்லை.

சித்ரஸேனன் விரும்பியதற்கு மாறாக விசித்ரமாக ஒன்று செய்தான் சிவபெருமான். அவன் வேண்டினாற்போலவே சாம்பற் பதுமை மீது கண் பாலித்தான். அதன் விளைவாகப் பதுமை உயிர் பெறவும் செய்தது. ஆயினும் உயிர் பெற்றெழுந்த உருவம் ஒளி நிறைந்திருந்ததெனினும் ஜகன் மோஹனமான காமவேளின் சுந்தரவடிவமேயின்றி குரூப குரூரமான ஒரு கோமாளி வடிவாயிருந்தது. அரக்கரினத்தைச் சேர்ந்த ஒரு விதூஷகன் என்று சொல்லும்படியான ரூபம்.

அதைப் பார்த்ததும் பிரம்மனுக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. படைப்புக் கடவுளான அவனுக்கு வேலையின்றி அவனது தந்தை, காப்புக் கடவுளான திருமால் நேரே தனது மனத்தினின்றே மதனவேளைப் படைத்திருந்தான். அதுபோன்ற ஒரு மனோஹர ரூபத்தைத் தன் சிருஷ்டியாற்றலால் படைக்க முடியவில்லையே என்று குறைபட்டுக் கொண்டிருந்தவன் அயன். எனவே இப்போது மதனனின் சாம்பரிலிருந்து அழிப்புக் கடவுள் படைத்த விசித்ர ரூபத்தைப் பார்த்ததும், அயனுக்குத் தன்னால் இத்தனை விகார வடிவமும்தான் சிருஷ்டிக்க முடியாது என்று தோன்றவே, ''பண்ட பண்ட'' என்று சொல்லிப் பெரிதாக நகைத்தான்.

பண்டன் என்றால் கோமாளி. அதுவே சாம்பரில் எழுந்த அஸுரனின் பெயராயிற்று. சிவபெருமான் படைக்க, சதுர்முகன் நாமகரணம் செய்த அஸுரன்!

காமமானது குரோதமாகத் திரிவதே மதனன் பண்டனானதன் உட்பொருளெனில், குரோதம் என்பது உண்மையில் ஒரு ஜீவனை பரிகாசத்துக்குரிய வேடிக்கைப் பண்டமே ஆக்குகிறது என்று காட்டத்தான் அவன் விதூஷகன் போலே இருந்தது. அவன் ஒளிமயமாகத் தெரிந்ததும் கோபக்கனல் கொழுந்து விட்டதால்தான். உள்ளூர அக்கனல் ஜீவனைக் கரிக்கட்டை ஆக்குவது தானே?

உன்னையும் பொன்னுக்கும் இன்னொரு கனல் உண்டு. கருணை என்னும் அதுவை அருணையாக ஜ்வலித்துக் கொண்டு லலிதையாய் அவதரிக்கப் போகிறது. இவன் கோமாளியாய் வந்தானெனில் அவளோ

கோமளை ஸுகுமாரியாக வரப்போகிறாள். அதனால்தான் லலிதை என்றே பெயர் பெறப் போகிறாள்.

சித்ரஸேனன் பூதப்படைத் தலைவனாதலால் அவனுக்கு பண்டனின் ரூபம் அப்படியொன்றும் விகாரமாகத் தெரியவில்லை. தன்னுடைய பிரபுவின் வீக்ஷணத்தில் பிறந்தவன் என்பதால் பண்டனிடம் சித்ரஸேனனுக்கு ஒரு பாசப் பிணைப்பே ஏற்பட்டிருந்தது. அவனை இறுகத் தழுவிக் கொண்டான்.

''நீயும் ஒரு கணேச்வரனாவதற்கு வழி சொல்லித் தருகிறேன். ஸ்ரீருத்ரம் எனும் மஹாமந்திரத் துதியை உனக்குச் சொல்லிக் கொடுக்கிறேன். கற்றுக் கொண்டு அதை ஜபித்து வா. ஐயன் பிரீதியுற்று உனக்கும் பூதப் படைத் தலைமை தருவான்'' என்று கூறி, பண்டாஸுரனுக்கு வேதத்திலேயே இடம் கொண்ட சதருத்ரீயத்தைச் சித்ரஸேனன் போதித்தான்.

அஸுர ஜன்மாவுக்குப் பிறவியிலேயே பேராசை. பூதர் தலைவனாயினும் நாதனுக்கு அடிமையாக இருக்க வேண்டிய கணேச்வரப் பதவி அவனுக்குப் பிடித்தமானதாயில்லை. தனக்கு மேல் நாதரெவருமின்றி தேவரையும் வென்று பேரதிகாரம் பெறவே பண்டன் விரும்பினான். இவ்வாறு வரம் பெறுவதற்காகவே ஸ்ரீருத்ரத்தைக் கற்றுக் கொண்டு இடையறாமல் ஜபித்தான். ஒருமைப்பட்ட மனத்துடன் ருத்ர ஜபம் செய்த பண்டனிடம் மகிழ்ந்து வரம் வழங்க முன்வந்தான்.

கோமாளி போலிருந்த அஸுரன் வெகு புத்திசாலித்தனமாக ஒரு வரம் கேட்டான். ''என்னை எதிர்க்கும் சத்ருவின் சக்தியில் பாதி என்னிடம் வந்து சேர வேண்டும்'' என்று கோரினான்.

வரம் வழங்குவதற்கு முன்வந்து விட்டு 'இப்போது பின்வாங்குவதற்கில்லை என்பதால் ஈசன் பண்டன் வேண்டியவாறே அருளிவிட்டான். பண்டனுக்கும் மேல் புத்திசாலித்தனம் செய்து முறியடிப்பதற்கான திவ்ய ஸங்கற்பம் செய்ய ஐயனால் ஆகாதா என்ன?

காமத்தின் மறுவடிவமே க்ரோதம் என்பதை உயிருதாரணத்தால் நிரூபிப்பவனாக சீற்றமூர்த்தியாகப் புறப்பட்டான் பண்டன்.

அரக்கர்களில் ஏராளமானவர் தங்களுக்கு ஈசனின் 'கொடை'யாகக் கிடைத்த மஹா பலிஷ்டனிடம் வந்து சேர்ந்து அவனுக்கே பணியாளாயினர். தாரகனுக்கு ஆசானான சுக்ராச்சாரியார் இவனுக்கும் குரு ஸ்தானம் வகிக்க வந்தார். தைத்யர்களின் சிற்ப விற்பன்னனான மயன் ஓடோடி வந்து பண்டனுக்கென ஓர் அரிய நகரத்தை நிர்மாணித்துக் கொடுத்தான். அதற்குத் தன்னுடைய ரத்தவெறியைக்காட்டுவதற்குக் சோணிதபுரம் எனவும் பாழ்பண்ணும் தன் லட்சியத்தைக்குறிப்பிடுவதாக 'சூன்யகநகரம்' என்றும் பண்டன் பெயர்களிட்டான்.

அம்மாநகரில் அஸுரமஹாராஜனாக அவனுக்கு சுக்ரர் பட்டாபிஷேகம் செய்தார். ஆதியில் ஹிரண்யனுக்குப் பிரம்மதேவன் அளித்திருந்த அதே கிரீடம் இன்று சுக்ரரால் பண்டனுக்குச் சூட்டப்பட்டது.

பெருமையோடு பண்டாஸுரன் தன் புஜங்களைத் தட்டிக் கொள்ள, இரு தோள்களிலிருந்தும் இரு மாவீரர்கள் உதித்துக் குதித்தனர். பண்டனுக்குத் தம்பியராகக் கருதப்பட்ட இவ்விருவரில் வலது தோளிலிருந்து தோன்றியவன் விசுக்ரன் —அதாவது சுக்ரரையும் விஞ்சிய போர்க்கலைச் சாதுர்ய முள்ளவன்; இடத்தோளில் தோன்றியவன் விஷங்கன் — ஸங்கமாக இன்றித் தனியனாகச் சென்றே சேனைகளை வெல்ல வல்லவன்.

அசுர மந்திரிகள், படைத் தலைவர்கள் பண்ட மகாராஜாவின் தர்பாருக்கு மேலும் அழகு (கோரம்) கூட்டினர். ஸம்மோஹினி, குமுதினி, சித்ராங்கி, சுந்தரி என்ற நான்கு மங்கையரை மணந்து அவர்களிடம் சூராதி சூரர்களான முப்பது புதல்வர்களையும் பெற்றான் பண்டன்.





தன் பலிஷ்ட அனைத்துக்கும் வித்து ஸ்ரீருத்ரம் தான் என்பதை பண்டன் மறக்கவில்லை. எனவே அது தக்கி நின்று தழைத்தோங்குவதற்காகத் தன் நாடெங்கும் வேதத் துதிகளும் வேள்விகளும் நீங்காது நிலவச் செய்தான். 'சைத்தான் சாத்திரம் மேற்கோள் காட்டுவது போல' என்று மேநாட்டார் வசனம் சொல்வார்கள்: இங்கு சோணிதபுரத்திலோ மெய்யாலுமே அஸுரர்கள் அமர்க்களமாக வேத அத்யயனம் செய்து கொண்டு பெரு வாழ்வு வாழ்ந்து வந்தார்கள்!

இவர்கள் உயர உயர அமரர்கள் தாழ்ந்து தாழ்ந்து ஈன நிலைக்கு இறங்கிக் கொண்டிருந்தார்கள்.

தவறுகள் செய்தாலும் தேவர்தாமே உலகை வாழ்விக்கும் நல்ல சக்திகள்? தவமே செய்தாலும் தைத்யர்கள் தீயசக்திகளே அல்லவா? தீய சக்திகளே தூயவேதத்தின் துணை கொண்டு ஆதிக்கம் பெற்றுள்ள மாயம் எப்படி நீங்கும்?

நீங்கும் — மாயாவியான திருமால் இதற்கு வழிகாண்பான். அதை நாமும் காண்போம், இனி.

(தொடரும்)

# உணவு விஷமாக மாறுவது எப்படி?



"உணவில் விஷம்! குடும்பமே ஆஸ்பத்திரியில் அனுமதி", "விருந்து சாப்பிட்ட ஐம்பது பேர் வாந்தி மயக்கம்", என்பன போன்ற செய்திகள் அடிக்கடி செய்தித்தாள்களில் வந்து கொண்டிருக்கின்றன. இத்தகையச் செய்திகளின் பின்னணியைப் பற்றிக் காண்போமா?

நம் உடலில் தோன்றும் பலவிதமான வியாதிகள் நாம் உண்ணும் உணவுகள் மூலமும் பரவுகின்றன, ஏற்படுகின்றன என்பது ஒருபுறம் இருக்கட்டும். ஆனால் உண்டதுமே தன் வேலையைக் காட்டும் உணவு வகைகளின் விஷங்களே பெரும்பாலும் நமக்கு உடனடியாகத் தெரிகின்றன. ஒரு உணவை உண்ட ஒரு சில மணி நேரத்திற்குள் வாந்தி, மயக்கம்; வயிற்றுவலி, வயிற்றுப்போக்கு ஆகியவை ஏற்பட்டால், நாம் சாப்பிட்ட அந்த உணவில் விஷம் கலந்துள்ளது என்று அர்த்தம்.

உணவு விஷமாக மாறுவதற்கு நான்கு விதமான காரணங்கள் கூறப்படுகின்றன. செடிகளிலும், கொடிகளிலும் வளரும் காய்கறிகள், பழங்கள் மீது தெளிக்கப்பட்ட பூச்சிக்கொல்லி மருந்துகள் உலர்ந்து போய் அவைகளின் மீது ஒட்டிக் கொண்டு இருக்கும். எனவே அவைகளை நன்கு கழுவாமல் அல்லது தோல் சீவாமல் சமைக்கும் போது, அவை விஷமாக மாறிவிடுகின்றன. உணவு விஷமாக மாறுவதற்கு இது முதல் காரணம்.

இரண்டாவதாகக் காய்கறிகள் மற்றும் சிலவகை மீன்களில் உள்ள ஒருவித விஷச்சத்து, நம் உணவையும் விஷமாக்கி விடுகிறது. எடுத்துக்காட்டாக சிலவகைக் காளான்கள் நம் உடலுக்கு ஏற்றவையல்ல. இயற்கையாகவே விஷச்சத்து நிரம்பிய இவைகளை உணவாகச் சமைத்து உண்ணும்போது விஷம் தன் வேலையைக் காட்டுகிறது. மீன், ஆடு, கோழி போன்ற மாமிச உணவு வகைகளை உண்பவர்கள் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியது அவசியம். கடலில் விழுந்து இறந்தவர்களின் உடல் மற்றும் பல கழிவுப் பொருட்கள், சில வகைப் பாசிகள் ஆகியவற்றைக் கடல் மீன்கள் உண்டு இருக்கக் கூடும். எனவே மீன்களைச் சுத்தம் செய்யும் போது, அதன் குடல் பகுதியை அறுத்து எறிந்துவிட வேண்டும். அத்தோடு மீன்களை ஒன்றுக்குப் பல முறை நன்றாகக் கழுவ வேண்டும். இதுபோல் எலிக்கு வைக்கப்படும் விஷம் கலந்த தானியங்களைச் சாப்

பிடும் கோழிகள், பல இடங்களில் மேயும் ஆடுகள் ஆகியவற்றைச் சமைத்து உண்பதாலும் உணவு விஷமாக மாறி விடுகிறது.

மூன்றாவதாக ஈயம் உதிர்ந்த, ஈயம் பூசப்படாத பாத்திரங்களில் சமையல் செய்வதும், அவைகளை அத்தகைய பாத்திரங்களில் சேமிப்பதும், உணவு விஷமாக மாற வழிவகுக்கின்றன. நான்காவதாக, உணவைக் குறிப்பிட்ட கால அளவு கழிந்த பிறகு உண்பது விஷமாக மாறி விடுகிறது. குறிப்பாகக் காலையில் சமைத்த உணவை இரவில் சாப்பிடுவது தவறு. ஆனால் காலையில் சமைத்த உணவை மாலையில் சற்று சூடுபடுத்துவது உணவைக் கெடாமல் பாதுகாக்கும். இருப்பினும் எல்லா வகை உணவுகளும் ஒரே தன்மையானது அல்ல. சூடுபடுத்தினால் கூட கெட்டுப் போகும் உணவு வகைகளும் உள்ளன.

நாம் சாப்பிட்ட உணவு ஓரளவு விஷமாக மாறி உள்ளது என்பதை எப்படிக் கண்டுபிடிப்பது? உணவில் விஷத்தன்மை அதிகமாக இருந்தால், உடனே வாந்தியும் குமட்டலும் வரும். அதிகமில்லாத சமயங்களில் வயிற்றுவலி வயிற்றுப் போக்கு ஆகியவை காணப்படும். சில வேளைகளில் காய்ச்சலும் தலைவலியும் ஏற்படும். சந்தேகத்திற்குரிய உணவை உண்ட பிறகு 12 மணி நேரம் முதல் 36 மணி நேரம் வரை, இத்தகைய அறிகுறிகள் ஏற்படலாம்.

உணவு விஷமாக மாறுவதை எளிதில் தவிர்க்க சில வழிகள் உள்ளன. உணவை நல்ல முறையில் சமைத்து சுடச்சுட உண்பது சாலச் சிறந்தது. காய்கறிகள் மற்றும் பழங்களைச் சிறிது நேரம் தண்ணீரில் ஊற வைத்து அவைகளை நன்றாகக் கழுவ வேண்டும். சமையல் பாத்திரங்களைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். குறிப்பாக, எப்போதாவது பயன்படுத்தும் வெள்ளி டம்ளர் வெள்ளித் தட்டு ஆகியவைகளை நன்கு கழுவிய பிறகே பயன்படுத்த வேண்டும். பிளாஸ்டிக், பீங்கான் தட்டுக்களைக் கழுவவேண்டியதில்லை எனச் சிலர் கருதுகிறார்கள். இது மிகப் பெரிய தவறு. கழுவாமல் எந்தப் பாத்திரத்தையும் பயன்படுத்தக் கூடாது. வயிற்று வலி, வயிற்றுப் போக்கு உள்ளவர்கள் சமையலறைப் பக்கம் செல்லாமல் இருப்பது அவர்களுக்கு மட்டுமல்ல. மற்றவர்களுக்கும் நல்லது. டின்கள் மற்றும் பாட்டில்களில் அடைக்கப்பட்டு விற்கப்படும் உணவுப் பொருட்களை அளவோடு பயன்படுத்த வேண்டும்.

-பிரமி

நன்றி: 'ஹோம் சயன்ஸ்'



# திருமண மலர்

தென்னாற்காடு மாவட்டம் அரசாங்க நிறுவனத்தில் வேலை செய்யும், சைவ வேளாளப் பட்டதாரிப் பெண்ணுக்கு, வயது 21, சம்பளம் 900]- பொருத்தமான மணமகன் தேவை. ஜாதகம் முதலியவற்றுடன் தொடர்பு கொள்க.
பெட்டி எண்: 1013.

ஸ்ரீவத்ஸ கோத்ரம், மங்களூர் பிராமண வகுப்பைச் சார்ந்த தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் மாதம் ரூ. 2000]- வருமான முள்ள பி. காம்., ஏ. சி. ஏ. வயது 32 பையனுக்கு, தமிழ் அறிந்த, படித்த முன்னிலை வகுப்பினரிடமிருந்து வரன்கள் வரவேற்கப் படுகின்றன. பெற்றோர் கலப்புத் திருமணம். இருவரும் காலமாகி விட்டனர், போட்டோவுடன் விண்ணப்பித்தல் நலம். பெட்டி எண்: 1014.

அங்கிரச- கோத்ரம், பூரம், 5' 6'' உயரம், 31 வயது, மாத்வா பிராமணர், துளு பேசும், பம்பாயில் ஸ்டெனோவாக மாதம் ரூ. 1400]- சம்பாதிக்கும் சொந்த பிளாட் வசதியுள்ள பையனுக்கு, அழகிய புத்திசாலியான, குணமுள்ள பெண் 25 (அ)26 வயதிற்குள் தேவை. பெட்டி எண்: 1015.

தஞ்சாவூர், வடமாள், கௌண்டின்ய கோத்ரம், பூரட்டாதி 33 வயது, தனியார் துறை, சென்னை மாதம் ரூ. 1000]- வருவாயுள்ள, பையனுக்கு நல்ல குணமுள்ள வேலையில் உள்ள பெண் தேவை. பையனின் சகோதரி திருவாதிரை, 28 வயது, பட்டதாரி, பெண்ணிற்கும் வரன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும்.
பெட்டி எண்: 1016.

சைவ வெள்ளாள முதலியார் வகுப்பைச் சேர்ந்த 29, 25 வயதுள்ள மத்திய அரசாங்கத்தில், பம்பாயில் வேலை பார்க்கும் பெண்களுக்கு முதலியார் வகுப்பைச் சேர்ந்த நல்ல குடும்பத்தைச் சேர்ந்த 35, 32 வயதிற்குள் பட்டதாரி மணமகன்கள் தேவை. பெட்டி எண்: 1017.

சென்னையில் அரசுப்பணி, ரூ. 800]- நல்ல அழகு, 5½' உயரம், சமையல் கலையில் தேர்ச்சி, குணமும் அழகும்உள்ள (உடன் பிறந்தோர் உயர் பதவியில் உளர்) சேமிப்பு மூலம் பெருநிதியும் வளர்த்து வரும் இந்து பிற்பட்ட சைவ உணவு விரும்பும் 34 வயது திருமணமாகாத பெண்ணுக்கு 40 வயதிற்குள் திருமணமாகாத வரன் தேவை.
பெட்டி எண்: 1018.

20.1.1951—ல் பிறந்த திருமணமாகாத தொண்டை மண்டல முதலியார் ஒரே பெண்ணிற்கு, ரூ. 1 லட்சம் ரூபாய் அளவிற்கு செய்வார்கள். 33 வயதுக்கு மேல் 45 வயதுக்குள் திருமணம் ஆகாத தொண்டை மண்டல முதலியார் வரன் அரசாங்க உத்தியோகத்தில் உள்ளவர்கள் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கலாம்.
பெட்டி எண்: 1019.

ஐயர், சோழ தேசத்து வடமாள், காஸ்யப கோத்ரம், உத்திராடம் வயது 25 உயரம், 5'2''. சம்பளம் 680]-. தபால் — தந்தி இலாகாவில் டெலிகிராப்பிஸ்ட்டாக பணிபுரியும் பெண்ணிற்கு உத்தியோகத்தில் உள்ள வரன் தேவை. ஐயர் உட்பிரிவுகள் சம்மதம்.
பெட்டி எண்: 1020.

பிரஹசரணம், பாரத்வாஜ கோத்ரம், பட்டதாரி, கிருத்திகை நட்சத்திரம், 34வயது வயது, டெலிபோன் ஆபரேட்டராக மாதம் ரூ. 850 சம்பாதிக்கும் பெண்ணிற்கு நல்ல வேலையிலுள்ள 42 வயதிற்குள் தமிழ் பிராமண மணமகன் தேவை.
பெட்டி எண்: 1021.

ஹரித கோத்ரம், வடமாள், உத்திரட்டாதி, ஒரே மகன், எம். காம்., ஏ.சி.ஏ., ஏ. சி. எஸ்., (ஏ. சி. எம். ஏ.), படித்து அக்கவுண்ட்ஸ் ஆபீசராக உள்ள 28 வயது மணமகனுக்கு நல்ல வேலையிலுள்ள (எம்.பி, பி. எஸ்., பி. ஏ., எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர் சயின்ஸ் போன்றவற்றைப் படித்து வேலையிலுள்ள அழகிய உயரமான மணமகள் தேவை. பெட்டி எண்: 1022.

''வடமாள், ஆத்ரேய கோத்ரம், அஸ்தம் பி. காம் தேசிய வங்கியில் வேலை. மூன்று வயதில் சிறு தீ விபத்தினால் வந்த தழும்புகள் இடது கையிலும், முகத்திலும் உள்ளன. இடதுகையில் சிறிய ஊனமிருந்தாலும் வேலைகள் செய்ய சிரமமில்லாத 24 வயதுள்ள பெண்ணுக்குத் தகுந்த பிராமண வரன் தேவை. வரன் சிறிது ஊனமிருந்தாலும் பரவாயில்லை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்:1023

''இந்து ஆதி திராவிடர் வகுப்பைச் சேர்ந்த, டெல்லியில் வசிக்கும், 28 வயதுள்ள பாங்க் ஆபீஸராக பணிபுரியும் பையனுக்கு 20 முதல் 25 வயதுக்குள் மணமகள் தேவை. புகைப்படத்துடன், ஜாதகம் இருந்தால், சேர்த்து அனுப்பவும். பெண் பட்டதாரியாக இருக்க வேண்டும்.''
பெட்டி எண்: 1024.

''தனியார் நிறுவனத்தில் அதிகாரியாக பணிபுரியும் ரூ. 1000—க்கு மேல் சம்பளம்

பெறும், 30 வயதான பட்டதாரி வரனுக்கு ஸ்மார்த்தா அல்லது மாத்வா வகுப்பைச் சார்ந்த மராத்தி பேசும் நல்ல வேலையிலுள்ள மணமகள் தேவை.'' பெட்டி எண்: 1025.

திருநெல்வேலி சைவ வேளாளர் வகுப்பைச் சேர்ந்த, 27 வயதுள்ள, நல்ல, அழகான சிவப்பு நிறமுள்ள 5' 5'' உயரமுள்ள, சிங்கை வாசியான பட்டதாரி இளைஞருக்கு அதே வகுப்பைச் சேர்ந்த சிவப்பு நிறமுள்ள அழகிய மணமகள் தேவை. பி. யூ. சி. (அ) எஸ். எஸ். எல். சி. படிப்பு போதும். கன்யாகுமரி, நெல்லை, மதுரை மாவட்டங்களில் வசிக்கும் குடும்பங்கள் என்றால் உத்தமம். மேற்படி இளைஞருக்கு ரூ. ஒன்றரை லட்சம் பெறுமான முன்னசொத்தும், 10,000 ரூபாய் மூலதனத்தில் ஒரு வியாபாரமும் உள்ளது. மணமகள் ஒரே பெண்ணாக அல்லது ஒரு சகோதரனுடன் கூடியவளாக இருப்பது உத்தமம். பெட்டி எண்: 1026.

பம்பாயில் தனியார் நிறுவனத்தில் மாதம் ரூ. 1000 வாங்கும் ஐயங்கார் வடகலை 27 வயது கௌசிக கோத்திரம், மிருகசீரிஷம், பி. காம்., மாநிறம் லக்கினத்தில் இரண்டில் செவ்வாய் உள்ள பையனுக்கு 24 வயதுக்கு மேற்படாத பட்டதாரி (அ) நன்கு படித்த வேலையில் உள்ள ஐயங்கார் வடகலை பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: எண்: 1027.

மத்திய அரசு நிறுவனத்தில் வேலை. 1300 ரூபாய் மாத சம்பளம். 25 வயது டி. எம். ஏ. படிப்பு. பிள்ளைமார் வகுப்பைச் சேர்ந்த மணமகனுக்கு அரசாங்கத்தில் பணி புரியும் பட்டதாரி பெண் தேவை. ஜாதகம் தேவை இல்லை. பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த எவரும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1028.

பிரஹ்மசரணம். ரோஹிணி நட்சத்திரம், 160 செ. மீ. உயரம், மேட்டூர் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸில் கெமிஸ்டாக பணிபுரியும் மாதம் ரூ. 1150 மற்ற வருமானம் ரூ.1300 பெறும் ஒரே பிள்ளைக்கு பாங்கில் பணி புரியும் அழகிய பட்டதாரி மணமகள் தேவை. பெட்டி எண்: 1029.

• ஹிந்து மதத்தைச் சார்ந்த மகம் நட்சத்திரம் உயரம் 5' 1'', வயது 34 பி.எஸ்ஸி படித்து சென்னையில் மத்திய அரசு வேலையில் உள்ள மாநிறமான பெண்ணிற்கு நல்ல வேலையில் உள்ள ஹிந்து மதத்தைச் சார்ந்த வரன் தேவை. சாதி வேறுபாடில்லை. பெட்டி எண்: 1030.

வயது 44, மறுமணம் கவநாயுடு. ஓட்டுனர் பணி – மாத வருமானம் ரூ.500. 35–40 வயதுக்குள் படிப்பும், அழகும் குடும்ப நிர்வாகமும் நிறைந்த ஆதரவற்ற மணமகள் தேவை. விலங்கம் இல்லாத விதவை, விவாகரத்து பெற்றவர்களும், தாயாவதற்குத் தகுதி இழந்த பெண்ணும் விரும்பப்படுகிறது. எம்மதமும் சம்மதம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1031.

கௌண்டின்ய கோத்திரம். ரேவதி நட்சத்திரம். பி. ஏ., வயது 25. 5 அடி 3'' உயரம், சிறு குடும்பம், சில லட்சம் பெறுமான வீடு சென்னையில் உள்ளது. பாரத ஸ்டேட் வங்கியில் பணியாற்றும் நல்ல நிறமும், அழகுமுடைய மாதச் சம்பளம் ரூ. 1500 பெறும் வாலிபனுக்கு வங்கியில் வேலை செய்யும் குடும்பப் பாங்கான அழகான மணமகள் தேவை. தகப்பனார் பிராமணர் தாயார் பிராமணரல்லாதார். சாதி முக்கியமல்ல. பெட்டி எண்: 1032.

**திருமண மலர்ப்பகுதியில் விளம்பரம் செய்ய கட்டணம் ரூ. 30/– தொகையை 'மங்கையர் மலர்' என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பவேண்டும். ஒரு விளம்பரத்தில் ஒருவருக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தர வேண்டும். பதில் அனுப்புபவர்கள் ''விளம்பரதாரர், பெட்டி எண்.... c/o மங்கையர் மலர், கிண்டி, சென்னை-600032 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். தனிப்பட்ட கடிதப் போக்குவரத்து கிடையாது.**

வடமாள், வாதூல கோத்திரம், பூச நட்சத்திரம், 5' 8'' உயரம், வயது 32. பி. எஸ்ஸி படித்து சென்னையில் தனியார் கம்பெனியில் அக்கௌண்டண்டாக உள்ள மாதம் ரூ. 1100/- சம்பளம் வாங்கும் பையனுக்கு சென்னையில் வேலையில் உள்ள அல்லது சென்னைக்கு மாற்றலாகக் கூடிய வேலையில் உள்ள நல்ல பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். உட்பிரிவுகள் பாதகமில்லை. பெட்டி எண்: 1033

மார்வாடி பிராமணர், மைன்ஸ் இன்ஜினியர் மாதம் ரூ. 1400–க்கு மேல் சம்பாதிக்கும் 36 வயதுள்ள மனைவியை இழந்தவருக்கு கணவனை இழந்தவரோ அல்லது விவாகரத்து செய்தவரோ குழந்தைகள் இல்லாத பெண் தேவை. வரதட்சணை இல்லை. விருப்பமுள்ளவர்கள் விவரங்களுடன்




## என வாழ்த்துகிறது கரூர் வைஸ்யா பாங்க்

இவ்வாறு வாழ்த்துவதுடன் நின்றுவிடாமல், நமது மக்களின் ஒளிமயமான எதிர்காலத்திற்கென செயலும்புரிகிறது கரூர் வைஸ்யா பாங்க். வருங்கால வளமான வாழ்க்கைக்கு ஆதாரமான சேமிப்பு முயற்சிகளை பல வழிகளில் ஊக்குவிக்கிறது. விவசாயம், தொழில்துறை, சுயவேலைவாய்ப்பு, மற்ற பயனுள்ள நடவடிக்கைகளுக்கு கடனுதவி அளித்தும் உதவுகிறது. வளம் பெருக்கும் பணியில் ஈடுபட்டுள்ள நாங்கள், இந்த தீபாவளித் திருநாள் கோலாகலம் என்றும் நிலைத்திருக்குமாக என்று வாழ்த்துத் தெரிவிக்கிறோம்.



கரூர் நகரில் சமீபத்தில் திறந்துவைக்கப்பட்ட எமது புதிய மத்திய அலுவலகக் கட்டிடம்.

கரூர் வைஸ்யா
வங்கியின் மனமார்ந்த
தீபாவளி வாழ்த்துக்கள்!



**கரூர் வைஸ்யா பாங்க் லிமிடெட்**

பதிவு & மத்திய அலுவலகம்: கரூர்-639 002

அன்னியச் செலாவணியில் வர்த்தகம் புரிய
அங்கீகாரம் பெற்றவர்கள்

G. வெங்கடேசம், சேர்மன்

CO.M83. 25 Tm

போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1034.

கௌசிக கோத்திரம், ரோஹிணி நக்ஷத்திரம் 32 வயது. 5' 6'' உயரம், பி.எஸ்ஸி, அரசுடைமை வங்கியில் மாதம் ரூ. 1200/- சம்பாதிக்கும் பிராமண பையனுக்கு அழகு குணம், ஆரோக்ய மிக்க குடும்ப பாங்கான வேலைக்குப் போகிற / போகக் கூடிய 28 வயதுக்கு மேற்படாத மணமகள் தேவை. எப்போதாவது வரும் லேசான மயக்கத்தைத்தடுக்க பையன் மருந்து சாப்பிட்டு வருகிறான். கடந்த இரண்டரை வருடங்களாக இந்த உபத்திரவம் சிறிதும் இல்லை. ஜாதகம் புகைப்படத்துடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 1035.

''வயது 30, அரசாங்க வங்கியில் ஆபிஸராகப் பணிபுரியும் பரந்த மனப்பான்மையுடைய பட்டதாரி ஐயர் பையனுக்கு குடும்பப் பாங்கான படித்த தெய்வ பக்தியுள்ள, அழகான பிராமணப் பெண் தேவை. வரதட்சிணை கிடையாது. புகைப்படம் அவசியம். போட்டோவுடனும் மற்ற விபரங்களுடனும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1036.

''Wanted Suitable alliance without encumberance for Vadama Brahmin Divorcee girl 33. Hails from Respectable family. Fair and accomplished. Send details to Box No. 1037

''வடமான் — ஶ்ரீவத்ஸ கோத்திரம் — உத்திரட்டாதி நட்சத்திரம், 25 வயதுள்ள நல்ல குடும்பத்திலுள்ள பெண்ணிற்கு 28—30 வயதுள்ள நல்ல வேலையிலுள்ள வரன் தேவை. பெண் பி. யூ. சி. வரை படித்திருக்கிறாள். வீட்டு வேலையில் நல்ல தேர்ச்சியுண்டு. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1038.

மாதம் ரூ. 600/- வாடகை வரும் கட்டிட சொத்துடைய வயது 24, துளுவ வேளாள இளம் வழக்கறிஞருக்கு குடும்பப் பாங்கான வசதி படைத்த மணப்பெண் தேவை. முதலியார் / பிள்ளை / நாயக்கர் பட்டங்களுடைய பெற்றோர்கள் அசைவ உணவை விரும்பாத அகமுடையார் வன்னிய சமூகத்தினர்களும் மணப்பெண் பற்றி முழு விபரங்களை அனுப்பவும். பெட்டி எண்: 1039.

ஶ்ரீவத்ஸ கோத்திரம், தெலுகாண்யம், தெலுங்கு பிராமணன், 38 வயது. ஒரே மகளாக உள்ள மணப்பெண்ணிற்கு மணமகன் தேவை. மனைவியை இழந்தவர்களும் உட்பிரிவுகளும் பரவாயில்லை. சுத்த ஜாதகம். பெட்டி எண்: 1040.

''அழகும் குணமும் நற்பண்புமுள்ள — வயது 23. கிருத்திகை நட்சத்திரம். ரிஷப ராசி. பி. ஏ. வரை படித்த குடும்பப் பணிகளில் தேர்வு பெற்ற பெண்ணிற்கு — சைவ உணவு பழக்கமுள்ளவரன் தேவை தகப்பனார் சைவப்பிள்ளை தாயார் ஐயங்கார் பிராமணர். இதுபோல் கலப்புத் திருமண குடும்பத்தாரிடமிருந்தோ மற்றும் படித்து நல்ல வேலையிலுள்ள பிள்ளைகளிடமிருந்தோ விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகிறது.'' பெட்டி எண்: 1041.

27 வயது எஸ்.பி.எம்.மில் எழுத்தாளர். மாத சம்பளம் ரூ. 1000 தொண்டைமண்டல முதலியார் மதத்தில் உள்ள படித்த அழகுள்ள பணக்கார இடத்து கன்னிகையாக இருப்பதுடன் குடும்ப வேலைகள் நன்கு செய்யத் தெரிந்தவர்கள் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1042.

பி. ஈ. படித்து, யு. எஸ். ஏ. வில் (Green Card holder) வேலையில் உள்ள பாரத்வாஜ கோத்திரம் 37 வயது, தென்கலை ஐயங்கார் பையனுக்கு பொருத்தமான 28—லிருந்து 30 வயதிற்குள் பி. எஸ்ஸி., எம். பி. பி. எஸ்., போன்ற படித்த பெண் தேவை. வடகலை ஆனாலும் பரவாயில்லை. பெட்டி எண்: 1043.

சென்னையில் பிரபல தனியார் நிறுவனத்தில் எழுத்தர் வேலை பார்க்கும் மாதம் ரூ. 500 நல்ல அழகு 5½ அடி உயரம், ஒல்லியான 28 வயது நல்ல குணமுள்ள பையனுக்கு சென்னையில் வேலை பார்க்கும் நல்ல குடும்பத்தைச் சேர்ந்த பெண் கோரப்படுகிறது. பையன் இந்து பிற்பட்ட வகுப்பு, சைவம். இந்து எந்த சாதியராயினும் சம்மதம். பெட்டி எண்: 1044.

தமிழ் ஐயர், அஷ்டசஹஸ்ரம், [illegible] கோத்திரம், ஆயில்யம், வயது 28. எஸ். எஸ். எல். சி. படித்த பெண்ணுக்கு நிரந்தர உத்தியோகத்திலிருக்கும் பரந்த மனப்பான்மை கொண்ட மாப்பிள்ளை தேவை. வேறு எந்த உட்பிரிவும் சம்மதம். பெட்டி எண்: 1045.

''பரஹசரணம், காச்யபகோத்ரம், உத்திராட நட்சத்திரம், 27 வயதாகும் உத்தியோகத்திலுள்ள (மாதம் ரூ. 900). பிள்ளைக்கு அழகும் நிறமும் உள்ள பெண் (18—23) தேவை. பிள்ளைக்கு ஜாதகம் இல்லை. பெண்ணின் ஜாதகம் புகைப்படத்துடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 1046.

சொந்தமாகத் தொழில் புரியும் மருத்துவ குடும்பத்தைச் சேர்ந்த 30 வயது நிரம்பிய எம். பி. பி. எஸ். டாக்டருக்கு நல்ல குணமும் அழகும் நிரம்பிய மணமகள் தேவை. பெட்டி எண்: 1047.

ஆயிரக்கணக்கான குடும்பங்கள் காலங்காலமாக
பயன்பட்டுவரும் கிராம்புத் தைலத்தின்
நன்மைகளை ப்ராமிஸில் கண்டுணர்ந்தனர்.

# கிராம்புத் தைலம் கொண்ட இணையற்ற டூத்பேஸ்ட் ப்ராமிஸ்

நீங்களும் ஏன் அதை உபயோகிக்கக்கூடாது?






**ப்ராமிஸ்**

பற்சிதைவிலிருந்து பாதுகாக்கிறது,
வாய்க்குப் புத்துணர்ச்சி
தருகிறது மற்றும்
துர்நாற்றத்தை அகற்றுகிறது.




பல்ஸாரா தயாரிப்பு



ஆரோக்கியமான பற்கள்,
ஈறுகள் மற்றும் புத்துணர்ச்சிமிக்க
மூச்சுக்கு ப்ராமிஸ்.

CHAITRA-BLS-453-R_TAM

# லட்சியப் பாதையில் ஒரு துறவி!

இதுவரை சமய வரலாற்றிலேயே இல்லாத வகையில் ஒரு பெண் ஒரு மடத்தின் சன்னிதானப் பொறுப்பை ஏற்றிருக்கிறார். புதுக்கோட்டையில் 'திலகவதியார் மடம்' என்ற ஒன்றை நிறுவி அதன் தலைமைப் பொறுப்பை ஏற்றிருக்கிறார் சாமி பிருந்தா தேவி.

-: மஞ்சுளா ரமேஷ் :-



சந்நிதானம் என்றாலே, பார்க்கும்போது பயத்தை ஏற்படுத்தி, பத்தடி தள்ளி நிற்க வைத்தே பேசி, நம்மை விட இவர்கள் அப்பாற்பட்டவர்கள் என்று ஓர் உணர்வையே ஏற்படுத்தி விடுவார்கள். ஆனால் இந்த அம்மையாரின் எளிமையும், முற்போக்கும் சிந்தனைகளும் ஆச்சரியப்பட வைக்கிறது. இந்தத் துறையில் இப்படியும் ஒருவரா?' என்ற ஆச்சரியம்தான் ஏற்படுகிறது இவரைப் பார்க்கும்போது.

''பூர்வாசிரமத்தில் என்னுடைய சொந்த ஊர் புதுக்கோட்டைக்கு அருகில் உள்ள திருக்கோகர்ணம். மிகவும் செல்வம் வாய்ந்த அம்மா, அப்பாவுக்கு ஏழாவது செல்லப் பெண்ணாகப் பிறந்தேன். செல்வத்தில் புரண்டு கொண்டிருந்த எனக்கு நினைத்ததெல்லாம் நடக்க வேண்டும். நான் சொல்வதை மற்றவர்கள் பின்பற்ற வேண்டும் என்று அடம். இல்லையென்றால் உண்ணாவிரதம்தான். செல்லப் பிள்ளையான நான் மெலிந்துவிடுவேனோ என்றுபயந்துகொண்டே நான் கேட்டதையெல்லாம் வாங்கிக் கொடுத்து விடுவார்கள்....''

ஏழு வயது வரை வீட்டில் அருமைப் பெண்ணாக வளர்ந்த இவரைத் தெய்வம் இசைஇருப்ப விரும்பியது போலும். ஒரு நாள் கோயிலுக்குப் போயிருந்த இவரை அழைத்து ஒரு சாமியார் நாக்கில் ஏதோ தடவினாராம். அன்று முதலே சமயத் துறையில் ஈடுபாடு ஏற்பட்டு, தன் பிடிவாதங்கள் நீங்கி, ஒருவித வித்தியாசமான தன்மைக்கு ஆட்பட்டு விட்டாராம்.

''அதற்கப்புறம்தான் பள்ளிக்குப் போக ஆரம்பித்தேன். கொஞ்சம் கொஞ்சமாக சமயங்களைப் பற்றி மேடைகளில் பேசவும் ஆரம்பித்து விட்டேன். முதலில் இதற்கெல்லாம் வீட்டில் எதிர்ப்பு இருக்கத்தான் செய்தது. இருக்கவே இருக்கிறது என்னுடைய பிடிவாத குணம். என்னுடைய பேச்சுக்களைக் கேட்ட சச்சிதானந்தம் பிள்ளை அண்ணாமலை யுனிவர்ஸிடியில் பி.ஓ.எல். படிக்கச் சொன்னார். அங்கு தத்துவங்களைப் படித்தவள் பின்னர் தர்க்க சாஸ்திரங்களையும் படித்தேன்.

அப்போதிருந்தே மனதில் ஒரு நமைச்சல். விவேகானந்தரின் படங்களைப் பார்க்கும் போது, அவருடைய உரைகளைப் படிக்க நேரும்போதெல்லாம் இது அதிகமாகும். அவரைப் போலவே மேலை நாடுகளுக்கெல்லாம் சென்று இந்துமதத்தின் சிறப்புக்களைச்சொல்ல வேண்டும் என்ற உத்வேகம். அந்த உந்துதலினால்தான் பதினெட்டு வயதுக்கெல்லாம் என்னுடைய படிப்புக்களை முடித்துக்கொண்டு முழு நேரச் சமயச் சொற்பொழிவாளராக ஆகிவிட்டேன்.''

பதினெட்டு வயதில் பேச்சில் மும்முரமாக ஈடுபட்ட இவர் அமெரிக்கா, லண்டன், இலங்கை, சிங்கப்பூர், மலேஷியா எனத் தான் நினைத்தபடி வெளி நாடுகளுக்கெல்லாம் சென்று சமயக் குரல் எழுப்பியிருக்கிறார். இளம் வயதிலேயே இப்படியோர் சமயப் பற்று இருக்கலாம்தான். ஆனால் துறவியானது ஒரு வித்தியாசமான செய்கை தானே. இது எப்படி....? அதை அவரே நகைச் சுவையாகச் சொன்னார்.

''நான் பேசுவதெல்லாம் தத்துவம்தான். 'ஆசை அறுமின்காள், ஆசை அறுமின்காள்—ஈசனொடும் ஆசை அறுமின்காள்' என்று வாய் சொல்லிக் கொண்டிருக்கும். ஆனால் கட்டுவது கையகல ஜரிகைப் பட்டுப் புடவைதான்.

காதிலும், கையிலும் வைரமும் ப்ளூஜாக்கரும தான். கைநிறைந்த தங்க வளையல்கள்தான்.

ஒரு முறை புதுக்கோட்டையில் என் பேச்சைக் கேட்ட ஆசார்யாள் அவர்கள், பிறகு பேசும்போது, 'சில பேர் ஊருக்கு மட்டும் உபதேசம் செய்வார்கள். தாங்கள் மட்டும் வித்தியாசமாக இருப்பார்கள்' என்றார்கள். எனக்கு மனசில் நேராகப் போய் அது தைத்தது. அப்பொழுதே என்னுடைய தோற்றம் எனக்கு உறுத்த ஆரம்பித்து விட்டது. ஆனாலும் ஆசை அவ்வளவு சீக்கிரம் விட்டுப் போய்விடுமா?

காமாட்சி அம்மன் கோவிலிலே அவரை வணங்கி எழுந்தேன். மனசெல்லாம் குழப்பம். கண்ணில் கங்கை.

''விடுவதை விட்டால் வருவது தானே வரும். இதற்குப் போய் என்ன அழுகை?'' என்றார்.

மேலும் குழப்பம்தான் மிஞ்சியது. நேராகத் தபாவனம் ஞானானந்த சுவாமிகளிடம் போய் அடைக்கலமானேன். 'அடேடே, நம்மோட சேர வந்துவிட்டான்' என்றார் அவரும். அப்போதும் குழப்பம் தீரவில்லை. வீட்டுக்குப் போனேன். தற்கொலை செய்து கொள்ள வேண்டும், இது என்ன வாழ்க்கை, எப்படிப் போவது என்று தெரியவில்லை என்று அழுகை, குழப்பம்... பைத்தியமே பிடித்து விடப் போகிறது என்றுதான் பயந்து- கொண்டு இருந்தேன்.

அப்போதுதான் அந்த ஊருக்கு வந்த விபூதி சாமியார் என்னை அழைத்தார். இருக்கிற சாமியார்கள் போதாதென்று இவர் வேறு என்று கொஞ்சம் கோபத்தோடுதான் சென்றேன். 'ரெண்டு பெரியவங்க சொன்னாங்களே? இன்னும் உனக்குப் புரியவில்லை?' என்றார். அந்தக் கணமே என் மனசில் இருந்த கவலை. குழப்பமெல்லாம் நீங்கிப் போச்சு.... காவி எடுத்துக் கட்டிக்கொண்டேன்....''

இப்படிச் சுவையான பூர்வாசிரமக் கதையைச் சொல்லி முடிக்கிறார் இவர். அதற்குப் பிறகு இவர் செய்த சாதனைகள் ஏராளம். முத்து லெட்சுமி ரெட்டியின் நினைவாக அனாதை இல்லம் ஒன்றை நிறுவி ஏராளமான ஏழைப் பெண்களுக்குக் கல்விக் கண்ணைத் திறந்தார். இந்தியாவிலேயே இல்லாத வகையில் ஷண்முகக் கோயிலை எழுப்பி நல்ல முறையில் கும்பாபிஷேகம் செய்தார். மீனாட்சி புரத்தில் குழப்பங்கள் ஏற்பட்டபோது எல்லாச் சந்நிதானங்களையும் கூப்பிட்டு. ஹரிஜனங்களுடன் பேசவைத்து ஒரு பெரிய மகாநாட்டை நடத்திக் காட்டினார்.

அந்த மகாநாட்டுக்குப் பிறகுதான் எல்லோருக்குமே தோன்ற ஆரம்பித்து விட்டது. இவ்வளவு அரும் பெரும் காரியங்களைச் சாதிக்கும் இவர், ஏன் 'தனக்கென ஒரு சந்நிதானத்தை ஏற்படுத்தி' என் ஒரு பரம்பரையை உருவாக்கக் கூடாது என்பதுதான் அது எல்லோரும் வற்புறுத்தி. காஞ்சிப் பெரியவர்களின் பூரண அருளாசியுடன் அந்த வகையில் சென்ற வருடம் நிறுவியது தான் 'திலகவதியார் திருவருள் ஆதீனம்! அதன் முதல் தலைவராக சமய வரலாற்றிலேயே முதல் பெண்மணியாக இப் பெருமாட்டி பட்டம் பெற்றுள்ளார்.

''பொதுவாக உங்களைப் போன்ற சன்னிதானங்கள் மக்களிடமிருந்து விலகியே இருக்கிறார்கள். நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?'' என்று கேட்டதற்கு ஆணித்தரமாகப் பதில் சொல்கிறார்.

''சமுதாயத்தைப் புறக்கணித்து விட்டுச் சமயம் வளர வேண்டும் என்று நினைத்தால் அது நிச்சயம் நடக்காத காரியம். மக்களோடு கலந்து, அதன் சுக துக்கங்களை உணர்ந்து, அதற்குத் தீர்வு காண முயலும் சமயமே தழைத்தோங்க முடியும்.

அந்த வகையில் சமுதாயப் பணியினை நிறையச் செய்ய வேண்டும் என்று நினைத்திருக்கிறேன். முதலில் சமயப் பணி வழி, சமுதாயப் பணி தொடங்க வேண்டும். 'திலகவதியார் திருவருள் மன்றம்' என்ற ஒன்றை ஒவ்வொரு ஊருக்கும் நிறுவப் போகிறேன். அந்த மன்றம் தினமும் ஒரு மணி நேரம் கோயிலுக்குச் செல்லுதல், அங்கு கோயிலைச் சுத்தப்படுத்துதல், தெய்வீகப் பாடல், பிறகு கோயிலுக்கு வருபவர்களுக்கு உதவி என அவரவர் மனத்தை உயர்த்திக்கொள்ள வழி வகை செய்ய வேண்டும். இப்படிப் பயிற்சிக்கு ஆளாகுபவர்களே மனதில் நேர்மையும், தெய்வ சிந்தனையும், பொது நலத்தில் ஆர்வமுள்ளவர்களாகவும் ஆவார்கள்

இத்தகைய தூய்மையான தொண்டுள்ளங்களை வைத்துச் சமுதாய சேவையில் இறங்க வேண்டும். நலிந்த மக்களுக்கு, உதவியற்ற மக்களுக்கு உதவி செய்ய வேண்டும். இதுதான் நம் தமிழ் நாட்டைப் பொருத்தவரை நான் நினைத்திருப்பது.

உலக அளவில் 'இந்து மகளிர் பேரவை' ஒன்றை நிறுவி, எங்கெல்லாம் இந்துக்கள் இருக்கிறார்களோ அவர்களை எல்லாம் உணர்வால் ஒன்று படுத்த விரும்புகிறேன். சிங்கப்பூர், மலேசியாவில் ஒவ்வொரு வீட்டிலும் தேவாரம், திருவாசகம் ஒலிக்கிறது. ஆனால் நம் வீட்டுக் குழந்தைகள் கலாசாரத்தால் தடம் புரண்டு போய்க் கொண்டிருக்கிறார்கள். இவர்களை யெல்லாம் ஒன்றுபடுத்தி நம் சமயத்தின் உயர்வை எடுத்துக் கூறி அவர்களை சரியான வழிக்குக் கொண்டு வர வேண்டும் என்பதுதான் என்னுடைய அவா.

மிகப் பெரும் லட்சியங்களைத் தன் வாழ்நாளில் குறிக்கோளாகப் பிரதிக்ஞைசெய்து கொண்டுள்ளார் இவர். 'பெண்மையே உலகிற்கு வழிகாட்டி. பெண்களால்தான் உலகை நாட்டை, கலாசாரத்தைக் காப்பாற்ற முடியும். எனவே அவர்கள் தன்னை உணர்ந்து செம்மைபட வாழ வேண்டும். என்கிறார் ஸ்ரீலஸ்ரீ சிவ பிருந்தா தேவி.

வண்ணப்படம்: பால்ராஜ்







இது போல நீங்களும் தைக்கலாமே!

1. பெடல் புஷர்
2. பார்ட்டி ப்ராக்
3. ஸ்பார்க்கிளிங் பாபா சூட்

நன்றி:
FLORA, 38, Pondy Bazaar, T. Nagar, Madras-17.

